ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்

# மாருதி விஜயமென்னும்

# ஹநுமத்பராக்கிரமம்

இஃது

சில பாகவதோத்தமர்கள் வேண்டுகோட்படி,

முத்தமிழ் ரத்நாகரம்

## தி. பானுகவியவர்களால்

இயற்றப்பெற்று,

1-ம் பதிப்பு.




காபி 1000.

புலிப்பாக்கெட் பஞ்சாங்க கிரந்த கர்த்தாவாகிய

## மு. இராஜு முதலியாரவர்களால்

தமது சென்னை, புரசை,

ரூபி, அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது

1912.

# முகவுரை.

---

சட்டகமில்லாத் தனிப்பெருங் கடவுளை வழிபட்டு அபீஷ்டங்களை யடைய விரும்பும் மனுஷ்ய சரீரிகளான ஜீவர்களின் பக்குவத்துக்குத் தக்கபடி இறைவனும் அவனருளைப்பெற்ற மேலோர்களும் எல்லாவித வுடற்பகுதிகளிலும் கடவுளை வழிபாடு முறைகளையும் அவ்வழிபாட்டாற் கிடைக்கும் பிரயோசனங்களையும் வேதாகமங்களில் செவ்வையாக விளக்கியிருக்கின்றார்கள் அம்முறையில்:

தேவவடிவத்தில் திரிமூர்த்தியாதி வடிவங்களையும், மனிதவடிவத்தில் ராமகிருஷ்ணாதி வடிவங்களையும், விலங்குவடிவத்தில் ஆஞ்சனேயராதி வடிவங்களையும், புள்வடிவத்தில் கருட சரபாதி வடிவங்களையும், நீர்வாழ்சாதி வடிவத்தில் மச்ச கூர்மாதி வடிவங்களையும், ஊர்வன வடிவத்தில் ஆதிசேடன் முதலிய வடிவங்களையும், தாவரவடிவத்தில் அரசு மூங்கில் முதலிய வடிவங்களையும், உறழ்ந்த அல்லது கலந்த வடிவத்திற் கணபதி நரசிங்காதி வடிவங்களையும் பரம்பொருள் வடிவமாகத் தியானித்து அந்தந்த வடிவமாக விளங்கும் அவ்வொப்பற்ற பெருமானது கருணையை அன்பர்கள் பெற்று வருகின்றார்கள்.

மந்திர தந்திர முறைகளில் தவறாது மேற்காட்டிய வெந்த வுருவமாகவேனும் இறைவனை யுபாஸிப்பவர்கள் அந்த வுருவுடைய கடவுளின் பராக்கிரமங்களை இடை

# முகவுரை.

விடாது சிந்தித்தால் அம்மூர்த்தியா லாகவேண்டிய காரியம் எளிதிற் கைகூடுமென்பது திண்ணம். ஆதலால் ஆஞ்சனேயோ பாசகர்களின் அனுகூலத்துக்காக அவரியற்றிய வற்புத பராக்கிரமங்களை யொருங்குதிரட்டி மாருதிவிஜய மேன்னும் அனுமத் பராக்கிரமமெனப் பெயரிட்டு வெளிப்படுத்தி இருக்கின்றேன் இதனுடன் அனுமத் கவசத்தையுஞ் சேர்த்திருக்கின்றேன்.

யான், திரிமூர்த்திபரனை இறைவனை யெவ்வகையானேனு முபாசிப்பவர்களிடத்து அன்பு பாராட்டுங் கொள்கையை யுடையவனாக நிற்றல், வேதாகமங்கள் ஒரே கடவுளையே பலவாறாகக் கூறியுள்ளனவென்னுந் துணிபினாலாதலின் எனதிச்செயலினை ஆஸ்திகரனைவரும் அங்கீகரிப்பார்கள் என்பது திண்ணம்.

இங்ஙனம்

**ம. தி. பானுகவி.**



பஞ்சமுகி அநுமான்.

ஸ்ரீ

# பஞ்சமுகீ ஹநுமத் கவசம்.

---

ஸ்ரீகணேசாயநம:

அதபஞ்சமுகீ ஹநுமத்கவச ப்ராரப:

ஓம் அஸ்ய ஸ்ரீபஞ்சமுகீ ஹநுமத் கவச ஸ்தோத்ர மந்த்ர

ப்ரஹ்மா ஹருஷி: [ஸ்ய

காயத்ரிச்சந்த

ஸ்ரீ ஹநுமான் தேவதா,

ராம்பீஜம்,

மம்ஶக்தி

சந்த்ர இதி கீலகம்,

ஓம் ரௌம் கவசாய ஹும்,

ஹ்ரௌம் அஸ்த்ராயபட்,

ஈச்வர உவாச அத,

த்யானம் ப்ரவக்ஷ்யாமி,

ச்ருணு ஸர்வாங்க சுந்தரம்,

யத்க்ருதம் தேவதேவே சித்யானம் ஹநுமத

ப்ரியம்,

பஞ்சவக்தரம்மஹாபீமம்கவி யூதஸமன்விதம் பாஹுபிர்

தசபிர்யுக்தம்,

ஸர்வ காமார்த்த ஸித்திதம்:

பூர்வந்து வானரம் வக்தரம் கோடிசூர்ய ஸமப்ரபம்:

தம்ஷ்ட்ரா கராளவதனம்:

ப்ருகுடி குடிலேக்ஷணம்:

# பஞ்சமுகீ ஹனுமத் கவசம்.

அஸ்யைவ:
தக்ஷிணம்வக்த்ரம்
நாரஸிம்ஹம் மஹாத்புதம்,
அத்யுக்ர தேஜோவபுஷம்
பீஷணம்:
பயநாசனம்,
பச்சிமேகாருடம் வக்த்ரம்,
வக்ரதுண்டம் மஹாபலம்,
ஸர்வநாகப்ரசமனம்:
ஸர்வபூதாதிக்ருந்தனம்,
உத்தரே,
ஸௌகரம்,
வக்தரம்,
க்ருஷ்ணதீப்த நபோமயம்
பாதாளேஸித்த வேதாள ஜ்வரரோகாதி,
க்ருந்தனம்,
ஊர்த்தவம்,
ஹயானனம்,
கோரம்,
தானவாந்தகரம்,
பரம் யேனவக்த் ரேணவிப்ரேந்த்ர,
தாடகாயா மஹாஹவே துர்கதேசசரணம் தஸ்ய,
ஸர்வசத்ரு,
ஹரம்பரம் த்யாத்வா,
பஞ்சமுகம் ருத்ரம்,

# பஞ்சமுகீ ஹனுமத் கவசம்.

ஹனுமந்தம்,
தயாநிதிம்,
கட்கம் த்ரிசூலம் கட்வாங்கம் பாசமங்குச பர்வதம் முஷ்
டௌது மோதகௌ வ்ருக்ஷம்,
தாரயந்தம் கமண்டலும் பிந்திபாலம் க்ஞானமுத்ராம்
தசமம் முனிபுங்கவ:
ஏதான்யாயுதஜாலானி,
தாரயந்தம்:
மஹாவஹம்
திவ்யமாலாம் பரதரம் திவ்யகந்தானு லேபனம் ஸர்வைச்
மயம்: [வர்ய:
தேவம் ஹனுமத் விச்வதோமுகம்:
பஞ்சாஸ்யமச்யுத மனேக விசித்ரவர்ணம்
வக்த்ரம் ஸசங்கவிப்ருதம்
கவிராஜவீர்யம் பீதாம்பராதி
முகுடைரபி சோபிதாங்கம்
பிங்காக்ஷ மஞ்சனிசுதம்
ஹ்யனிசம் ஸ்மராமி
மர்க்கடஸ்ய மஹோத்ஸாஹம்
ஸர்வசோக விநாசனம்
சத்ருஸம்ஹாரகம்
சைதத்கவசம்
ஹ்யாபதம் ஹரேத்,
ஓம் ஹரிமர்க்கட மர்க்கடாய ஸ்வாஹா:
ஓம் நமோபகவதே பஞ்சவதனாய பூர்வகபிமுகாய:

# பஞ்சமுகீ ஹநுமத் கவசம்.

ஸகலசத்ரு ஸம்ஹாரணாய ஸ்வாஹா,
ஓம் நமோபகவதே பஞ்சவதனாய உத்தரமுகாய ஆதிவரா
ஸகலஸம்பத்கராய ஸ்வாஹா, [ஹாய,
ஓம் நமோபகவதே பஞ்சவதனாய ஊர்த்வமுகாய,
ஹயக்ரீவாய ஸகலஜன வஸ்யகராய ஸ்வாஹா.
இதிமூலமந்த்ர (இது மூலமந்திரம்)

ஓம் அஸ்யஸ்ரீ பஞ்சமுகீ ஹநுமத்கவச ஸ்தோத்ர மந்த்ரஸ்ய ஸ்ரீராமச்சந்திர இர்ஷி அநுஷ்டுப்ச்சந்த ஸ்ரீ ராமச்சந்த்ரோ தேவதா ஸீதா இதிபீஜம், ஹநுமானிதி சக்தி: ஹநுமத் ப்ரீத்யர்த்தே ஜபேவினியோக புனர்ஹநுமான் இதிபீஜம்: ஓம் வாயுபுத்ர இதிசக்தி அஞ்சனி ஸுதாயேதி கீலகம், ஸ்ரீராமசந்த்ர வரப்ரஸாத ஸித்யர்த்தே ஜபே வினியோக ஓம் ஹம் ஹநுமதே அங்குஷ்டாப்யாம் நம ஓம் வம் வாயுபுத்ராய தர்ஜனீப்யாம்நம ஓம் அம் அஞ்சனீஸுதாய மத்யமப்யாம்நம ஓம் ராம் ராமதூதாய அநாமிகாப்யாம்நம ஓம் ரும் ருத்ர மூர்த்தயே கனிஷ்ட காப்யாம் நம: ஓம் ஸம் ஸீதா சோக நிவாரணாய கர தல கரப்ருஷ்டாப்யாம் நம: ஓம் அஞ்சனீசுதாய ஹ்ருதயாயநம ஓம் ருத்ர மூர்த்தயே சிரஸேஸ்வாஹா ஓம் வாயுபுத்ராய சிகாயை வஷட் ஓம் அக்னிகர்ப்பாய கவசாயஹும் ஓம் ராமதூதாய நேத்ர த்ரயாய வௌஷட், ஓம் பஞ்சமுகீ ஹநுமதே அஸ்த்ராயபட், அதத்யானம் ஸ்ரீராமதூதாய ஆஞ்சனேயாய வாயுபுத்ராய மஹாபலாய ஸீதா சோக நிவாரணாய மஹா பல ப்ரசண்டாய லங்காபுரீதகனாய பால்குனஸகாய கோலாஹல ஸகல ப்ரஹ்மாண்ட விச்வரூபாய ஸப்த ஸமுத்ர

# பஞ்சமுகீ ஹநுமத் கவசம்.

நிரந்தராலங்கிதாய பிங்கல நயனாயாமித விக்ரமாய ஸூர்ய பிம்பல ஸேவாதிஷ்டித நிராக்ரமாய ஸம்ஜீவின்யா அங்கத லக்ஷ்மண மஹாகபி ஸைன்ய ப்ராணதாத்ரே தசக்ரீவ வித் வம்ஸனாய ராமேஷ்டாய ஸீதாஸஹ ராமசந்த்ர வரப்ர ஸாதாய ஷட்ப்ரயோகாகம பஞ்சமுகீஹநுமன் மந்த்ரஜபே விநியோக. ஓம் ஹரி மர்க்கட மர்க்கடாய வம் வம் வம் வம் வம் பட் ஸ்வாஹா. ஓம் ஹரி மர்க்கட மர்க்கடாய பம் பம் பம் பம் பம் பட் ஸ்வாஹா ஓம் ஹரி மர்க்கட மர்க்கடாய கம் கம் கம் கம் கம் மாரணாய ஸ்வாஹா. ஓம் ஹரி மர்க்கட மர்க்கடாய டம் டம் டம் டம் டம் ஸ்தம்பனாய ஸ்வாஹா. ஓம் ஹரி மர்க் கட மர்க்கடாய டம் டம் டம் டம் டம் ஆகர்ஷண ஸகல ஸம்பதகராய பஞ்சமுகீஹநுமதே ஸ்வாஹா. ஓம் உச்சாட னே டம் டம் டம் டம் டம் கூர்ம மூர்த்தயே பஞ்சமுகி ஹநுமதே பரயந்த்ர தந்த்ர உச்சாடனாய ஸ்வாஹா, ஓம் கம் கம் கம் கம் ஙம சம சம் சம் ஜம் ஞம் டம் டம் டம் டம் ணம் தம் தம தம் தம் நம் பம் பம் பம் பம் மம் யம் ரம் லம வம் ஶம் ஷம் ஸம் ஹம் க்ஷம் ஸ்வாஹா, இதிதிக் பந்த. ஓம் பூர்வகபிமுகே பஞ்சமுகீ ஹநுமதே டம் டம் டம் டம் டம் ஸகலசத்ரு ஸம்ஹாரணாய ஸ்வாஹா, ஓம் தக்ஷி ணமுகே பஞ்சமுகி ஹநுமதே கராளவதனாய நரஸிம் ஹாய ஹ்ரூம் ஹ்ரூம் ஹ்ரூம் ஹ்ரூம் ஹ்ரூம் ஸகல பூதப் ரேததமனாய ஸ்வாஹா, ஓம் பச்சிமமுகே கருடாஸனாய பஞ் சமுகீ ஹநுமதே மம் மம் மம் மம் மம் ஸகலவிஷ ஹராய ஸ்வாஹா, ஓம் உத்தரமுகே ஆதிவராஹாய லம் லம் லம் லம் லம் ந்ருஸிம்ஹாய, நீலகண்டாய, பஞ்சமுகீ ஹநுமதே

# பஞ்சமுகீ ஹநுமத் கவசம்.

ஸ்வாஹா: அஞ்சனீசுதாய வாயுபுத்ராய மஹாபலாய ராமே ஷ்ட பால்குன ஸகாயாய ஸீதாசோக நிவாரணாய லக்ஷ் மண ப்ராண ரக்ஷகாய கபிஸைன்ய ப்ரகாசாய தசக்ரீவாப மானதஹனாய ஸ்ரீராமசந்த்ர வரப்ரஸாதகாய மஹாவீர் யாய ப்ரதம ப்ரஹ்மாண்ட நாயகாய பஞ்சமுகி ஹனுமதே பூத ப்ரேத பிசாச ப்ரஹ்ம ராக்ஷஸ சாகினி டாகினி அந் தரிக்ஷ க்ரஹபரயந்த்ர பரமந்த்ர பரதந்த்ர ஸர்வக்ரஹ உச் சாடனாய ஸகலசத்ரு ஸம்ஹாரணாய பஞ்சமுகி ஹனுமத் வரப்ரஸாதக ஸர்வரக்ஷகாய ஜம் ஜம் ஜம் ஜம் ஜம் ஸ்வாஹா:

இதம் கவசம் படித்வாது மஹாகவசம் படேந்நர: ஏகவாரம் படேந்நித்யம் ஸர்வசத்ரு நிவாரணம், த்விவாரந்து படேந் நித்யம் ஸர்வசத்ரு நிவாரணம், த்ரிவாரம் படேந்நித்யம் ஸர்வஸம்பத் கரம்பரம், சதுர்வாரம் படேந்நித்யம் ஸர்வ ஜன வசீகரம், பஞ்சவாரம் படேந்நித்யம் ஸர்வரோக நிவா ரணம், ஷட்வாரந்து படேந்நித்யம் ஸர்வதேவ வசீகரம், ஸப்தவாரம் படேந்நித்யம் ஸர்வகாமார்த்த ஸித்திதம், அஷ்டவாரம் படேந்நித்யம் ஸர்வஸௌபாக்ய தாயகம், நவ வாரம் படேந்நித்யம் ஸர்வைச்வர்ய ப்ரதாயகம், தசவாரம்ப டேந்நித்யம் த்ரைலோக்ய க்ஞானதர்சனம், ஏகாதசம் படேந்நித்யம் ஸர்வஸித்திம் லபேந்நர: கவசம் ஸ்ம்ருதி மாத்ரேண மஹாலக்ஷ்மீ பலப்ரதம்.

இதி ஸ்ரீசிந்தாமணி ராமபத்ரே
சதர்ஸகலம் ஹிதாயாம்
பஞ்சமுகி ஹனுமத்கவசம்.

ஸம்பூர்ணம்.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# பராக்கிரம அட்டவணை.

பக்கம்.

# பராக்கிரம அட்டவணை.





ஸ்ரீராமஜயம்.

ஸ்ரீசீதாராமாஞ்சனேயாய நம:

# மாருதி விஜயமென்னும்
# அனுமத் பராக்கிரமம்.

---

## க-வது.

## சூரியாதி தேவகம்பன பராக்கிரமம்.

---

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

*சீரா ராழி யொன்றுடைய தெய்வத் தேர்மேல் வருமுதயன்*
*ஏரார் மேனி தனைக்காணூ வினித்தகனி யென் றுளத்தெண்ணித்*
*தாரா ரவனைப்பிடித் துண்ணத் தாவ வவனு மமரர்களு*
*நேரா தோட முறுவலித்து நின்றவனுமன் கழல் போற்றி.*

(இ-ள்.) சிறப்பமைந்த ஒரு சக்கரத்தினையுடைய தெய்வீகமான இரதத்தில் எழுந்தருளி வராநின்ற சூரியனது அழகமைந்த உருவத்தினைக் கண்டு இது நாமுண்ணுதற்குரிய இனிப்புள்ள ஒரு பழமென மனதில் நினைத்து மாலையணிந்த மார்பினை யுடையவர் சூரியனைப் பிடித்துப் புசிக்கும் வண்ணம் அவன்மீது பேருருவங்கொண்டு தாவ அதனைக்கண்டவச்சூரியனுந் தேவர்களும் பயந்து எதிரினிலாது விரைந்து ஓடினர் ஓடுதலும் அதனைக்கண்டு புன்னகை புரிந்துநின்ற வீரதீர பராக்கிரமரான ஆஞ்சனேயரது வீரகண்டையணிந்த ஸ்ரீபாதங்களுக்கு நமஸ்காரம்.

## இதன் விவரம்.

நாம் வாசஞ்செய்யுமிப் பூமண்டலமானது சம்புத்வீப, பிலக்ஷத்வீப, சான்மலித்வீப, குசத்வீப, கிரௌஞ்சத்வீப, புஷ்கரத்வீப மென்னு மேழுதீவுகளையும், லவணம், இக்ஷு, ஸுரா, ஸர்ப்பி, ததி, க்ஷீர, ஜலமென்னும் சத்தஸாகரங்களையும் உயரத்தில் எண்பத்து நாலாயிரம் யோசனையும், ஆழத்திற்பதினாயிரம் யோசனையும், அகலத்தில் முப்பத்தீராயிரம் யோசனையும் உடையதாய் ஸ்வர்ணமயமான மேருமலையையும் இமவான், ஹேமகூடம், நிஷதம், நீலம், சுவேதம், சிருங்கம், மந்தரம், கந்தமாதனம், விபுலம், சுபார்சுவம் முதலிய குலாசலங்களையும் சம்பு, கதம்ப, உதும்பர வடம் முதலிய சிறந்த விருக்ஷங்களையும் ஸ்நானபானஞ் செய்பவர்கட்கு வியர்வை இன்மை, நாற்றமின்மை, மூப்பின்மை, பிணியின்மை, முதலியவைகளைத் தருகின்ற நீரினையும், மாற்றேறிய பொன்மணல்களையும் உடைய சாம்பூனத மென்னுஞ் சிறந்த நதியினையும் ஸ்நானபானங்களால்பாவங்களை யொழித்துப் பாவனத்தை யருளுங் கங்கைமுதலிய நதிகளையும் பாரதவருஷம், கிம்புருஷவருஷம், ஹரிவருஷம், ரம்மியவருஷம், இரண்மியவருஷம், குருவருஷம், இளாவிருத வருஷம், பத்திராசுவருஷம், கேதுமால வருஷம் என்னும் வாசஸ்தான மென்று பொருள் படும் மஹாவளம்பொருந்தியவும் முறையே ஒன்பதினாயிரம்யோசனை விஸ்தீரண மானவையுமான தேசங்களையும்; சைத்திராதம், கந்தமாதனம், வைப்பிராசம், நந்தனம் என்னுந்

தெய்வீக உத்தியானங்களையும்; அருணோதயம், மஹாபத்திரம், சீதோதகம், மானசம், என்னுமேன்மையுந் தூய்மையுமமைந்த நான்கு மடுக்களையும், ரத்தின மயமான பலசிறு மலைகளையும், பிரமன் திக்குபாலர் முதலியவர்களின் சிறந்த நகரங்களையும், ஸ்ரீமன் நாராயணனுடைய ஸ்ரீ பாதத்தினுண்டான பரிசுத்தமான கங்கா நதியானது சந்திரமண்டலத்தின் வழியாய் மேருபர்வதத்திலுள்ள பிரம நகரத்தின் நாற்புறத்திலும் பரவி சீதா, அளகா, நந்தா, சட்சுபத்திரா என்னும் பெயர்களுடன் சாகரசங்கமமாகும் அழகினையும் ஸ்ரீவனம், கிஞ்சுகவனம், நளவனம், சைத்திராதவனம் முதலிய நந்தவனங்களையும், அவைகளினிடையே மேகசித்திரம், பூதவனம், பிரமபாரிசம், சுரைபகம், என்னுந் திவ்விய நகரங்களையும், அந்நகரங்களில் ஸ்ரீதேவி, ஸ்ரீமந்நாராயணர், அக்கினி, சூரிய நாராயணன் முதலியவர்களின் ஸுகவாசமண்டபங்களையும், ஸ்ரீபகவான் பத்திராசுவத்தில், ஹயக்கிரீவராயும், கேது மாலத்தில் வராகமூர்த்தியாயும், பாரதத்தில் கூர்மமூர்த்தியாயும், குருவில் மச்சிய மூர்த்தியாயும், எழுந்தருளி இருக்கின்ற அழகினையும், அநேகமாயிரம் வருஷங்கள் பிழைத்திருக்கும் ஜீவகோடிகளால் நிரம்பப்பெற்ற கிம்புருஷாதி வருஷங்களின் மழையின்றிக் கீழ்நீரே சகல சுகத்தையுமளிக்குந் திறத்தையும் அநேகமாயிரம் ஜீவநதிகளால் ரமணீயமாய் விளங்குதலையும், உடையதாய் மற்றைப் பாகங்களெல்லாம் சோபித்தலையும் "உத்தரம் யத்ஸமுத்ரஸ்ய ஹிமாத் ரேச்சைவதக்ஷிணம் வர்ஷம்தத் பாரதந்நாமம்" என்னும் விஷ்ணு

புராண வசனப்பிரகாரம் லவணசமுத்திரத்துக் குத்தரபா கமாயும், ஹிமாலயத்துக்கு தெட்சிணபாகமாயும், அநேக மாயிரம் விசித்திர வேறு பாடுகளுடன் விளங்கும் பாரத வருஷமென்னும் பூமியில் போகமோக்ஷங்களை இச்சித்த வர்கள் பிரவிர்த்தி நிவிர்த்தியென்னுங் கர்மங்களாலவைக ளையடைய முயற்சித்தலும் இம்முயற்சிக்குத் தக்கபடி போக மோக்ஷங்களையும் பலவகையான ஜனனங்களையும், அடைதலையும் இவ்வாறு போகமோக்ஷ பலப்பிரதானஸ் தானமான இந்தபாகமனது சௌமியம், இந்திரம், கசேரு, தாம்பிரபானம், சலஸ்திமான், நாகம், காந்தர்வம், வாரு ணம், பாரதம் என்னும் ஒன்பதுபிரிவுபெற்று விளங்குதலை யும் இது "அயம்ஸுதர் சனத்வீப: புரோயஸ்யப்ரகாயு தே" என்றபடி ஸுதர்சனமென்னு மற்றொருபெயருடைய விச்சம்புத் வீபமானது சகரர் தோண்டிய சாகரத்தை யொருபுறத்தி லுடைத்தா யிருத்தலையும், பாரதம் ஆயிரம் யோசனை விஸ்தீரண முடையதா யிருத்தலையும், இதுவே இதன் கிழக்கு கிராததேசத்தையும், மேற்கு யவனதேசத் தையும், கொண்டு நிற்றலையும் இதனொருபாதி "பிப்பலஸ் தத்ரத் விரம்சேச ஶசேமஹான்" என்றபடி அரசிலையுரு வாகவும், முயலினுருவாகவும், விளங்குதலையும், இடையில் சதுர் வர்ணமென்னும் பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத் திரரென்னும் நான்குசாதியார்களும் இவர்களின்சங்கிரமத் தாலுண்டான அநுலோம பிரதிலோமாதி சாதியாதிகளை யுடையதா யிருத்தலையும், இன்னோர் யஜநாதிக்கிரியைகளை யும், யுத்தாதி காரியங்களையும், கிரய விக்கிரயங்களான

வியாபாரங்களையும், கிருஷிகளையும் சிற்பசித்திர கீதவாத்தியங்களையும், உடையவர்களாகிச் செழித்திருத்தலையும். "பாரதமேவைவர்ஷம் கர்மக்ஷேத்ரம்" என்னும் பாகவத வசனப்பிரகாரம் இது கர்மபூமியாகவிளங்குதலையும் இமயபர்வதோற் பவிகளான சத்துரு, சந்திரபாக, நதிகளும். பாரியாத்திரோற் பவிகளான வேதஸ்மிருதி முதலிய நதிகளும், விந்திய கிரிஜைகளான நர்மதா, ஸுரஸா முதலிய நதிகளும் ருக்ஷபர்வத ஜனிதங்களான பயோஷ்ணீ நிர்விந்தியா முதலிய நதிகளும் சையபர்வதோத் பவிகளான கோதாவரி, கிருஷ்ணவேணி, பினாகி முதலிய நதிகளும் மலயாசல ஜனிதங்களான தாம்பிரபருணி, கிருதமாலா முதலிய நதிகளும் மகேந்திரகிரி ஜனிதங்களான ரிஷிகுல்யா, மாருதி, திரிசாமா முதலிய நதிகளும், சுத்திமத் கிரிஜங்களான குமாரி, காளி, முதலிய நதிகளும் இவை போன்ற பல்லாயிர முபநதிகளும் ஸதாஜல ஸமர்த்தியானவையாய் ஸ்ரீபகவ தாராதனா யோக்கிய மானவையாய் விளங்குதலையும் இவைகளின் தீரங்களிற் சிரேயஸை மிகவுமுடைய பல தேவாலயங்கள் சிறந்து விளங்கும் குரு, பாஞ்சால. பாண்டிய, சோளாதி ராஜியங்கள் சோபித்தலையும் இவ்விடங்களிற் சதுர்யுகம், வருஷம், அயனம், இருது, மாதம். பக்ஷம், வாரம், தினம் முதலிய வேறுபாடான காலகதியிருத்தலையும் இக்காலகதிகேற்றவண்ணம் ஜனங்கள் தானதரும பரோபகார சிந்தனர்களாக விருத்தலையும், இவ்விடத்தில் ஸ்ரீபகவான் யஜனங்களால் பூசிதனாதலையும், உடையவனாம் வண்ணம் விளங்குதலையும் உடையது.

அன்றியும் இதைச்சுற்றியுள்ள உப்புக்கடலான லவ ணசமுத்திரத்தின் அப்புறத்தில் இரண்டுலக்ஷம் யோசனை புள்ள பிலக்ஷத்தீபமானது சாந்தஹயம், சிசிரம், சுகதம், ஆனந்தம், சிவம், க்ஷேமகம், துருவம் என்னும் ஏழுபாக மாக விளங்குதலையும் இவைகளில் கோமேதகம், சந்திரம், நாதம், துந்துபி, சோமகம், சுமன்னுவம், பிராஜம் என்னு மலைகள் விளங்குதலையும், அவைகளினின்றும் அநுதப்தா, சிகி, விபாவா, திரிதியா, அக்ஷர, அமிருதா, சுகிருதா என்னு நதிகளுண்டாகி நித்திய ஜீவிகளாக விளங்குதலையும் அவ்விடங்களில் வசிப்பவர்கள் கிருஷி வாணிப முதலிய வைகளை யின்றிச் சுகஜீவிகளாய் பரம பாவனமான அம் மஹா நதிகளின் நீரினைப் பானஞ்செய்துஞ் சாகமூல பலங் களையருந்திப் பாரத வருஷம்போல யுகதர்மாதி யெந்தப் பேதமுமின்றி அரோக திடகாத்திராக ஐயாயிரம் வருஷ மென்னும் வெகுகால ஜீவிகளாக விருத்தலையும் அவ்விடத் திய ஜனங்கள் ஆரியகர், குகரர், விதிஷியர், பாவியர் என் னும் நான்கு பிரிவினராக இருத்தலையும் ஜம்புத்தீபத்தின் நாவன் மரமிருத்தல்போல இதன் நடுவில் பிலக்ஷமென் னும் பெயருடைய கல்லால மரமானது அநேக மாயிரம் யோசனை யுயரமானதாகப் பிரகாசித் தலையும் ஸ்ரீ ஹரி சோம ரூபியாய் அங்குள்ளாரால் துதிக்கப் படுதலையும் உடையதாக விருத்தலை யுடையது.

சம்புத்தீபத்தை லவண சமுத்திரம் சூழ்ந்துள்ளது போலவேபிலக்ஷத்தீபத்தைக்கருப்பஞ்சாறென்னும்இக்ஷு

# அனுமத் பராக்கிரமம்.

ஸமுத்திரமானது சூழ்ந்து நிற்க அதன் நடுவண் சான்மலி என்னுந்தீபமானது கமுகம், பலாஹம், உன்னதம், துரோணம், கங்கம், மகிஷம், ககுத்மான் என்னு மேழுபிரிவிகளாக விளங்குதலையும் அவைகளில் யோனி, தோயா, விதிருஷ்ணை, சந்திரா, சுக்கிலா, விமோசினி, நிவிர்த்தியென்னும் பெயருள்ள திவ்விய நதிகள் அழகுற வோடுதலையும், அவ்விடத்தில் கபிலர், அருணர், பீதர், கிருஷ்ணரான நிறபேதங்களால் நான்கு சாதிகளிருத்தலையும் ஸ்ரீமன் நாராயணனை வாயுரூபியாக அவ்விடத்தியார் வணங்குதலையும் அவ்விடத்திற் சாலப்பெரிய இலவமரமொன்று விளங்குதலையும் உடையது.

இதைச் சூழத் தேன்கடல் விளங்குதலையும், அதற்கப்பால் உத்பிதம், வேணுமான், சுவைரதம், லம்பனம், திருதி, பிரபாகரம், கபிலம், என எழுபிரிவுகளான குசத்தீபம், விளங்குதலையும், அவைகளில் வித்துருமம், ஹேமம், திதிமான், புஷ்பவான், குசேசயம், ஹரி, மந்தாரம் என்னுஞ் சத்தகிரிகளும் அவைகளில் நின்றும் ஆதபாகா, சிவபவித்திரா, சுமதி, பத்திராயு, தாம்பராமஹி முதலிய நதிகள் சிறந்து விளங்குதலையும் தமிக, காஷ்மிக, தேஹ, மந்தேஹா என்னுஞ் சாதியர் தேவயக்ஷ கின்னர கிம்புருஷ காந்தர்வாதிகளுடன் கலந்து வாழ்தலையும், ஸ்ரீபகவான் பிரமரூபியாக விளங்குதலையும் குசையென்னு நாணற்புல் அவ்விடத்தில் மிகுந்திருந்தலையு முடையது.

அதனைச்சூழ நெய்க்கடல் விளங்குதலையும், அதனைச் சூழ கிரவுஞ்ச மென்னுந் தீபமானது குசலம், மனுமகம், உஷ்ணம், சிவரம், அந்தகாரம், முனி, துந்துபி என்னும் பிரிவினவாக விளங்குதலையும், அவைகளில் கிரவுஞ்சம், வாமனம், அர்த்த சாகரம், ரத்தினம், திவாவிருது, புண்டரீகம், துந்துபி யென்னும் மலைகளும் அவைகளில் கௌரி, குமுதவதி, சந்தியா, ராத்திரி, மனோஜா, வசியா, புண்டரீகா என்னு நதிகள் அழகுற வோடுதலையும் புஷ்கர, புஷ்கல, தன்னிய, திஷ்ப என்னுஞ் சாதியார்கள் ருத்திர ரூபியாக விளங்கும் ஸ்ரீ ஹரியை ஆராதித்தலையும் உடையது. இதனப்புறத்தில்.

மலையாற் பெயர்பெற்ற கிரவுஞ்சதீபமானது சூழ்ந்த பாற்கடலாற் சூழப்பட்டிருத்தலையும், அதைச்சுற்றி சாகத்தீவானது, ஜலதம், குமாரம், சுகுமாரம், மரீசகம், குசமோதம், சுவேதம், மஹாத்துருமம என்னும் பிரிவுகளாக விளங்குதலையும் அவைகளில் உதயம், ரைவதம், ஜலதாரம், சியாமம், அம்போகிரி, ஆம்பிகேயம், கேசரியென்னு மலைகளும், அவைகளில் சுகுமாரி, குமாரி, நளினி, வேணுகி இட்சு, தேனுகா, கபர்த்தி முதலிய நதிகள் விளங்குதலையும், அவைகளில் மங்கர், மாதகர், மானசர், மந்தகர் என்னு நான்கு சாதியார்கள் ஸ்ரீமன் நாராயணனை சூரிய சொரூபியாக ஆராதித்தலையும் மிகவுமுயர்ந்த சாகவிருக்ஷத்தால் சோபித்தலையும் உடையது.

அந்த சாகத்தீவைச்சுற்றி பாற்கடலென்னும் க்ஷீர சமுத்திரமானது சூழ்ந்துநிற்க அதைச்சூழ புஷ்கரமென்னுந்தீபமானது, மஹாபீதம், தாகதியென்னும் இருபிரிவாக மானசோத்தர மலையுடன் விளங்குதலையும் அதனில் வாழ்வார்மற்றைத் தீபவாசிகளைப்போலன்றி அரோக திடகாத்திராய் சாதிபேத சமய பேதமின்றி சுகானுபவிகளாய்ப் பதினாயிரம் வருடங்கள் சீவித்திருக்கும் பாக்கியம் பெற்றிருத்தலையும் யாதொரு தேவதா வணக்கமு மில்லாதிருத்தலையு முடையது.

அதனைச்சூழ நன்னீர்க் கடலென்னு சுத்தோதக சமுத்திரமானது விரிந்து கிடத்தலையும் அதற்கப்பா லண்டச்சுவ ரென்பது விளங்குதலையும் உடையதாய் ஐம்பது கோடி அகல அளவுள்ளதாய் விளங்குகின்றது.

இதனடிப்புறமானது பாதாளமென்னும் பெயருடையதாய் அதல, விதல, நிதல, தராதல, மஹாதல, சுதலபாதாளமென்னும் பிரிவினவாய் விளங்குதலையும் அவைகளில் பலவகை வர்னங்களான மலைகளும் சொர்னமயமான பூமிகளும் விளங்கு தலையும் அவைகளில் அசுர சாதியினரும், நாகசாதியினரும், உல்லாசமாய் வாழ்தலையும் பூலோகத்திற்போல கோகில சக்ரவாகாதி பக்ஷிசாலங்களை யுடைய ஆராமங்களும், வாவிகளும், வீணாவேணுகானாதி சந்தோஷங்களும் உடைத்தா யிருத்தலையும் அனந்த னென்னுஞ் சிறந்த நாமத்துடன் ஆதிசேஷன் விளங்குதலையும் இவைகளுக்குக் கீழ்ப்புறத்தில் பொய்ச்சாக்ஷி கூறுவோனும்,

ஒரு தலையாகத் தீருமானங் கூறுவோனும், அசத்தியம் பேசுவோனும் இவனை யொத்தாரும் விழுந்து வருந்த ஸ்ரீ பகவான் அமைப்பித்துள்ள ரவுரவ நரக மிருத்தலையும், சிசுவைக் கொல்வோனும் ஊரையழிப்போனும் கோகத்தி செய்வோனும்பிராணிகளை மூச்சைத்திணற செய்வோனும் விழுந்து வருந்த வமைத்துள்ள ரோதநரக மிருத்தலையும்,

கட்குடிப்போனும் பிரமஹத்தி செய்வோனும் சோர னும் இவர்களை யொத்தாரும் விழுந்து வருந்துஞ் சூகர நரகமிருத்தலையும்.

அரசனைக் கொல்லுவோனும், வணிகனைக் கொல்லு வோனும், சகோதரி குருதாரம் முதலியவர்களைப் புணரு வோனும், ராஜபடர்களைக் கொல்லு வோனும், விழுந்து வருந்துந் தப்தகும்ப நரகமிருத்தலையும்.

**"கற்புடை மனைவியை விற்போனும் நல்லோரைச் சிறையிடுவோ னும், வைதீகயோக்கியமான அசுவங்களை விற்போனும் அடைக்க லம் புகுந்தாரை, யாதரியாதானும் தம்மீதன் புடையாரை அடித்துத் துன் புறுத்தியோனும், விழுந்து வருந்தற்குரிய தப்தலோகமென்னு நரகமிருத்தலையும்"**

குருதூஷகனும், மருகி புதல்வியாதியரை யணைவோ ரும் விழுந்து வருந்தற்குரிய ஜ்வாலா நரக மிருத்தலையும்; வேததூஷகனும், வேதவிக்கிரயனும் சங்கமயோக்கிய மற் றோரோடு சங்கமஞ்செய்வோனும் விழுந்து வருந்தற்குரிய லவணமென்னு நரகமிருத்தலையும் சோரனும் லோகவிரோ தியும் விழுந்து வருந்தற்குரிய விலோமமென்னு நரகமிருத்

தலையும், தேவரையும், பிராமணர்களையும், பிதிர்க்களையும், உத்தமவஸ்துக்களையும் தூஷிப்பவனும் பரோபத்திரவியும் க்ஷுத்திரக்கிரியை யுடையோனும் விழுந்துவருந்தற்குரிய கிருமிஜாதிகிருமி பட்சமென்னு நரகங்களிருத்தலையும்.

பிதுர்க்களையும் அதிதிகளையும் விடுத்து முன்னுண் போனும் கிராதர் முதலாயினோர்க்கு கொலைக்குரிய ஆயுதங் களைச்செய்து கொடுப்போனும் விழுந்து வருந்தற்குரிய லாலாபட்சமென்னு நரகமிருத்தலையும்.

கண்ணிகள் கத்திகள் முதலிய செய்து பிராணிகளை ஹிம்சிக்குமாறு கொடுப்பவர்கள் விழுந்தழுந்தற் குரிய விசஸனமென்னு நரக மிருத்தலையும், அயோக்கிய னிடத் திற்றனம் வாங்குவோனும், அனதிகாரிக்கு வைதீககருமஞ் செய்து வைப்போனும், சோதிட நூலால் முறையின்றிப் பலன் கூறுவோனும், விழுந்து வருந்தற்குரிய அதோமுக மென்னு நரகமிருத்தலையும்.

பிறரிடத்தி லடஞ்சாதிப்போனும் ருசியான வஸ்துக் களை அயலாருக்குக்கொடாமல் புசிப்போனும் நாய், பன்றி கோழி, பூனை, காடை, கவுதாரி, முதலிய பறவைகள் முத லியவைகளை வளர்ப்போரும் விழுந்து வருந்தற்குரிய பூய வகமென்னு நரக மிருத்தலையும்.

மறையோனுகப்பிறந்து கூத்தாடிப் பிழைப்போனும், மல்யுத்தஞ் செய்து பிழைப்போனும், தூண்டில் முதலிய கொண்டுமீன்பிடிப்போனும் உண்ணப்படாத அன்னத்தை

யுண்டோனும், விஷமிடுவோனும் கோட்சொல்லுவோனும், மனைவியைக் கூட்டிக் கொடுப்போனும் வீட்டைத் தீக்கிரையாக்கு வோனும், சினேகிதனைக் கெடுப் போனும், கொன்று தின்பார்க்குப் பறைவைகளை விற்போனும், யாகத்திலாட்டடாங் கொடியை விற்கிறவனும், விழுந்து வருந்தற்குரிய ருதிராரம்பமென்னு நரகமிருத்தலையும்.

யாகத்தை யழிப்போனும், ஊரை யழிப்போனும், விழுந்து வருந்தற்குரியனை தரணியென்னு நரகமிருத்தலையும், பணத்தினாலும் இளமைச் செருக்காலும் ஊரெல்லை முதலியவைகளை யழிப்போனும் அசுத்தனும் மோசக்காரவிழுந்து வருந்தற் குரிய கிருஷ்ணமென்னு நரக மிருத்தலையும்.

சத்கருமங்களுக்கன்றி பலாசமுதலிய மரங்களை வெட்டுவோனும் ஆட்வொணிபனும் மிருகங்களைக் கொலைபுரிவோனும் விழுந்து வருந்தற்குரிய அக்கினி சுவாலமென்னு நரகமிருத்தலையும்.

விரதலோபியும் ஆசிரமப் பிரஷ்டனும் விழுந்து வருந்தற்குரிய சந்தமிசமென்னு நரகமிருத்தலையும் அன்றி இவ்வாறான பாவிகள் விழுந்தனுபவிக்கத் தக்க விவைபோன்ற பல்லாயிர நரகங்களையும் உடைய அடிப் புறத்தினையுமுடையது.

இதன் மேற்புறமானது பதினாயிரம் யோசனை அகலமும் ஒன்பதினாயிர யோசனை வியாபகமும் உடையதாய்

இருபுறத் திரிசுகளையுஞ் சேர்க்கிற கடையானது (ஏர்க்கா லானது) இருபதினாயிரம் யோசனை யளவுள்ளதாயும் மற்றொருபுறத் திரிசானது ஒருகோடியே எண்பத் தேழுலட்சம்யோசனை யுடையதாயும்விளங்க அதனில் மாட்டியிருக்கும் ஒற்றையாழியானது சம்வத்ஸரரூபமாய் காலை, உச்சி, மாலை என்னு நாட்பிரிவான இரிசுகோப்பிடமும் சம்வத்ஸரம், அரிவத்ஸரம், இடாவத்சரம், அனுவச்சரம் இத்வச்சரம் என்னும் வருஷ பேதங்களாகுமே ஆரங்களா யுள்ளதாயும், இருதுக்களாலுஞ் சுற்று வட்டமா யுள்ளதாயும், விளங்க வமைத்த ரதத்தில் காயத்திரி, பிருகதி, உஷ்ணி, ஜகதி, திருஷ்டுபு, அனுஷ்டுபு, பங்தியென்னுஞ் சந்தசேழும் குதிரைகள் ஏழாயமைய மற்றொரு புறத்திரிசானது நாற்பத்தையாயிரத் தைந்நூறு யோசனை யளவுள்ளதாய் நுகத்தடியின் பாதியோடுகூட வாயுரூபமான கயிறுகளாற் கட்டப்பட்டு துருவனை யாதாரமாகக்கொண்டு நிற்கப்பேரிரிசிற் கோவையிட்ட சக்கரமானது மானசோத்தரபர்வதத்தின்சிரசில் விளங்க அழகிய அவ்விரதத்தை ரிஷிகள், கந்தருவர், அப்சரசு, யக்ஷர், சர்ப்பங்கள், ராக்ஷஸர்கள், வாலகில்லியர் முதலியவர்களாலே சோபிக்க அதனில் பகவானன சூரியன் ஏறியருளி உலகத்துக்கு வேண்டிய உபகாரங்களைச் செய்து செல்லுகிற சூரியலோகமும்.

அதற்குமேல் மூன்று சக்கரங்களையும் வெள்ளிய பத்துக் குதிரைகளையும் உடைய அழகிய ரதத்தில் சந்திரனுலவுகின்ற சந்திரலோகமும்,

அதற்குமே ல்பொன்வர்ணமான எட்டுக்குதிரைகளை யுடைய அழகிய விமானரதத்திலுலாவுகின்ற புதனுடைய உலகமும்.

அதற்குமேல் எட்டுக்குதிரைகளை யுடையதும் முன் பின் நடு என்னும் பாகங்கள் சிறந்து விளங்குகின்ற ஸ்வர்ணமயமான ரதத்தி லுலாவுகின்ற சுக்கிரனுடைய லோகமும்;

அதற்குமேல் பதுமராக மணி போன்ற நிறமுள்ள எட்டுக் குதிரைகளை யுடைய நீவர்ணமாக விளங்கும் விமானரதத்தில் உலாவும் அங்காரக னுலகமும்,

அதற்குமேல் எட்டு சுவேத வாம்புரவிகளையும் மற்றைய அலங்காரங்களையுமுடைய சுவர்ணமயமான பாரிய தேரில் உலாவுகின்ற வியாழன நுலகமும்,

அதற்குமேல் சித்திரவர்ணமான ரதத்திலுலாவுகின்ற பங்குவுங் கரியோனுமான சனியன துலகமும்,

அதற்குமே லருந்தவஞ்செய்து ஆதி நாராயணனது கிருபையால் விளங்கும் வசிட்டாதிகளான சத்த ரிஷிகளின் மண்டலமும்.

அதற்குமேல் சிலாகன்னியனை துருவனது சிறந்த மண்டலமும்.

அதற்குமேற் கற்பகால ஜீவிகளான மஹர்ரிஷிகளின் வாசஸ்தானமான மஹாலோகமும்,

அதற்குமேல் பிரமபுத்திரர்களான சனகாதி ரிஷிகள் வாசஞ்செய்யுஞ் சனலோகமும்,

அதற்குமேல் பிரளாயக்கினியிலு மழியாத வைராச ரென்னுந் தேவர்கள் வாசஞ்செய்கின்ற தபோலோகமும்,

அதற்குமேல் ஜகத் சிருஷ்டாவான பகவான் பிரம தேவனுடைய வாசஸ்தல மானதாயும் புனர்ஜனன மில்லா தவர்களின் வாசஸ்தலமாயுமுள்ள சத்தியலோகமும் அழி யாது விளங்குதலையும் உடையது.

இவ்வகைய விசித்திர வேறுபாடுகளை யுடைய இந்த பிரபஞ்சமானது பூலோக, புவர்லோக, சுவர்லோகமென்று மூன்று பிரிவினதாய் விளங்குகின்றது இந்தப் பூமிமுதற் பாதாள பரியந்தமாய்க் காலாலே நடந்து போகத் தக்க தான இடம் பூலோக மெனவும் சூரிய மண்டலத்துக்கும் பூமிக்கு நடுவாய் சித்தசாரணாதிகள் சஞ்சரிக்கும் ஆகாய வெளியே புவர்லோக மெனவும்.

சூரிய லோகமுதற் சத்தியலோகபரியந்தம் சுவர்லோ கமெனும் பெயருடையதாயும் விளங்க விளங்குகின்றது.

இத்தகைய மூன்றடுக்கான இந்த வுலகமாகிய மனை யகத்துக்கு அழகிய ஒளிமணி விளக்காகவும்.

"த்வமேவப் ரத்யக்ஷம் கர்ம கர்த்தாஸி
த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி
த்வமேவ ப்ரத்யட்சம் விஷ்ணுரஸி என்பனவாதி உபநிஷத்."

வசனங்களால் மஹான்கள் நீயே கர்மகர்த்தா வென வும், நீயே ப்ரத்தியட்சமான பிரமனெனவும், நீயே பிரத் தியட்சமான விஷ்ணுவாகின்று யெனவும் துதிக்கும் மேன் மையுடன் விளங்குகின்ற சூரியபகவான் கீழ்த்திசையில் அருண நிறமாயுதித்து அருங்கதிர்களைப் பரப்புகிற காலத் தில் அஞ்சனாதேவி யென்னும் வானரமாதின் கற்பபூத னாய் வாயுசுதனாய் அரக்கர் குலத்தை யழிப்பா னவதரித் திருந்த ஆஞ்சனேயனான அனுமான் மிகவும் இளங்குழ வியாய் அன்னையின் மடியிலிருந்து பாலருந்துபவர் அச் சூரியனைச் செந்நிறம் வாய்ந்த பழம்போல ஒளிபொருந்தி யிருத்தலைக் கண்டு அன்னை யீதென்னையென வவளும், விளையாட்டா யீதோர் கனியெனத்தாமும் தாமுண்ணும் பழவர்க்கங்களி லிதுவு மொன்று யிருக்கலாம். எனக் கருதி அதனைப் பறித்தருந்தலா மென்னு மெண்ணங் கொண்டு பெற்றவன்னையின் மடியினின்றும் விரைந்தெழு ந்து பேருருவங்கொண்டு ஒரே பாய்ச்சலாகச் சூரிய மண் டலத்திற் றாவிவருதலும், இவரது பயங்கரமான வருகை யையும் உருவத்தையுங்கண்டு சூரியனும் அவனுடனிருந் தாரும் விரைந்து பயந்து கீழே குதித்தோடிப் போய்விட் டார்கள் ஓடுமவர்களை விடாமலிவரும் பின்றொடர வவ ரனைவரும். இந்தப் பராக்கிரம உருவ மின்னதென்றறிந்து கொள்ளு மாற்றலின்றி இந்திரன் சபையிற் சென்றொளித்

தார்களையன்றி எவரும் எதிர்த்துநின்றாரில்லை இத்தகைய பராக்கிரம சாலியான வனுமானை நாம் வணங்கு வோமாக இதனை.

மேருகிரிக்கு மீதுற நிற்கும் பெரு மெய்யீர்
யாரி துளிக்குந் தாரை யிடுக்கும் வரவல்லீர்
பாரை யெடுக்கு நோன்மை வலத்தீர் பழியற்றீர்
சூரியனைச் சென்றெண்டை யகத்துந் தொடவல்லீர் என்றும்

கார்வாய் கருங்கட லுடுத்தமா நிலமகள்
கருந் துகில் கிழித்து நீக்கிக்
கலைமகண் மணாளன் றிருக் கோயி லிடுமணிக்
கதவந் திறக்கும் வெய்யோன்
சூர்வாய் சுடர்ப் பிழம்பொடு வெளிவரக் கண்டு
சுடுபசிக் கிரையிது வெனாத்
தொழு தகைய வன்னை புகன் மொழிவழி
யெழுந் துதிண் டோளிணை புடைத்து வாவித்

தார்வாய்த்த பரியேழு முலைய வருணன்
றழுதழுக்க வெறு வெளியி லொற்றைச்
சகட நெரிதர வெதிர்குதித் தாயிரங் கதிர்த்
தலைவனைக் கனிகொ லென்னாத்,
தேர்வாய்க் குளே விழுங்கிடவாய் திறந்தவன்
செங்கீரை யாடி யருளே
தீரதிரி நேத்ரமுள வீரவனு மந்தனே
செங்கீரை யாடி யருளே.

என்றும் வருவனவற்று ளுணர்க.



உ - வது.

# உக்கிர லீலா பராக்கிரமம்.

---

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

*முள்ளரை முளரியண்ணல் போன்றுறு முனிவர் தங்க*
*ளுள்ளகத் தெய்தி முந்நா லுறுகலைச் சீரையாதி*
*தள்ளியு மறுத்துஞ் சிங்கந் தனைப்பசு முலையுண்பித்து*
*எள்ளலின் றுறுவராசி யேய்ந்தமா ருதிதாள் போற்றி.*

(இ-ள்.) முட்களை இடையிடையேயுடைய தாமரைமலரை யாசனமாகக்கொண்டு விளங்கும் பிரமதேவனையொத்த வசிட்டாதி முனிவரின் ஆச்சிரமங்களு ளெய்தி அவர்களுடைய முப்புரி நூல்களையும் ஆடையாகிய மரவுரி முதலியவைகளையும் கீழே தள்ளியும் அறுத்தும் சிங்கத்தின் குட்டி புலியின் குட்டியாதிகளைப் பிடித்துக்கொண்டுவந்து ஆசிரமங்களிலுள்ள பசுக்களின் பாலை யுண்பித்தும் பல சிறு குறும்புகளைச் செய்தும் அம்முனிவரால் நல்லறிவு பொறுமை தீரமாதியபெற்று நற்செயலுடனெளிர்வாயாகவென ஆசிகூறப்பெற்று விளங்குகின்ற ஆஞ்சனேயரது திருவடிகட்கு நமஸ்காரம் எ-று.

## இதன் வரலாறு.

திரிமூர்த்திகளான பிரமாதி தேவர்களாற் கொடுக்கப் பெற்ற வரத்துடன் பராக்கிரமரான ஆஞ்சனேயரானவர் அஞ்சனா தேவியிடம் வளருங்காலத்தில் பாலலீலை செய்வாராய் வனங்கள்தோறும் மலைகள் தோறுந்திரிந்து பலப் பல விநோதமான விளையாடல்களைப் புரிந்து வருபவர் நிறைமொழி மாந்தரான வசிட்டர் கண்ணுவராதிய விருடிகள் வாசஞ்செய்யுந் தபோவனங்களுட்சென்று தேவரும் மற்று யாவரும் உட்புகுதற்கஞ்சும் மேன்மையினையும் பரிசுத்தத்தினையுமுடைய அவர்களினாச்சிரமங்களுட் புகுந்து அங்கு கொடிகளிற் கிடக்கும் உபவீதங்களையும் உடுத்தற்குரிய மரவுரிகளையும் எடுத்து அறுத்தும், கிழித்தும், மற்றும் பிறபொருள்களை யுருட்டியும், உடைத்தும், பத்திரபுட்ப பலங்களைப் பலவாறிறைத்தும் பூரணகும்ப முதலியவைகளைத் தலைகீழாக வைத்தும், சிங்கக்குட்டி புலிக்குட்டி முதலியவைகளைப் பிடித்துக்கொண்டு சென்று ஆசிரமங்களிலுள்ள பசுக்களின் மடிகளில் வாய் வைப்பித்துப் பால் குடிப்பித்தும், சிங்கம், புலி முதலிய பின்றொடர்ந்தாலவைகளை அடித்தும், உதைத்தும், வளர்ப்போர் பின் சுணங்கனை யொப்பத் திரியச்செய்தும், அனேகங் காலங் கோடரிகொண்டு வெட்டினும், விழாத மஹா விருக்ஷங்களை வேருடன் பிடுங்கி யெறிந்தும், அதட்டுவோரை யச்சுறுத்தியும், பயங்கரமான இச்செயல்களைச் செய்தலைக்கண்ட வசிட்டாதி முனிவர் ஞானதிருட்டியா லிவரை

வாயுகுமார ரெனவும், முக்கண்ண ரெனவும், சிரஞ்சீவி யெனவும், இவர் திருவவதாரம் லோக ரட்சணார்த்தமாக வுள்ளதெனவும், உணர்ந்து சபிப்பதை விடுத்து ஏ குழந் தாய் நீ இன்றுமுதல் சிறந்த கல்வி, பொறுமை, ஒழுக்க முதலியவைகளை யுடையவனாகக் கடவை இச்சிறு குறும்பு முதலிய தீச்செயலனைத்தும், நின்னை விட்டொழிக என ஆசீர்வாதம் புரிந்தனர்.

இதனை,

பாசிலை பொதுளு முருக்கிலையன்ன சுருக்கணி கோல்கொடிமுப்
படிறு முருக்குவதிட்ட மகாமுனிவ படியர்கள் சாலைதொறுங்
கோசிக படலங் குலைகுலையப் புனைநூலது காலணையக்
கொண்டு புலிச்சிறு கன்றையனைத் தருங் கோளரி வன்பறழைத்
தேசிக சுரபியின் முலைநுகர்வித்து மிழைத்த குறும்புகளாற்
சீரறிவும்பொறையும்பெறுகென்றவர் செப்பியவாய்மொழிகொண்
டாசறுகல்வி மகோததி கண்டவ வாருக செங்கீரை
யருள்பொழி திரிநேத்திர முளமாருதி யாடுக செங்கீரை.

என்பதாதியா லுணர்க.



## ௯-வது.

# சூரியரத சக்ரஸ்தித பராக்கிரமம்.

---

### எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

*அருந்தவம்புரிந்த திருந்திழை மடந்தை யஞ்சனை யுளங்குதுகுதுப்ப*
*மருந்தினு மினியமறைப் பொருண் முதல மாசுயர் பணிதிருப்பரிதி*
*தருந்தகைக் குரவனென வவற்சார்ந்து சக்கரமீதி னின்றுணர்ந்த*
*பெருந்தகையனுமன் றிருவடிமலரைப் பெருமலர்தூயிறைஞ்சிடுவோம்*

(இ-ள்.) தம்மைப் புதல்வனாகப் பெறுதற்குரிய அரிய தவங்களைச்செய்த சர்வாபரண பூஷிதையான அஞ்சனா தேவியி னுள்ளமானது மிக்க மகிழ்ச்சியடையும் வண்ணம் தேவாமுதினுமினிய வேதார்த்த முதலியவைகளைச் சிறந்த தவமுடையாராலே வணங்கப்படுகின்ற சூரிய பகவானை உபதேசித்தற்கு வல்ல குருவென்று கருதி யவரது சன்னிதியை யடைந்து எமக்குக் கலைஞானங்களை யருளுவீராக என்றவுடனவர் தருதும் நீ இருந்து கேட்டற்கு இடமு மில்லை இந்தத்தேரிலன்றி மற்றையிடத்தில் யாம் வருதற்கு மியலாதென்னலும் நாமுமது தேரின் சக்கரத்தினின்று கேட்டுக் கொள்ளுகின்றோமென்று அவரது தேரின் சக்கரத்தினின்று அச்சூரிய பகவானா லுபதேசிக்கப் பட்ட நவவியா கரணங்களையும் பிறநூல்களையு முணர்ந்த பெரிய தகைமையனையுடைய ஆஞ்சனேயரது அழகிய சரணகமலங்களை மிக்கவலர்களா லருச்சித்துப் பணிவோமாக எ-று.

## இதன் விவரம்.

முன் பராக்கிரமத்தில் உரைத்த வண்ணம் சூரிய பகவானை உண்ணுங் கனிகளி லொன்றெனப் பிடித்துண்பான் விரைந்து வருதலைக்கண்டு பயந்தோடிய சூரியனுந் தேவராதியரும் இந்திரனை அடைந்து தம்மைப் பிடித்துண்பான் எதுவோ ஒரு பிராணி பயங்கரமான உருவுடன் வருகின்றதென்று கூறக்கேட்ட இந்திரன் இஃதென்ன உலக விளக்காகிய சூரிய பகவானை விழுங்குவான் வாய் திறந்து வருவதெதுவாயினுமாகுக அதன் வருகையைத் தடுக்க வேண்டியது நமது கடமை எனக் கருதிய இந்திரன் பண்டிருந்த மலைகளினிறகுகளை அறுத்து அவைகளை அசலங்களாக்கிய பாரியகூரிய வச்சிரப் படையையெடுத்து வீசியடித்தான். அடித்தலும் அந்த வயிரப் படை விரைந்து சென்று அஞ்சனா குமாரரது அழகிய கன்னத்திலொரு வடுவினை யுண்டாக்கிப் போதலும் இவர் அச்சூரியனை யுண்ணுங் கனியல்ல வென்றுணர்ந்து திரும்பித் தம்மிட மடைந்தனர். அங்ஙனந் தம்மிட மடைந்த புதல்வனது கன்னத்தில், வடுவுற் றிருத்தலைக்கண்டு நனி கவலையுற்றிருந்த மாதாவினெதிரே யெய்திய தமது பிதாவான வாயுபகவான் எதனாலிச் செயலுண்டாகிய தென வாலோசித் துணர்ந்து இளங்குழவி யறியாது வருதலைக் கண்டு இம்மூடத் தனமான காரியத்தினைச் செய்வான் துணிந்த இந்திரனை யேன் ஏனைத்தேவர்கள் தடுக்கப்படாது தேவர் அஃதிளங்குழவி யறியாப்பருவத்தா லருங் கனியென வெண்ணி வருகின்றது அது வாயுவின் பிள்ளை

என்று தடுத்தார்களா இல்லையே சரி இருக்கட்டும் இத் தேவர்கட்கு நற்புத்தி புகட்டு கின்றேனென்று கடுங்கோ பத்துடன் ஆஞ்சனேயரை எடுத்துக்கொண்டு எவருக்குந் தெரியாமற் பாதாளத்திலொரு குகைக்குட்சென்று மறைந் திருந்துகொண்டு தனது தொழிலாகிய அசைதலையடக்கி மௌனமாக இருந்தனன்.

வாயுதேவன் ஆஞ்சனேயருடன் மறைந்து இருந்த சிறிது நேரத்துக்கெல்லாம் நாலுவகையோனி எழுவகைத் தோற்றத்து எண்பத்து நான்கு நூறுயிரம் ஜீவராசிகளும் காற்றின்றிப் புழுங்கி மிகவும் வருந்தின. அதனுல் தேவ பூஜை முதலிய சத்காரியங்களும், காமகேளி விலாசாதிய அசத் கிரியைகளும் இல்லாது சூனியமாயின அங்ஙனஞ் சூனிய மானதனைக்கண்டு அயனர னரியென்னு மும்மூர்த் திகளும் இந்திராதிகளான தேவர்களும் பிருகு வாதிய ரானரிஷி சிரேட்டரும் ஒருங்கு சேர்ந்து காற்றியங்காத தற்குக் காரண மென்னையென வாலோசித்தார்கள் ஆலோ சித்தார்க்கு ஆஞ்சனேயரை இந்திரன் வச்சிரத்தா லெறிந் தது காரணமாகக் கோபங்கொண்டு வாயுபகவான் இவ் வாறு செய்தன னென்றுணர்ந்து அவருக்குச் சமாதானங் கூறும் வண்ணம் அனைவருமாக வாயுதேவனது உலகத் திற்சென்று பார்த்தார்கள் பார்த்து அவரங்கில்லா திருத் தலையுணர்ந்து அவர்சென்று மறைந்திருக்கும் இடத்தை யுணர்ந்து அனைவருமாக அவ்வாயுதேவ னெதிரேசென்று ஓ உலகிலுள்ள பிராணிகளுக் கெல்லாம் பிராண சொருப

மாக உள்ளவரே ஓ பிராணிகளின் ஜீவாதார மானவரே ஓ வன்மையிற்சிறந்த மஹாவீரரே. உலகினை யொருமுடியி லேந்தும் ஆதிசேஷனிலுஞ் சிறந்த வன்மையாளரே உமது கண்களைமூடி உமது புதல்வனை மடியில் வைத்துக்கொண்டு இந்தப் பிலத்திலிருப்பது முறையன்றாம். எதிரினிற்பவர் களை யாவரென்று கண்களைத் திறந்துபாரும் ஓ மிருகவாக னரே எழுந்திருமெனப் புகழ்ந்துரைத்த தேவர்களின் வச னங்களைக்கேட்டு டெலலெனக் கண்களைத்திறந்து லோக பாலகரின் வருகையை யுணர்ந்து விரைந்தெழுந்து அவர் களை வணங்கிக் கோபமும் வாட்டமும் பொருந்திய முகக் குறியுடன் நின்றனர்.

அங்ஙனம் நின்ற வாயுதேவனைப் பார்த்து அனைவரும் உம்முடைய இளங் குழந்தையென்று தெரியாமல் தேவ ராசன் வச்சிரத்தா லெறிந்ததேயன்றித் தெரிந்து செய்த தன்று புத்திரவாத் ஸல்லியத்தால் நீர் இவ்வாறு செய் தால் உலகிலுள்ள பிராணிகள் வருந்து மெனபதனை மறந் தனீர்போலும் ஓ வாயுதேவனே உம்முடைய மகனை இந் திரன் வச்சிரத்தா லடித்தானென்று கோபங்கொள்ள வேண்டாம் இனி எந்த தேவதாஸ்திரமும் உம்முடைய குமாரனை ஒன்றுஞ்செய்யாது பிரமாஸ்திரமொன்று மாத் திரமொரு முகூர்த்தநேரம் உமது மகனைத்தடுத்து நிறுத் தும், அதுவும் எதிர் காலத்தில் உபகாரார்த்த மாகவே முடியும். ஓ வாயுதேவனே உம்முடைய குமாரன் இனி யெந்நாளும் அழியாத சிரஞ்சீவியாக இருக்கக் கடவன்

கன்னத்திற்பட்ட வடுவன்றி வேறுவடு இவனுக்கினி யுண்டாகாது. வடுவின் காரணமாக இன்று முதல் இவன் அநுமான் என்னும் பெயருடன் சிறந்து விளங்குவானாக.

பூவுலக முதலிய அனைத்து லோகங்களிலுமுள்ள ஜீவகோடிகளில் இவ்வநுமான் ஒப்பு முயர்வுமற்ற வன்மையாளனும் ஜயசாலியும் புகழ்பொருந்தியவனுமாக விளங்குவானாக.

என்று இவைபோன்ற பல நூறுவரங்களைப் பிரமன் முதலிய தேவர்கள் கொடுக்க ரிஷிகளெல்லாம் ஆசீர் வதிக்கக்கேட்டு வாயுதேவன் கோபமாறித் தேவர்களையும் முனிவர்களையும் வணங்கி இனி ஜீவகோடிகள் சுகத்துடனிருப்பார்களென்று கூறுதலும், எங்குநறுங்காற்று வீசப்பெற்று அனைவரு முள்ள முவந்தனர், அனைவருக்கு முள்ளக் கிளர்ச்சி யுண்டாமாறு வாயுதேவன் செய்தவுடன் அவரை நாடிவந்த அனைவரும் அவரைப் புகழ்ந்து தத்தமிருப்பிட மெய்தினர்கள் வாயுதேவனுந் தமது குமாரரான ஆஞ்சனேயரை அழைத்துக்கொண்டு பூவுலகிலெய்தி அவரன்னையான அஞ்சனாதேவியிட மவரை விடுத்துச் சென்றனர்.

அன்னையு மத்தனும் கண்ணை நிமைபோல இவரை அதிகாத்திரமாக வளர்த்து வந்தார்கள். அங்ஙனஞ் சீராட்டுடன் வளர்ந்த பெருந்தகைக் கிணையானவ ரெவருமில்லாதாராய்ப் பிதாவினு லெல்லாச்சடங்குஞ் செய்யப்பெற்றுப் பிரமசாரியாகிச் சாத்திரங்களை ஓதி யுணரத்தக்க பருவமெய்தி நின்றனர்.

இங்ஙனம் சாத்திரங்களை யுணரத்தக்க பருவமடைந்த ஆஞ்சனேயர் சகல கலைகளையு மொருங்கே யுணர்ந்த ஒரு ஆசாரியனை உள்ளத்தால் தேடி வேதசொரூபியான சூரிய பகவானே சிறந்த உபாத்தியாயனென்று கருதி விரைந்து சூரிய மண்டல மெய்திச் சூரியனைக்கண்டு யான் தேவரீ டரித்தில் வியாகரணாதி சாத்திரங்களைக்கற்குமாறு விரும்பி வந்திருக்கின்றேன் யான் வாயுகுமாரன் என் அன்னை அஞ்சனாதேவி என்று கூறினர்.

இம் மொழிகளைக் கேட்ட சூரிய பகவான் நம்மைப் பிடித்துத் தின்னக்கருதிச் சில காலத்துக்கு முன் பேருரு வங்கொண்டு வந்தவ னிவனன்றோ இவனிடத்தில் நாம் பகைவைத்துக் கொள்ளப்படாது இவன் கலைகளைக் கற்க விரும்பி வந்திருக்கின்றான். நாஞ் சொல்லோம் மற்றெவ ரெவரிடமேனுஞ்சென்று கற்றுக்கொள்ளென்றுசொன்னால் இவனால் நமக்குத் தீங்கு நேரிட்டாலும் நேரிடலாம் இதற் கென் செய்வது என்றுலோசித்து இவ்வாறு கூறினன்.

மாருதி! யான் எப்பொழுதுஞ் சுழன்று கொண்டே இருக்கும் இந்த ரதத்திலிருந்து கர்மசாட்சி யென்னு முறையில் மாறுது நடக்கவேண்டும் இந்த ரதத்திலோ பூரணமாக இருக்க வேண்டியவர்கள் இருந்து தத்தந் தொழிலைச் செய்கின்றனர். இந்த ரதத்துக் குள்ளிருந்து நீ பாடங்கேட்கவும் நானுரைக்கவுங் கூடாது இதற்கென் செய்யலாம் நுண்ணறிவினை யுடைய மற்றோரிடத்துச் சென்று கலைகளைக் கற்றுக் கொள்ளென்று கூற யான்

விரும்புகின்றே னில்லை. உனக் கெவ்வாறு கலை கற்பிப்ப தென் றாலோசிக்கின்றேன் என்ற சூரியனுடைய வசனங் களைக்கேட்ட அனுமார் ஓ தேவனே! உம்முடைய இந்த ரதத்தின் பின் புறத்திலுள்ள ஒற்றைச் சக்கரத்தின் மீது யான் நின்று உம்மிடங் கலைபயின்று கொள்ளுகின்றேன் என்றவுடன் சூரியபகவான் அவ்வாறு நிற்கக் கூடுமாயின் நான் கலைகற்பிக் கின்றேனென் றுரைத்தனர்.

உடனே யாஞ்சனேயர் சூரியனது ரதத்தினமைப்பை யுற்றுப்பார்த்து இவ்விரதம் ஏனையரின் இரதம் போன்ற தன்று. இது ஒரு சக்கரத்தை யுடையதாயு மலையினுச்சி யில் வைக்கப்பெற்ற தம்பத்தினை யுடையதாயும் விசித் திரமானதாயும் விளங்குகின்றது. இதன் ஒற்றையான சக் கரத்தில் நின்றே நாம் இத்தேவனிடம் கலை ஞானங்களை யுணருதல் வேண்டும். என்று தீர்மானித்து ஓதேவனே! யா னித்தேரின் சக்கரத்தினின்று கலைகளைக் கற்றுக்கொள்ளு கின்றேன் என்றனர் அதுகேட்டு சூரிய னவ்வாறே செய்க என்றனன்.

பின்னராஞ்சனேயர் எவராலுமாகாத ஆச்சரியச்செய லாற் சூரியரதநேமியி லொருகாலு மதன் தண்டமமைந்த மானசோத்தர பர்வதத்தின்மீதிற் பொருத்திய மற்றொரு காலினையுமுடையராகி நின்றனர். இவரது நிலையைக்கண்டு

ஆச்சரியமடைந்த சூரியபகவான் ஆஞ்சனேயரைப்பார்த்து ஓ மஹா வீரனே நின்னனையபராக்கிரமசாலிகளெவருமிலர் ஒரு கணப்பொழுதுக்குள் ஒரு லட்சத்து எண்பதினாயிரம் யோசனை தூரமோடும் விசையினையுடைய இந்த ரதநேமியின்மீது யிவ்வாறேறி நிற்கத்தக்கவர் யாவர்? என்னிடம் இனி நீ எவ்வளவு கேட்டுக்கொள்ள வேண்டுமோ அவ்வளவுங் கேட்டுக் கொள்ளலாமென நவவியாகரணங்களையும் பிறநூல்களையும் முறையே யுரைத்தருளக் கேட்டருளி நவவியாகரண பண்டிதனென்னும் பெயருடன் விளங்கினார்.

இதனை,

கண்டில லுலகமூன்றுங் காலினாற் கடந்து கொண்ட
புண்டரீ கக்கணாழிப் புரவலன் பொலன்கொள் சோதி
குண்டல வதனமென்றாற் கூறலாந் தகைமைத் தன்றால்
பண்டைநூல் கதிரோன் சொல்லப் படித்தனன் படிவமம்மா.

என்பதனு லுணர்க.



௪-வது.

# பிலவங்க ரக்ஷண பராக்கிரமம்.

---

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

குருட்டொருக் குழாமதெ னென்னக் குகையிடைத் தடுமாறுற்றில்
விருட்டிடை நின்னையன்றி யிலைதுணை யென்றார் தம்மைத்
தெருட்டிநற் கூலஞ்சேர்த்தித் திகழ்வெளி யிடத்தி லுய்த்த
அருட்டிரு வனுமன்செய்ய வடியிணை முடிமேல் வைப்பாம்.

(இ-ள்.) பிறவிக் குருடரின் குழாத்தைப் போல குகைக்குட் கிடந்து தடுமாறி இவ்விருட்டி லுன்னையன்றி எங்கட் குற்றதுணை யெவரு மிலையெனக் கூறிய வானர வீரரைக்குறித்து அஞ்சன்மின் என்று கூறித்தமது நல்ல வாலைப் பிடித்துக் கொள்ளச் செய்து நல்ல ஒளியுள்ள இடத்திலவரை யழைத்துச் சென்றவரைக்காத்த கருணையினையுடைய அனுமானது செவ்விய வுபயசரணாரவிந்தங்களைத் தலைமீது வைத்துக் கொள்ளுவோமாக-எ-று.

## இதன் விவரம்.

சீருஞ் சிறப்புமமைந்த இந்த உலகத்தில் கிருதயுகத்தில் விச்சிரவஸென்று பெயரமைந்த ஒரு சிறந்த மகரிஷி இருந்தார். அவர் தர்மசீலரான பரத்துவாஜ முனிவன் மகளை விவாஹ முறையிலணைந்து ஒருபிள்ளையைப் பெற்று [illegible] தந்தையினுஞ் சிறந்த வொழுக்க முடையவனாகி அருந்தவம் புரிந்து பிரமதேவனுலொரு புஷ்பகவிமா

னத்தையும் அளவற்ற ஐசுவரியங்களையு முடையவனுகி வைசிர வணனென்று பிரசித்தனுகி ஸ்ரீமன் நாராயணரா லழிக்கப்பட்ட அசுரரின் பழைய நகரமான லங்கையை யடைந்து தந்தையினுத்தாரப்படி சுகமாக வாழ்ந்தனன்.

இவனிவ்வாறு வாழ்தலைக்கண்டு பொறாமை யுற்ற மாமிச பக்ஷணியான சுமாலியென்னும் ஓரசுரன் தன் மன தினுள் நாமும் நம்மினத்தரூந் துயரின்றி வாழ்ந்த லங்கா புரியில் குபேர னென்பான் வாழ்கின்முனே தேவரினத் தைச்சேர்ந்த விவனையோட்டி லங்கையை எவ்வாறு நாங் கைப்பற்றுவது நம்மகளைக்கொண்டு தானிந்த எண்ணத் தை நிறைவேற்ற வேண்டும் நம்முடைய புத்திர பௌத் திரரு ளெவராயினுமந்த லங்காதிபராணற்போதும் என்று தீர்மானித்துத் தன் குமாரியும் அழகிற் சிறந்தவளுமான கைகசியைப்பார்த்து மாதே!

"வலியா ரெல்லாங் கீழ்ப்பட்டு மற்றையவரே மேற்பட்டுப்
புலிவாழிடத்தே பசுவுறைந்து போராராழித் தேராராய்
அலியா மிவனேயர்ணுகி யஞ்சாதி லங்கை யுட்புகுந்து
நலிவாரின்றி யரசாளக் கண்டோ நாரா யணனுலே"

என்றுகூறி என் குலவிளக்கே நினது குலம் நாராயணனுற் பாழாகியது அதோபார் புட்பக விமானத்தி லொருவன் செல்கின்முனே அவன் மஹா வீரர்களான நின்குலத்த வர்க ளிருந்தரசுபுரிந்த லங்கையை யாள்கின்முன் இவன் வாழ்வது புலிவாழு மிடத்திற் பசுவாழ்வது போலன்றி வேறன்றே கன்னிகையுங் மணப்பருவமானவளும் அழகிற்

சிறந்தவளுமான நீ இவன் றந்தையான விசிர வசுக்கே மனைவியாகி இவனை வெல்லத்தக்க புதல்வர்களை அல்லது சமானமான புதல்வர்களைப் பெறக்கடவை யென்றனன்.

அவன் வாய்மொழி கேட்ட கைகசி யென்பவளும், அதற்கிசைந்து அம்முனிவனுச்சிரமத்தையடைந்து அவன் அக்கினிகாரியமுடித்து நாலாவ தங்கியையோம்ப வெளிப் படுங்காலத்தில் அவனெதிரே.

"வைத்தகலச வனமுலையாள் மருங்குவளைத்து மலர்க்கமலம்
ஒத்தசரணப் பெருவிரலா லொல்கி நின்று நிலங்கீறி
மைத்தகுழலாள் மற்றவன்முன் மலர்மேன் மடந்தையெனநின்றாள்"

என்றபடி பாரித்த தனங்களுடன் கமலாசனியான ஸ்ரீ தேவியோ வெனக்கண்டார் கருதத்தக்க அழகினளாய்த் தோன்றி நின்று நாணத்தால் தலைகவிழ்ந்தவளை யொப்பத் தலைகவிழ்ந்து காற்பெருவிரலால் நிலங்கீறி நின்றனள்.

மோகன முறுவலுடன் றலைகவிழ்ந்து நின்ற அக்கன்னிகையை யுற்றுப்பார்த்து விஸ்ரவஸ முனிவன் மாதே நீயார்மகள் நின்பெயரென்னை. யென்றவுடனன்னாள் யான் சுமாலிபெற்றமகள் பெயர் கைகசி வந்த காரியத்தை நீங்களே தெரிந்து கொள்ளுங்க ளென்றவுடன் முனிவனவள் வந்த செய்தியையுணர்ந்து மிக்க கருணையுடன் அவளைப் பார்த்து நீ புத்திரப்பேற்றைக் கருதிவந்தனை நீவந்த சமயம் கெட்ட சமயமாதலால் நின்னிடைப் பிறக்கும் பிள்ளைகள் வரத்தாலுங் குணத்தாலுந் துட்டராய் விளங்குவார்க

ளென்ன வண்ணாள் மூவுலகமும் புகழுமுனி நாதனான நின்
னிடையான் பெறுமக்கள் எவ்வாறு தீயராதல் கூடுமென்ன
அன்னோன் சிறிதாலோசனை செய்து கடைசி மைந்தன்
குணத்திலும், வரத்திலும், சிறந்து விளங்குவானென்று
கூறியவளைச் சூரியனத்தமிக்கு மந்திரோரத்திற் சேர்ந்தனர்
சேர்ந்தவுடன் பத்துத்தலையும இருபது கைகளுமுடைய
ஒருவன் பிறந்தான் பின்னர் கும்பகர்னன் சூர்ப்பநகை
விபீஷணனென்ன நான்கு புதல்வர்கள் பிறந்தார்கள்.

அங்ஙனம் பிறந்த மக்களைப் பார்த்துக் கைகசியான
வள் மக்களே செல்வம் பெறுவான் தவஞ் செய்யுங்கள்
அதோ வந்திருக்கின்ற வைபவத்தை யுடையவ னுங்கள்
தமையன் அவனைப்போல செல்வமடையும்வண்ணம் அருந்
தவம் புரியுங்களென்ன விசிரவசி னிடமே உபநயனாதி எல்
லாச்சடங்கு நிறைவேற்றப்பட்ட ராவண கும்பகர்ண விபீ
ஷணர்கள் கோகர்ணமென்னும் க்ஷேத்திரத்தை யடைந்து
பதினாயிரம் வருஷம் அருந்தவஞ் செய்தார்கள். இவர்க
ளுள் தசக்கிரீவனான ராவணன் ஆயிரம் வருஷத்துக்கொரு
முறை ஒரு தலையை வெட்டித் தேவபலியாக விட்டு இவ்
வாறே ஒன்பதினாயிரம் வருஷத்துள் ஒன்பது தலைகளையும்,
வெட்டிவிட்டு ஓமித்து பதினாயிரம் வருஷமானவுடன்,
மிகுதியுள்ள ஒரு தலையையும் அறுப்பான், வாளெடுத்த
சமயத்திற் பிரமதேவனெய்தி வேண்டிய வரங்களை அவ்
விராவணற்கு மவன் தம்பிமாருக்குங் கொடுத்துச் செல்ல,
வரம்பெற்றவர்கள் குபேரனை லங்கையினின்றும் அளகா
புரிக்குப் போகச்செய்து தசக்கிரீவன் சகோதரர்களுடன்

ங்கா நகரத்தையடைந்து பிரகஸ்த சுமாலிகளா லழைப் பிக்கப்பட்ட அசுர சைனியங்களுடன் வாழ்ந்து மய னென்று பேருள்ளதைத்திய னளித்த திரிலோக சுந்தரி யான மந்தோதரியை விவாகம்புரிந்து மேகநாதனென்னும் ஸ்ரீனையைப்பெறறுச் சிறப்புற வாழ்ந்தான்.

தன் தம்பியாரான இருவரிற் கும்பகர்ணனுக்கு மஹா பலிச் சக்கரவர்த்தியின் குமாரியான விருத்ரஜ்வாலாவை யும், விபீஷணனுக்கு ஜயிலூஷனென்னுங் கந்தருவன் மக ளான அழகிய சரமாவையும், விகடரூபியான சூர்ப்ப நகைக்கு காலகேய வங்கிசத்தானன வித்யுஜி யென்பவனே யும், மணமுடித்து திரிலோகங்களும் தன்னதாகப் பெற் றுக் கொடுங்கோலரசனுக வாழ்ந்துவந்தான்.

இவனது வாழ்கைப் பாட்டினல் வருந்தி இவனை நா சஞ்செய்ய வேண்டுமெனத் தேவர், முனிவர், முதலியோர் ஆலோசனை செய்து மேருவினெரு புறத்திலிருந் தகில லோக நாதனன் ஸ்ரீமன் நாராயணனைத் தியானஞ் செய்த னர் செய்தவுடன்.

> "கருமுகில் தாமரைக் காடு பூத்துநீ
> டிருசுட ரிருபுறத் தேந்தியே டவிழ்
> திருவொடும் பொலியவோர் செம்பொற் குன்றின்மேல்
> வருவபோற் கலுழன்மேல் வந்து தோன்றினன்."

என்றபடி ஸ்ரீ நாதனன பகவான் வைனதேயன் மீதெழுந் தருளினும் எம்பெருமானது வருகையைக்கண்ட பிரமா

ருத்திர இந்திராதி தேவர்கள் தத்தம் ஆசனங்களின்றும், விரைந்தெழுந்து நாராயணுயநமஃ கோவிந்தாயநமஃ அச்சுதாய நமஃ என நமஸ்காரம் செய்தார்கள். செய்தவர்களைக் கண்டு குளிரக்கடாக்ஷித்து நீவிரனைவரும் கவலை யுடையீராக இருக்கின்றீர்களேநும், மனக்குறை யென்னையென்றலுமன்னோர் கிருபைக்கடலே நீருள்த் தடுமாறுவானுக்கு நிலைக்கு மிடங்கிடைத்தாற் போலவும், வெய்யலில் வருந்திய சிற்றுயிர்க்கு விகசித வலர்களையுடைய நறும்பொழில் கிடைத்தாற் போலவும், பன்னுளாக வருந்தும், பசியாளனுக்குச் சின்னுட்பல்பிணிச் சிற்றவினையோட்டுந திவ்வியாமிருதங் கிடைத்தாற்போலவும், தேவரீரையடையப்பெற்ற நாங்கள் இனி இராவணுதிகளா லடையுந் துன்பத்தினின்று நீங்கிச்சுகமுறுவேமெனை, வேதநாதன் அவர்களைப் பார்த்து பிரமருத்தி ரேந்திராதி தேவர்களே உங்களுக்குண்டாயுள்ள இப்பாரிய துன்பத்தை நீக்குதற் கொருலீலைசெய்தும், அன்னதின்னை தென்றறிய வேண்டுதிரேற் கூறுதும் பூவுலகத்திற்சிறந்த அயோத்தியென்னு நகரத்திற் கசரத துரகபதாதிகளை யுடைய தசரத னென்பானெருமன்னவன் நீதிநெறிகோடா தரசுபுரிகின்றுன். அன்னேனும் அவன் மனைவியும் முன்னமே யெம்மைப் புதல்வனுகப் பெறவருந் தவம் புரிந்துள்ளார், அவனது புதல்வனுகவருகின்றும். நீவிரும் வானரவீரராகி எம்முடனாங்கு வருதிர் நாம் ராவணனையழித்து மஞ்சனம்பின் என்று கூறதலும், தேவரனைவரு மவ்வாறேயென வடிபணிந்தனர். தேவநாதனும் கருடப்பரியிவர்ந்து தம்முல கெய்தினர்.

அறவாழி யந்தணனிட்ட கட்டளைப்படி அமரரனை வரும் தத்தம் மமிசர்களால் வானர வீரர்களாகிக் கிட்கிந் தைமுதலிய இடங்களிற் பகவானது வருகையை எதிர் பார்த்துத் தங்கியிருந்தனர் பின்னர் பாலாழிப்பள்ளியில் பாப்பணைமீது ஆனந்த நித்திரை செய்யுமையனும், வதிட் டன்வாய்மொழியாற் கலைக்கோட்டுமுனிவன் செய்தயாகத் திற்பாயஸமுண்டாக்கிப் பூதத்தின்வழி தசரதனுக்களித்து அவனால் அவன் தம்மனைவியர் மூவர்க்கும் பங்கிட்டளிப் பித்துக் கருவுறுவித்துத் தம்மைமகவாகப் பெறவிரும்பிய கோசலாதேவியின் புதல்வராகத்தாமும் தமது சங்கத்தை கைகேசி குமாரனாகவும், தமதுபாயலையும் சக்கரத்தையும், சுமித்திரை புதல்வர்களாகவும் தோன்றச்செய்து ராமலக்ஷ் மண பரத சத்துருக்கினர் எனப்பெயர்தாங்கி தசரதனது பிள்ளைக்கலியையகற்றித் திருமணப் பருவமெய்தித் தந்தை யினனுமதிப்படி இளைய பெருமாளுடன் வர விசுவாமித்திர முனிவருடன் சென்று தாடகையைச்சங்கரித்து அகலிகை யின் சாபமகற்றி மிதிலையிற்சென்று சிவன் வில்லையொடித் துப்பிராட்டியைமணந்து பரசுராமன் அகந்தையையகற்றி அயோத்தி யடைந்து துவாதச ஸம்வத்ஸரம் பிராட்டி யுடன் சுகலீலானுபவத்திலிருந்து மாதுர்வாக்கிய பரிபால னார்த்தம் பிராட்டியுடனும், இளைய பெருமாளுடனும், சதுர்த்தச ஸம்வத்ஸரம் வனவாசஞ் செய்து வருவான். அயோத்தியினின்றுஞ் சென்று குகன்பரத்துவாஜன் முத லியோருக்கு விருந்தினனாகி சித்திரகூடத்திற் சில கால மிருந்து பின் தண்ட காரணிய மடைந்து அடைக்கலம்

புகுந்த முனிவர்கட் கபயமளித்து இடையிடையே வந்தெதிர்த்த அரக்கர்களை அதஞ்செய்து பஞ்சவடியென்னுமிடத்திற் பன்னசாலைசெய்து முனிவிர்த்தியை அனுசரித்திருந்தகாலத்தில் இராவணன் தங்கையான சூர்ப்பநகையெய்திப் பெருமாளைக்கண்டு காமுற்று மாயவுருவந்தாங்கி எதிரேநின்று தங்காதலையும் தன் வரலாற்றையும், ராவணாதிகளின் சிறப்பையு மெடுத்துக் கூறவவர் யான் மனைவியையுடையேன் என்னிளையவன்தனியே இருக்கின்றானென்ன அவள் அவரிடஞ்சென்று தன் காதலையுரைக்க அவர் சிறி நாசிகாச்சேதனஞ் செய்தனுப்ப வவள் உடனே தன்சகோதரர்களான கர தூஷண திரிசிரர்களைக் கொண்டு பெரும் போருண்டாக்கிவைக்க அவர்களனைவரையும் பெருமாள் ஏகனாகநின்று நாசஞ்செய்யக் கண்டவவள் இலங்கைக்குச் சென்று ராவணனைக்கண்டு தனது விபசாரத் தொழிலை மறைத்துத் தசரதன் மகனான ராமன்மனைவி பேரழகுடையவளாக இருந்தமையி னவளை உனக்காக எடுத்துவர முயன்றேன் எனது முயற்சியைக் கண்ட மனிதனான லக்ஷுமணனென்பவன் உன்னை மதியாதென்னை யிவ்வாறு செய்தனன். ராமன்மனைவியான சீதையென்பவளுனக்கே தகுந்தவள் நீ எவ்வாறாயினுமவளை யெய்திச் சுகிப்பாயாக வென்று கூறியழுதனள். தங்கை யழுவதற்காக ரோஷங் கொள்ளாமற் சீதா பிராட்டியைக் கிரகிதற் கென்ன வழியென் றாலோசித்துத் தன்னினும் பழியோனான மாரீசனென்னு மசுரனையழைத்து மாமா நீ மாயமாவென்று நினைவ்வாதே நான்சொல்லும் வண்ணஞ் செய்யக்கடவை தாக

ராமனென்பான் தண்டகாரணியத்துக்கு வந்திருக்கின்ருனும் அவன்|மனைவியழகிற் சிறந்தவளாம். அவளைக் கண்டு வந்த தங்கைசொன்னுள் நானவளையடைதற்கு நீயொருபாயஞ் செய்யவேண்டும். அஃதென்னை யென்ருல் ராமனைச் சீதையினருகினின்று பிரித்தலேயாம் என்றனன். என்றது கேட்ட மாரீசன், ராவண ராமன் சாமானிய னல்லன் அவனம்பினுல் யான்முன்னரே யடிபட்டுக் கடலில் ஆழ்ந்தொளித்தவன் இப்பொழுதவனெதிரிற்சென்ருலவனென்னைக் கொல்லுவான் அவனைவெல்ல வெவராலுமாகாது என்ருன் அதுகேட்ட ராவணன் நீயானிட்ட கட்டளையை மீறி நடப்பாயானுலுன்னை யிந்தவாளுக் கிரையாக்குவேன் என்ருன். அதுகேட்ட மாரீசனிப் பாவிகையி லிறப்பதனிலும் ராமன் கையிலிறந்தாற் புண்ணிய முண்டென அவ்வாறே செய்கின்றேனெனத் தண்டகாரணிய மெய்தினுன்.

எய்தி ஒரு பொன்மானி னுருவமெய்திப் பிராட்டியினெதிரே யங்கு மிங்குமாக உலாவினுன். அசுர மாயையெனக் கருதாது பிராட்டி பகவானைப்பார்த்துப் பிராணநாதா! எம்மானினுஞ் சிறந்த இம்மானைப் பிடித்தெனக்குத் தருகவென்றது கேட்க இளையபெருமாள் அண்ணலை நோக்கி இது மாயமான் இதனைத் தொடர்ந்து போனுலெதுவேனுந் தீங்குநேரிடுமெனக் கூறியுங்கேளாது பெருமாள் வில்லுமம்புமாக அதனைக் கொல்லாது பிடிப்பான் தொடர்ந்து செல்பவர் லக்ஷ்மண சீதை பத்திரமென்று கூறிச்சென்று மாயமானுல் நெடுந்தூர மழைக்கப்பட்டு

அதனை உயிருடன் பிடிக்க முடியாதென வுணர்ந்து அம் பெய்ததனைக் கொல்லுதலும், மாயமானன மாரீசன் நிச வுருவுடன் லக்ஷ்மணா வென்றொரு கூச்சலிட் டுயிர்விடுத் தனன். இவ்வோசையைக் கேட்ட பிராட்டி நனிவருந்தி இளைய பெருமாளை நோக்கி எம்பெருமானுக் கென்ன வாபத்து நேரிட்டதோ விரைந்து சென்று தவுதிரென இளையபெருமாள் அன்னாய் அஞ்சவேண்டாம் நம்பெரு மாளுக் கொருகாலத்து மாபத்தெனவொன்று நேராது. தேவரீரைக் காத்து நிற்கும் வண்ணம் ஆணையிட்டுச் சென் றுள்ளாராதலின் யானிவ்விடம் விட்டு விலகக்கூடாதவனா யிருக்கின்றேன் என. பிராட்டிகர்ண கடூரமான மொழி களால் இளையபெருமாளைக்கடிதலும் அவர் எதிர்காலானு பவத்துக் கேற்றாங்கு பிராட்டி மனநிலைமாறியதென நனிக வன்றுராமபிரானை நோக்கிச் சென்றனர் ஆச்சிரமத்தில் ராமலக்ஷ்மணர்கள் இலர் சீதையேதனித் திருக்கின்றா ளெனவுணர்ந்த தூர்த்தனைராவணன் சன்னியாசிவேடத் துடன் ஆசிரமத்து ளுழைந்தனன் இவன் வருகையைக் கண்ட பிராட்டி அதிதி ஸத்காரம் செய்து ஆஸனத்தி லிருத்தி உபசரித்துப் பெருமாளும், இளைய பெருமாளும், வருகிறபரியந்தம் இருக்கும்வண்ணங்கூறிய காலத்திலவன் சில அடாத மொழிகளைக் கூறித்தனது நிசரூபத் துட னின்று தரையுடன் ஆசிரமத்தைப்பெயர்த்துத்தனதுரதத் தில் வைத்துக்கொண்டு லங்கையை நோக்கிப்போகும் வழி யிலெதிர்த்த சடாயுவென்னுங் கழுகரசனையுங் கொன்று கிட்கிந்தை வழியாக அந்தரமார்க்கத்திற் சென்று லங்

கையிலொரு சிஞ்சுபாவிருக்ஷச் சோலையில் பிராட்டியைச் சிறைசெய்து தனக்கிணங்குமாறு புத்தியைத் திருப்புதற் கனேகம் அசுரிகளை யேற்படுத்திவைத்து ராமபிரானுடைய வருகையை யெதிர்பார்த் திருந்தனன்.

இஃதிங்ஙனமாக மாரீசனைக் கொலைபுரிந்த பின்னர் ஆசிரமத்துக்கு நெடுந்தூரம் வந்துவிட்டோம் மானாகவந்தவனு மோரசுரனாதலால் வேறசுரர்களா லாசிரமத்தி லொருவேளை யெதுவேனுந் தீங்கு நேரிட்டாலும் நேரிடலாம், இறந்த கொடியன் யானழைத்த மாதரியாக லக்ஷ்மணா வென்றழைத் திருக்கின்றான். ஒருவேளை நம்மீதுள்ள பக்தி விசேஷத்தால் லக்ஷ்மணன் ஜானகியைத் தனியேவிடுத்து நம்மை நாடிவந்தாலும் வருவன்.

அங்ஙன நாங்கருதியவண்ண மிளையோன் ஆசிரமத்தைவிட்டு விலகிவந்தா லெதுவேனுங் கெடுதிநேரிடும் ஜனகிக்கு, அதற்குள் நாம் விரைவாகப் போக வேண்டுமென ஓட்டமும் நடையுமாக வருகிற சமயத்தில் வழியில் தம்மைநாடி விரைந்து வராநின்ற இளைய பெருமாளைக்கண்டு உன்னையங்கிருக்கச் சொன்னேனேயேன்வந்தாய் என்னப் பிராட்டியாற் கடிந்துரைக்கப் பட்டமையால் தேடிவந்தே னெனக் கேட்டு இவை யசுரர்களின் சேஷ்டைகளே யாம் விரைந்து செல்வோமென ஆசிரமத்தி லெய்தி நோக்கிய காலத்தி லாச்சிரமந் தோண்டப்பட்டிருத்தலும் குதிரைக் காலடி அசுரனது பெரியகாலடி ரதஞ்சென்ற சக்கரதாரை யாதிகளைக்கண்டு நனிவருந்தி இவ்வாறு மொழிழிருந்த

தோவென வருந்திச் சக்கரதாரை சென்றவழிச் சென்று ஜடாயு கிடந்த விடத்தெய்தி அவனால் அசுரனான ராவணன் பிராட்டியை யெடுத்துச் சென்றானென் றுணர்ந்து இறந்த சடாயுவுக்குத் தீக்கடன் செலுத்திப்பின் சக்கர தாரை யின்மையாற் பலவழியிலுந்தேடி மிக்ககவலையுடன் சபரியாச்சிரம மடைந்து அவள் வாய்மொழியால் கிஷ்கிந்தையை நோக்கிவரும் வழியில் ஒருவனத்திற் பெருமாளை யும் இளைய பெருமாளையுங்கண்ட வாலியொழிந்த வானர வீரர்கள் தமது சத்துருக்களென முறைபிறழ்ந்து கருதி ஓடி ஒரு மலைக்குகைக்கு ளொளித்து கொண்டார்கள். இவர்க ளிவ்வா றொளித்ததைக்கண்ட ஆஞ்சனேயர் நீங்கள் நான் வருமளவுமிங்கேயே இருங்கள் யான் சென்றவர்களை யின்னவரென்றறிந்து வருகின்றேனென ஒரு பார்ப்பனப் பிரமசாரி உருவந்தாங்கி இராமலக்ஷ்மண ரெதிரே யெய்தி ஆசிகூறி நின்றனர்.

நின்றாரைக்கண்ட விருவரில் இளையபெருமாள் நீயாவனெனவினவத் தன் வரலாற்றினை யுரைத்து நீவீர் யாவரென்று கேட்டனர் அதற்கிளையோன் ஸ்ரீராம பிரானது வமிசாவளியை முறையேயுரைத்து மாதுர்வாக்கிய பரிபாலனார்த்தம் பதினான்கு வருஷம் வனவாசம் புரிவான் வந்ததும் இடையிற் பிராட்டியை அரக்க னெடுத்துச் சென்றதையும் பிராட்டியின் வியோகத்தாற் பெருமாள் சித்தசபல முற்றிருத்தலையும், மறையாது கூறுதலும், மாருதி திருவுள்ளத்திற் சாலமகிழ்ந்து இவர் நட்புக்

கிடைத்தால் வாலியின் உபத்திரவத்தி னின்றுஞ் சுக்கிரீ வன் விடுபடுவானென்றும், இவர்கள் தேவபுருஷர்க ளென் றும் திருவுள்ளத்திற் கருதி ஸ்ரீராமசந்திர மூர்த்தியி னடி யிணை மலர்களை வணங்குதலும், பெருமாள் பெரியோய் என்னை? தகாது செய்தனை மறைக்குல மாணியாகிய நீ எம் மை யாசீர்வதித்தற்கே யுரியையாகவு மடிபணிந்ததென்னை நின் வாய்மொழிகளைக் கேட்டால் நவவியாகரண பண்டித னாக விருப்பாயெனவு மெண்ண விடமுண்டா கின்றது. நின் வரலாறென்னை யென்றவுடன் அந்தணப் பிரமசாரி யின் கோலத்தையகற்றி வானரவீர னுருவினை யெய்தி நின்றனர்.

அப்பெரிய வுருவினைக் கண்டாச்சரியமெய்திய பெரு மாள் இளைய பெருமாளைப்பார்த்து,

தாட்படாக் கமலமன்ன தடங்கணான் றம்பிக்கம்மா
கேட்படா நின்றநீக்கிக் கிளர்படா தாகியென்றும்
நாட்படா மறைகளாலு நவைபடா ஞானத்தாலுங்
கோட்படாப் பதமேயைய குரக்குருக் கொண்டதென்றான்.

என்றபடி இவ்வானரவுருவம் வேதங்களாலுங் குறித் துரைத்தற் கியலாத பரம்பொருள் கொண்ட வுருவமே யன்றி வேறன்றெனப் புகழ்ந்துகூறி இவனேவல் செய்யப் புகுவானுன கவிக்குலவேந்த னெவ்வளவு சீரியனாக விருப் பானென்று மகிழ்ந்துரைத்துச் சீரியோய் நின்னுலினி என் னெண்ணமு நிறைவேறும் நின்னரச னெண்ணமு நிறை வேறும் நின்னரசனை யழைத்து வருகவென்னலும் விரைந்து

சென்று ஆனந்த நடனம் புரிவாராய் அரசே வாலிகாலன் வந்திருக்கின்றான் , வருகவென் றழைத்துவந்து ஸ்ரீ ராம பிரானிடம் சிறந்த ராமபிரானும் சுக்கிரீவனைக் காடாலிங்க னஞ்செய்திருத்தி அவன் வரலாறுகளை ஆஞ்சனேயர் வழி யுணர்ந்து மராமரமெய்து வாலியை வதைத்துச் சுக்கிரீவ னுக்கு ராஜநீதிகற்பித்து லக்ஷ்மணரைக்கொண்டு வான ராதிபனாக மகுடஞ்சூட்டுவித்து மழைக்காலந் தீருமளவு மவர்களைக் கிஷ்கிந்தையிலிருந்து பின்னரெய்திப் பிராட்டி யைத் தேடித்தருமாறு கட்டளை யிட்டருளச் சுக்கிரீவன் மாரிக்காலங்கழித்தும் வராது மதுவருந்தி மயங்கிக்கிடக்க இளையபெருமாளால் அவனுக்குப் புத்திபுகட்ட எழுபது வெள்ளம்சேனை வீரருடன்வந்த வானராதிபனைப் பார்த்து ஸ்ரீராமபிரான் மகிழ்ந்தனர்.

உடனே இளயபெருமாள் எரிகதிர் மைந்தனை சுக கிரீவனைப்பார்த்து இனிக் காலதாமதஞ் செய்வதிற் பய னில்லை எட்டுத்திக்குகளிலும் பிராட்டியைத் தேடுதற் குரி யாரை விரைந்தனுப்புக வென்றவுடன் பெருமாள் வானர ராசனே நீகொண்டு வந்துள்ள முறைமையும் மானமும் பகைவரை வெல்லுந் திறமுமமைந்த தன்மை யினவாய் அணிவகுப்புடன்வந்த இவ்வானர சேனைக்கொரு கணக்கு முண்டோவென்று வினவினர்.

பெருமாள் திருவுளக்களிப்புட னிவ்வாறு கேட்டரு ளுதலும் வானராதிபன் வணக்கத்துடன் எழுபது வெள் ளஞ்சேனை யென்னுமொரு கணக்காக இதனைக் கூறுவார்

கள் இச்சேனைகளின் தலைவனாக வுள்ளவன் நீலனென்னும் இவ்வானரவீரன் என்று கழறினான்.

பின்னர் சக்கரவர்த்தி திருமகனாரது திருவுளப்படி சுக்கிரீவன் அனுமாரையழைத்து ஐயனே நின்றந்தையை யொப்ப மூன்று லோகங்களிலும் விரைந்துசென்று வருமாற்றல் நினக்குள்ளதனை நீமறந்து விரைந்துலவுங் குரங்கின்செய்கையில் நிற்றிபோலும் நீயும் இவருமாகச்சென்று சீதாபிராட்டியைப் பாதலத்திலும் பூமியிலும் தேடுங்கள் சுவர்க்கவுலகம் பெருமாட்டியைச் சிறைப்படுத்தற் குரிய இடமன்றதனா லவ்விடத்துக்குப் போகவேண்டாம் எங்குந்தேடி விரைந்து வருதிர்

ஆனால் ராவணனுடைய உயர்ந்த நகரமானது தென்றிசையி லுள்ளதென்று கூறக்கேட் டிருக்கின்றேன் என் னினைவுமவ்வாறே ஆதலால் மாருதியே நீயேயத்தென்றிசை யிற் சென்று எனக்கு வெற்றியை தரத்தக்கவன்.

ஓ தெளிவினையுடைய அனுமானே இவ்வள்ளலின் மனைவியைத் திருடிய திருட்டுக் கொலைபாதகனான அவ் வரக்கன்போகக்கண்டதும் தெற்குத்திசையாகவே யென்ப தொரு நினைவுமெனக் கிருக்கின்றதென் றெண்ணுக்கட வாய் மாருதி! நின்னுடன் அங்கதனையுஞ் சாம்பனையும் இன்னம் பல வீரரையு முடன்கொண் டிரண்டுவெள்ளம் சேனைகளுடன் செல்க என்று கூறினான், கூறியவன் ஒரு மாதத்துக்குள் விரைந்து திரும்பிவருதல் வேண்டுமென் றுங் கூறினான்.

நீவீர் செல்லுங்கால் ஒளிபொருந்திய ஆயிரம் கொடு முடிகளுடன் காணப் படலால் பரப்பிரமமாக எண்ணி வணங்கத்தக்க மேன்மை யினையுடைய விந்த மலையை யடைந்து அங்கு நன்முய்த் தேடுங்கள் தேடினுலங்குக் காணப்படாதுபோனுல் அங்கு நின்றுந் தெற்கேசென்று தேவரும் வந்து சங்கற்ப பூர்வமாக ஸ்நானஞ் செய்கின்ற பெருமிதமமைந்த நருமதா நதியின்கரையில் வண்டுகள் பஞ்சாக்கரேபிபாடுஞ் சோலிகளிலும், பலவகை மணிக்குவால்கள் நிறைந்த இடங்களிலும் நன்குதேடக் கடவீர் தேடினுலங்கும் பிராட்டியைக் கண்டிலீரேல். அங்கு நின்றும் அழகிய மேகலையணிந்த சுவர்க்கலோகத்துத் தேவ ரம்பையர் ஆடுகின்ற ஊஞ்சலின் மகிழ்வைத் தருகின்ற இசையாகிய மதுவினுல் புகைவன்னமான அசுணப்பறவைகள் ஆனந்தமாக நித்திரை செய்கின்ற சிறப்பமைந்த எமகூடமென்னு மலையினிடஞ் செல்லுங்கள் சென்று நன்கு தேடுங்கள் தேடிக்காணுவிடில் விரைந்து அம்மலையைவிடுத்துப் பம்பைக் கரைகளிலுந் தேடுங்கள் அங்குங் கண்டிலீரேல் அங்கு நில்லாமல் விரைந்து செவ்விய பிநாகி நதிக் கரையை யடைந்து அதன் அழகிய கரைகளிலும் பிராட்டியைத்தேடி அங்குங்காணுவிட்டால் அங்கு நின்றும் உலகளந்த பெருமானையொப்பச் சந்தனமுதலிய மரங்கள் நெருங்கியுயர்ந்து வளர்ந்து சூழ்ந்து விளங்குகின்ற விதர்ப்ப நாட்டிற்றேடுங்கள் அங்குங் காணுவிடில் முறையே பெரிய பல நாடுகளைக்கடந்து மிக்க நீர்வள மமைந்த தண்டகாரணியத்தை யடையுங்கள் அங்குப்பல விடங்களிலுந்தேடி

முன்னரகத்தி முனிவர் ஆச்சிரம மிருந்ததாக வுரைக்கப்
படுவதும் முண்டகத் துறையெனப் பிரசித்த மானதுமான
சிறந்த ஒரு சோலையுளது அங்கு அருந்தவர்கள் அநேகர்
வசிக்கின்றார்கள். அவர்களை யெல்லாங்காணும் பாக்கிய
சாலிகளாய் நீங்கள் உலகத்தில் நல்ல தருமசீலர்கள் தியா
னிக்கின்ற பரவஸ்துவை யொப்ப விளங்குமச் சோலையில்,
ஒழுக்கமமைந்த மங்கையர் வாய்போல செம்மையமைந்த
கனிகள் காலமில்லாத காலத்திற்காய்த்து விளங்குதலையும்
காண்பீர் சூரியனவ்வழியில் தெட்சிணாயன வுத்தராயன
கதியை யடைகிறதில்லை அவ்விடத்திற் சகல சுகானுபவங்
களையு முடையவர்களாகத் தேவர்களும் வாழ்வார்கள்.
அத்தகைய இடத்திலெல்லாந் தேடுங்கள் தேடியும் பிராட்
டியைச் காணாவிடில் அங்குநின்றும் சந்திரசூரியர்களுந் தங்
கிச்செல்லத்தக்க வுயர்ச்சியினையுடைய பாண்டு கிரியென்
பதிற்செல்லுங்கள் அம்மலையினருகில் மூழ்கினோர் பாவங்
களை யகற்றுவதும், பொன்னுமணியு முத்துமலரும் பிறவு
மிழுத்துவருஞ் சிறப்பினை யுடையதுமான கோதாவிரி
யென்னுஞ் சிறந்த நதியானது அப்பாண்டுகிரியின் றாழ்
வரையிலுள்ளது அவ்வாற்றைக்கடந்து தருமவழி போல
வும் கருணைபோலவும், விரும்பத்தக்க நன்னீர் நதியும்
போலக் குளிர்ச்சியமைந்து வெயில்வெப்ப மறியக்கூடாத
தாய் விரிந்தவலர்களையுடைய சோலைகளாற் சூழப்பெற்று
மணிகளின் ஒளியால் வழிதெரியும் சிறப்பினை யுடைய
நவணமென்னு மிடத்துச் செல்லுங்கள் சென்றவ்விடத்தி
லும் பிராட்டியைத் தேடுங்கள் அங்குங்காணாவிடில் அதற்

கப்பாலுள்ளகுறத்தியர் குருவியோப்புகின்ற கவண்கற்கள் சூரியகாந்தக் கற்களையொப்ப வெயில் வீசுகின்ற சிறந்த சந்திரகாந்த கிரியைக்காண்டிர் அங்கும் பிராட்டியைத் தேடுங்கள் அங்குங்காணுவிடில் அங்குநின்று கொங்கண நாடு செல்லுங்கள் அங்குந்தேடிக் காணுவிடில் குலிந்தத் துக்குச் செல்லுங்கள் அங்கும் பிராட்டியைத் தேடிக்கா ணுதிர் காணுவிடில் அங்குநின்றும் வணங்குவோர்க் கின்ப மளிப்பதும், புகுதற் கரியதுமான அருந்ததி மலையைச் சென்றடையுங்கள் அடைந்தங்கும் பிராட்டியைத் தேடுங் கள். காணுவிடில் அங்கு நின்றும் செல்வோரஞ்சத்தக்க வெப்ப மமைந்த பாலை வனங்களையும், காறுகளையும், அகன்ற பெரிய சுனைகளையும், அகிலுமாரமுந் திமிசும் வேங்கையும் உடையனவாய் மேகமுலவுந் தாழ்வரையினை வாயுள்ள பலமலைகளையும், நாடுகளையுங்கடந்து விடத்தினை யுடைய கண்டத்தினையுடைய அரவங்கட்கு அமிழ்தங் கொடுத்துத் தனது மாதாவான வினந்தையை அடிமைத் திறத்தினின்று நீக்கிய வைனதேயனது இடமான மரகத மலையைவணங்கி யதனருகாகச் சென்றால் மிக்க சிறப்பினை யுடைய திருவேங்கடத்தை யடைதிர் அங்கும் பெருமாட் டியைத் தேடுங்கள். தேடிக் காணுவிட்டால் அங்கு நின்று நீர்வளம் பொருந்திய தொண்டை நாட்டையடைந்து அங் கும் பெருமாட்டியை யாராய்ந்து காணுவிடில் காவேரி யாற்றின் நன்னீரினால் நனையப் படுகின்ற புண்ணிய பூமி யான சோள நாட்டையடைந்து இறைவியைத்தேடி யங் குங் காணுவிட்டால் அங்கு நின்றும் மணிமயமான மலை

நாட்டை யடைந்து தேடுங்கள் அங்குங் காணாவிட்டால் தமிழ் நாட்டிற்குச் செல்லுங்கள் சென்று அங்குத் தென் கடற்கரையதான மயேந்திரமலையிலுந் தேடுங்கள் அங்குங் காணாவிட்டால் கடலைக்கடந்து மறைப் பல விடங்களி லுஞ்சென்று நன்குதேடி ஒருமாத முடிவிற்குள் வந்து சேருங்கள் என்றனன். வானராதிபனான சுக்கிரீவனிவ் வாறு கூறுதலும், உலகளந்த திரிவிக்கிரமனான பெருமாள் ஆஞ்சனேயரைப் பார்த்து நீதிவல்ல ஆஞ்சனேயனே தே டிச்செல்லுமிடத்திற் சீதையான என்மனைாட்டியைக் காண் பாயானல் சந்தேக மொழிந்துணர்தற்குச் சில அடையா ளங் கூறுகின்றேன் கேளென்று தனியே அழைத்து இருத்தி இவ்வாறருளிச் செய்தனர்.

அனுமானே அவளை நீ கண்டாலறிதற்கு அவள் பாதாதிகேச சொரூபத்தை யுனக் குரைக்கின்றேன் இவ் வியல்பை யுணர்ந்திருந்தாலன்றி ஐயந்தீர வவளை நீயறிய வியலாதாதலா லிதனைக்கேள்.

## பிராட்டியின் பாதாதிகேச லக்ஷணம்.

பாற்கடற் பிறந்தசெய்ய பவளத்தைப் பஞ்சியூட்டி
மேற்பட மதியஞ்சூட்டி விளக்குற நிரைத்தமெய்ய
காற்றகை விரல்களைய கமலமும் பிறவுங்கண்ட
வேற்பிலவென்பதன்றி யிணையடிக்குவமையென்னே என்றபடி.

ஐயனே ஆஞ்சனேயனே! கமல மலரினுள் ளிதழினை யும் கால் விரல்களுக் குவமைகூறு மெப்பொருள்களையு மொப்பென வேலாத சிறப்பினையும் தூயபாற் கடலிலே

பிறந்த செம்மையின் மிக்க பவளத்தினைப் பஞ்சியூட்டி அதன்மீது வெள்ளிய பூர்ணசந்திரனையும் புதைத்து வைத்தாற்போல விளங்குகின்ற நகங்களையும் உடையன, என்னுயிரினுஞ்சிறந்த ஜானகியின் கால் விரல்களும் உள்ளடியுமென்றறியக் கடவை இனியவள் புறவடியை.

நீமெயா யுணர்தியைய நிரைவளை மகளிர்க்கெல்லாம்
வாய்மையா ருவமையாக மதியறி புலவர்வைத்த
ஆமையா மென்றபோது மல்லன சொல்லினாலும்
யாமையாழ் மழலையாடன் புறவடிக் கிழுக்கமன்றோ. என்றபடி

ஐயனே மெய்யாகவே அறியக்கடவை புலவர்களெல்லாம் மாதர்கள் புறவடியை யாமையெனவும் மன்மதாகமமெனவும் பலவாறு கூறுவார்கள் அவையெல்லாமிவள் புறவடிக் கொப்பாகாது அதற்கதுவே யொப்பென் றறியக் கடவை ஆஞ்சனேயனே.

வனைவரா லரியகோதை பேதைமென் கணைக்கான்மெய்ய
நினைவரா லரியவின்ன நேர்படப் புலவர்போற்றும்
சினைவராற் பகழியாவ நெற்சினை யென்னுஞ்செப்பம்
எனைவராற் பகருமீட்ட யானுரைத்தின்பமென்னோ. என்றபடி

சித்திரிக ராலமைத்தற்கரிய வுருவினளான சீதையின் கணைக்காலைக் குறித்துப் புலவர்களுவமைகூறும் சினையுடைய வரான் மீனினையும் அம்புக்கூடினையும் நெற்சினையையும் கூறுவதிற் பயனில்லை யெனவும், அவள் கணைக்கால் ஒப்பற்றதே யெனவுமறிந்து கொள்ளக்கடவை அன்றியும் மாருதி,

அரம்பையென் றளகமாதர் குறங்கினுக் கமைந்தபொற்பின்
வரம்பையுங் கடந்தபோது மற்றுவமை யுரைக்கலாமோ
நரம்பையு மமிழ்துநாறு நறவையு நன்னீப்பண்ணைக்
கரும்பையுங் கடந்தசொல்லாள் கவாற்கிது கருதுகண்டாய்.

என்றபடி யாழோசையையுங் கரும்பின் சுவையையுங் கடந்த சொல்லினை யுடைய ஜானகியின் தொடைகட்கு மற்றை மாதர் தொடைக் கிணைகூறும் வாழை மரமினை யாகாதாதலினதற் கொப்பில்லையென்று நினைவில் வைத்துக் கொள்ளக்கடவை அன்றியுமஞ்சனை நந்தனு!

வாராழிக் கலசக்கொங்கை வஞ்சிபொன் மருங்குலாடன்
தாராழிக் கலைசாரல்குற் றடங்கடற் குவமைதக்கோய்
பாராழி பிடரிற்றாங்கும் பாந்தளும் பணிவென்றேங்கும்
ஓராழித்தேருங்கண்ட வுனக்குநா னுரைப்பதென்னே. என்றபடி

கச்சணிந்த கனதனத்தினையும் வஞ்சியன்ன விடையினையுமுடைய எனது சானகியின் கடிதடத்துக்கு உலகினைத் தலையாற் சுமக்கு மரவினையும் சூரியனது தேர்த் தட்டினையுங் கண்டுள்ள வுனக்குயான் ஒன்றுங் கூறவேண்டுவதில்லை அவையெல்லாமதற் கொப்பன்றென் றறியக் கடவை ஆஞ்சனேயா அன்றியும்.

சட்டகந் தன்னைநோக்கி யாவையுஞ் சமைக்கத்தக்காள்
இட்டிடையிருக்குந்தன்மை யியம்பக்கேட் டுணர்தியென்னின்
கட்டுரைத் துவமைகாட்டக் கட்பொறி கதுவாகையிற்
றெட்டவற் குணரலாமற் றுண்டெனுஞ் சொல்லுமில்லை

என்றபடி எனது ஜானகியின் இடைக்கிணைகூறுதற் குப் பிறமாதரி னிடைக் கிணைகூறு மெவையுமொப் பாகா

தென்றும் தொட்டுப்பழக்கமுள்ள யாவனொருவனே யறியத்
தக்கதென்று மறியக்கடவை அன்றியும் மாருதி !

ஆலினைப் படிவந்தீட்டு மையறுண் பலகைநொய்ய
பால்நிறத் தட்டம்வட்டக் கண்ணடி பலவுமின்ன
போலுமென்றுரைத்தபோதும் புனைந்துரைபொதுமைபார்க்கின்
ஏலுமென் றிசைக்கினேலா விதுவயிற் றியற்கையின்னும்.

என்றபடி ஆலிலையும் அழகிய கண்ணடியும், வெள்ளிய
தட்டமுதலிய எவைகளும் இவள் வயிற்றிற் கிணையென்று
கூறுதல் பொருந்தாத விஷயம் ஆதலினவள் வயிறு ஒப்
பற்றதென் றுணரக்கடவை அன்றியும் வாயுநந்தனு!

சிங்கலில் சிறுகூதாளி நந்தியின் றிரட்பூச்சேர்ந்த
பொங்குபொற் றுளையென்றாலும் புல்லிது புதுமைத்தாமால்
அங்கவ ளுந்தியொக்குஞ் சுழியெனக் கணித்ததுண்டால்
கங்கையைநோக்கிச்சேறி கடலினுநெடிதுகற்றோய். என்றபடி

அவளுந்திச் சுழியைக் குற்றமற்ற சிறு கூதாளிமலரி
லும் திரண்ட நந்திப்பூவிலுமுள்ள சிறுதுளையை உவமை
கூறுவதானல் உவமையற்று ஆச்சரியமாகவே முடியும்
ஆனல் நீர்ச்சுழி யெனவொன்றுள்ளதை மாத்திர முவமை
யாகக் கூறலமையு மென்றறிதி, சூரியனிடத்துச் சீரியகலை
களையெல்லா மேருறக்கற்ற மாருதியே!

மயிரொழுக் கெனவொன்றுண்டால் வல்லிசேர் வயிற்றின் மற்றென்
னுயிரொழுக் கதற்குவேண்டு முவமையொன் றுரைக்கவேண்டின்
செயிரில்சிற் றிடையாயுற்ற சிறுகொடி றடக்கந்தீரக்
குயிலுறுத் தமைத்துவைத்த கொள்கொம்பென் றுணர்ந்துகோடி.

என்றபடி அவள் வயிற்றிலுள்ள மயிரொழுங் கானது குற்றமற்ற சிறு கொடியாகப் பொருந்திய இடுகிடையின் துவட்சி நீங்கும் வண்ணம் அழகுறச்செய்து நட்டுள்ள கொழுகொம்பென்று கூறலாமன்றி மற்றைமாதர் வயிற்று மயிரொழுங்கிற் குரைக்குமெவையு முரைத்தாற் பொருந் தாதென்றறிதி, ஓ வீரதீர பராக்கிரமனுன அனுமானே.

அல்லியூன் றிடுமென்றஞ்சி யரவிந்தம் துறந்தாட்கம்பொன்
வல்லிமூன் றுளவாற்கோல வயிற்றின்மற் றவையுமாம்
வில்லிமூன் றுலகின்வாழு மாதருந் தோற்றமெய்ம்மை
சொல்லியூன் றியவாம்வெற்றி வரையெனத் தோன்றுமன்றே.

என்றவாறு தாமரையி னகவித ழூறுத்துமென வதனை விடுத்துவந்த வழகிய சீதையின் வயிற்றிற் பூலோகம் பா தாளம் சுவர்க்கம் என்னு மூன்றுலகங்களிலுமுள்ள மாதர் களை அழகு குணமுதலியவற்றில் வென்ற தன்மையை விளக்குதற்கு அமைத்ததுபோல மூன்றிரேகை ஒளியுடை யனவாக விளங்குதல் உள்ளதென்றுணரக் கடவை அன்றி யும் நவவியாகரண வல்லவனே!

செப்பென்பன் கலசமென்பன் செவ்விள நீருர்தேர்வன்
துப்பொன்று திரள்சூதென்பன் சொல்லுவன் றும்பிக்கொம்பைத்
தப்பின்றிப் பகலின்வந்த சக்கரவாக மென்பன்
ஒப்பொன்று முலகிற்காணேன் பலநினைந் துலேவேனின்னும்.

என்றபடி இவள் தனபாரங்களை யான் ஒவ்வொரு சம யங்களிற் செப்பென்று கருதுவேன் பின்னரது விடுத்துச் செவ்விள நீரையொப்பென்று கருதுவேன் அதுவுஞ் சரி

யான தன்மையா லதனை விடுத்து நன்கு திரண்டதொரு கருவியென்று கருதுவேன் பின்னரதனை விடுத்து யானைக் கொம்பை யொப்பென்று கருதுவன் அதுவுஞ் சமான மானதல்லாமையால் அதனை வெறுத்துச் சக்கரவாகப்பற வையேயிணை யிதற்கென்று கருதுவேன் பின்னரதனையும் விடுத்து இனி யெதனைத்தா னுவமையாக வுரைக்கலா மென்று தேடுவேன் அங்ஙன மிதுகாறுந் தேடியுந் தனத் திற் கொப்புரைக்கும், பொருளொன்றுங் கிட்டாமல் நனி வருந்துகின்றே னாதலினால் அவள் குசங்கள் சமானரகிதங் களேயெனவறிக, அன்றியும் ஒபுலிமுலை புல்வாய்க் கருத் தும் பூச்சியனே!

கரும்புகண் டாலுமாலைக் காம்புகண் டாலுமாலி
யரும்புகண் டாரைசோர வழுங்குவே னறிவதுண்டோ
சுரும்புகண் டாலுங்கோதை தோணினைந் துவமைசொல்ல
இரும்புகண் டனையநெஞ்ச மெனக்கிலை யிசைப்பதென்னே.

என்றாங்கு கரும்பினையும் மலைமூங்கிலினையுங் கண்டால் அவள் புயங்களுக் கிவையொப்பா னவையென்று அவள் விரகத்தால் கண்ணீர் வடித்துலவும் யான் வேறொன்றினை அவள் புயங்களுக் குவமைகூறுதற்கு என்னெஞ்சங் கன் னெஞ்சமன்று ஆதலின் அவள் தோள்கள் உவமையற்ற சிறப்பினவென்றே உனக்குணர்த்து கின்றேன்.

முன்கையே யொப்பதொன்று முண்டு மூவுலகத்துள்ளும்
என்கையே யிழுக்கமன்றே யியம்பினுங் காந்தளென்றல்
வன்கையாழ் மணிக்கையென்றன் மற்றொன்றை யுணர்த்தலன்றி
கன்கையா டக்கையாமோ நலத்தின்மே னலமுண்டாமோ.

என்றாங்கு அவள் முன்கைக் குவமை மூன்றுலகத்துள்ளும் இல்லை, உண்டென்று கூறுதல் குற்றமாமன்றிப் பொருத்தமாகாது காந்தளையும் யாழையு மெடுத்துரைத்தாலவை மற்றொன் றுரைத்தலென்னுங் குற்றமாகுமேயன்றி எனது காதலியின் கரங்களாகுமோ ஆகாதென்றறிக. பாரிணியாம் மேருவின் சிகரத்தைச் சீறுறவொடித்த வாயுவின் மதலாய்!

ஏலக்கொண் டென்றபிண்டி யிளந்தளிர் கிடக்கயாணர்
காலைக்கற் பகத்தின்காமர் குழைபடுங் கமலமென்பூ
நூலொக்கு மருங்குலாடன் நூபுரம் புலம்புகோலக்
காலுக்குத் தொலையுமென்றாற் கையொப்பு வைக்கலாமோ.

என்றபடி அவளகங்கைக்கு தக்கவாறு தளிர்த்த அசோகந்தளிர் ஒவ்வாது தோல்வியுறவும் அழகிய பருவத்தினையுடைய கற்பகத்தின்றழையு முவமையின்றிக் குழைவுற்றுக் கெடாநிற்கு மவ்வாறாகச் சிற்றிடைப் பொற்றொடிச் சீதையின் குற்றமில் காலுக்கே உவமையாகாத தாமரையின்மலர்கைக் கெவ்வா றுவமையாகும் ஆகாதென்றறிக, ஆதலால் எனது காதலியின் கரங்களினுள்ளிடத்துக் குவமையே யிலையென்றறிக. குற்றமற்ற நற்கலைகள் சொற்றமுறையனைத்தும் பெற்று நிற்கும் அனுமானே!

வெள்ளிய முறுவற்செவ்வாய் விளங்கிழை யிளம்பொற்கொம்பின்
அள்ளுகிர்க் குவமைநம்மால் மயர்வற வகுக்கலாமோ
எள்ளுகிர் நீரேமுக்கை யென்றுகொண் டிவறிப்பின்னும்
கிள்ளைகள் முருக்கின்பூவைக் கிழிக்குமஃ தழிக்கலாமோ.

என்றுங்கு வெள்ளிய முறுவலையும் செவ்விய வாயினையும், உடைய இளம்பொன்னங்கொடிபோலுஞ் சீதையின் கூரிய நகத்தின்றிறத்தைக் குற்றமறக்கூறலாகுமோ கிளிகள் தங்கள் மூக்கினைச் சீதை நகத்தினை யுவமைக்கியை யாதன வென்று கூறுகின்ற வாய்க்கினையான தென்றே கோபச் செறிவால் முருக்கலர்களை கிழிக்கின்றன ஆதலினவள் நகத்துக்குவமையே இலையென் றுணர்க. மாருதி!

> அங்கையு மடியுங்கண்டா லரவிந்த நினையுமாபோல்
> செங்களி சிதறிநீலஞ் செருக்கிய தெய்வவாட்கண்
> மங்கைதன் கழுத்தைநோக்கி வளரிளங் கமுகும்வாரிச்
> சங்கமு நினைதியாயி னவையென்று துணிதிதக்கோய்.

என்றபடி அகங்கையைக் கண்டால் தாமரையலரை நினைக்குமாறுபோல செவ்வரியு நீலத்திறமும் வாய்ந்த வாளனைய கண்ணினையுடைய அம்மங்கையின் கழுத்தைப் பார்த்து அதற்குவமையாக வளரிளங் கமுகினையும் கடற்சங்கினையு நீ நினைத்தியாயின் அந்நினைவு தகுதியற்ற நினைவேயாகுமென்றுணரக் கடவை. அன்றியும் அவள் வாயானது.

> பவளமுங் கிடையுங்கொவ்வைப் பழனும்பைங் குமுதப்போதும்
> துவளில வங்கங்கோப முருக்கென்றித் தொடக்கஞ்சாலத்
> தவளமென் றுரைக்கும்வண்ணஞ் சிவந்துதேன் றதும்புமாகின்
> குவளையுண் கண்ணிவண்ண வாயது குறியுமன்றே. என்றபடி

மாருதி! பவளமென்பதுங் கிடையென்பதுங் கொவ்வைக் கனியென்பதும், பசியசெவ்வல்லி மலரென்பதும், துவட்சியமைந்த இலவங்க மலரென்பதும், இந்திரகோப மென்ப

தும் முருக்கல ரென்பதுமாகிய இத்தொட கத்தனவாகிய செம்பொருள்க ளெல்லாம் வெண்ணிற மானவையென்று கூறுமாறு செவந்து தேனுந் ததும்பியதொரு பொருளுள தாயின் அக்குவளைக் கண்ணி கோலவாய்க் கிணையாமே யன்றி மற்றொன்று மிணையாகாதென் றுணர்க. அன்றியும் மாருதி!

சிவந்ததோ ரமிழ்தமில்லை தேனில்லை யுளவென்றாலும்
கவர்ந்தபோ தன்றியுள்ள நினைப்பவோர் களிப்புமில்சா
பவர்ந்தவா னுதலினுடன் பவளவாய்க் குவமைபாவித்
துவந்தபோ துவந்தவண்ண முரைத்தபோ துரைத்ததாமோ.

என்றபடி அவள் வாயினிமைக்குத் தேனும் பாலும் மிணையாகாது அன்றியும் பாலுக்குள்ள குணம் வெண்மை தேனுக்குள்ள குணமோ இவளதரம்போன்ற செம்மையுமன்று இவ்விரண்டு முளவென்றாலும், உண்டபோதன்றி உள்ளில் நினைத்தவுடனே மகிழ்ச்சியைத்தரா, ஒளிதங்கிய வழுகிய நற்றியிணையுடைய இவளதரத்துக்குவமை யெதுவுமில்லை யென்க. அன்றியுமனுமானே!

முல்லையு முருந்துமுத்து முறுவலென் றுரைத்தபோது
சொல்லையு மமுதும்பாலுந் தேனுமென் றுரைக்கத்தோன்றும்
அல்லதொன் றுவதில்லை யமிழ்திற்கு முவமையுண்டோ
வல்லையே லறிந்துகோடி மாறிலா வாறுசான்றோய். என்றபடி

முல்லை யரும்பும் பறவையினிறகடியும் சிப்பிமுத்து மாகிய இவைகளைப் பற்களென்று கூறுவதானல் அவள் மொழியையும் அமிழ்தும் பாலுந் தேனுமென்று கூறத்

தோன்றும் மற்றொன்றைக் கூறுதற்குப் பொருந்தாது அமிழ்த மனைத்துக்கு முவமையாகவுள்ளது அதற்குவமை யே கிடையாது உளதேலறிவிற் சிறந்தோய் நீயேயறிந்து கொள்ளுவாயாக. அன்றியும்!

ஓதியுமெள்ளுந் தொளளைக் குமிழுமைக் கொக்குமேற்ற
சோதிச்செம்பொன்னுமின்னு மணியும்போற் றுளங்கித்தோன்று
ஏதுவு மில்லைவல்லா ரெழுதவார்க் கெழுதவொண்ணு
நீதியை நோக்கிநீயே நினைதியா னெடிதுகாண்பாய். என்றாங்கு

எனது சானகியினழகிய மூக்குக்குவமையாக உரைத் தற்கெவையுமில்லை எல்லொரு மடந்தையர் நாசிக்கிணை கூறு மோந்தின்றலையும், எள்ளின்பூவும் குமிழினலரும் ஒளிதங் கிய பொன்னு மின்னு மணியும்போற் பிரகாசியா ஆதலி னவள் நாசிக்கிணையே இலையென்க. சித்திரிகரு மவள் நா சிக்கிணையென வெழுதிக் காட்டக் கூடாதவரே யாவராத லால் உவமையற்றது எதிரற்றதவள் நாசியென்றறியக் கட வை. அன்றியும் ஒப்பற்ற ஞானவானான ஆஞ்சனேயனே அவள் காதைக் குறித்துரைக்கு மிடத்து.

வள்ளைகத் தரிகைவாம மயிர்வினைக் கருவியென்னப்
பிள்ளைக ளுரைத்தவொப்பைப் பெரியவ ருரைக்கிற்பித்தாம்
வெள்ளைவெண் டோடுசெய்த விழுத்தவம் விளைந்ததென்றே
யுள்ளுதி யுலகுக்கெல்லா முவமைக்கு முவமையுண்டோ.

என்றபடி வள்ளைக் கீரையையும் மயிரெறி கருவியையும், இளைஞர் மடந்தையர்காதுக் குவமை கூறுவார்கள் இளைஞர் கூறும் பொருத்தமற்ற பொருள்களை இவள் காதுக்கு

நாம் உவமை கூறினலது பித்தேயாகும் வெள்ளிய வைரக்
குழைசெய்த பெருந்தவத்தாலவள் காதினை யிடமாகப்
பெற்று நிற்கின்றதேயன்றி மற்றொன்றன்றும் உலகத்தி
னுவமைப் பொருளுக்கும் வேறுவமைப் பொருளுளதோ
இலையென் றறிவாயாக. அன்றியும் கலாவிநோதனுன
மாருதி! என்காதலியின் கண்களைக் கூறுமிடத்தில்.

பெரியவாய்ப் பரவையொவ்வா பிறிதொன்று நினைந்துபேச
உரியவாயொருவருள்ளத் தடங்குவ வல்லவுண்மை
தெரியவா யிரக்காளுக்கிற் றேவர்க்குந் தெய்வமென்னக்
கரியவாய் வெளியவாகும் வாட்டடங் கண்களம்மா. என்றபடி

அவளது வாட்டடங்கண்கள் எத்தகையன எவை
போல்வன வெனத்தேவர் பார்ப்பாராயின் அவர்க்கு மக்
கண்களின் உவமையறியக்கூடாததாய் அவர்பணியுந்தேவு
போலாமாயின் ஆஞ்சனேயனே மிகவுமகன்ற கடலுமவள்
கண்ணுக் கிணையன்றும வேறொன்றை யெடுத்துவைத்தற்
கக்கண் ஒருவருள்ளத்துங் கடங்குவதன்று ஆதலின் ஒப்
பற்றதென்றறியக் கடவை.

கேளொக்கு மன்றியொன்று கிளத்திடிற் கீழ்மையாமே
கோளொக்கு மென்னினல்லாற் குறியொக்கக் கூறிற்றன்றால்
வாளொக்கும் வடிக்கணாடன் புருவத்துக் குவமைவைக்கின்
தாளொக்க வளைந்திருப்ப விரண்டில்லை யனங்கசாபம் என்றபடி

அவள் புருவத்திற்கு நமக்குள்ள விருப்பத்தாலொன்
றை ஒப்பென்று கூறலாமேயன்றி யுண்மையாக வுரைத்
தாலது தாழ்வுடைய தாகவேயாகும் ஒரு புடை யொப்

பாக உரைப்பதேயன்றி எல்லா வியல்பிலும் பொருத்த மானதெனை ஒன்றைக் கூறியதன்றும் வாளனைய கண்ணினை யுடைய எனது *சானகியின் புருவத்துக்கு இனி உவமை கூற வேண்டுமானல் இருபுறமுஞ் சரியாக வளைந்து நிற் றற்கு 'மன்மதனுக்கு இரண்டு வில்லில்லையே இருந்தாற் கூறலாம் என்றறிதி அன்றியும் அஞ்சனை குமரா!

நன்னுத னளினநாணு முகத்தினை நுதலைநாடிப்
பன்னூறும் பன்னியாற்ற மதியெனும் பண்பதாகி
முன்னளின் முளைவெண்டிங்கண் முறைநாளுங் குறைவேயாகி
என்னூறும் வளர்ந்ததென்னி னிறையொக்கு மியல்பிற்றமே.

என்றபடி இவள் நெற்றிக் குவமையாக மதியை யுரைத் தல் சிறிதும் பொருந்தாததேயாகு மெதனு லென்றால் அம்மதி நாடோறுங் கமலமலரு மழகிற்கீடின்றி நாணு கின்ற முகத்தினுக்கும் நெற்றிக்கும் உவமையாமாறு கருதி வளர்ந்துங் குறைந்து மிரண்டிற்கு மிணையன்மையா லின்னமத் தொழிலையே செய்கின்றமையா லென்றுணர்க. அன்றியும்,

வனைபவ ரில்லையென்றே வனத்துறும் வந்தபின்னை
துனையன வெனினுந்தாந்த மழகுக்கோ ரழிவுண்டாகா
வினைசெயக் குழன்றவல்ல விதிசெய விளைந்தநீலம்
புனைமணிப்பவளமின்னும் புதுமையாமுவமைபூணு. என்றபடி

மாருதியே! நாம் வனத்தையடைந்த பின்னர் அலங் கரிப்போரிலரேனும் அவ்வவ் வுறுப்புக்களுக் குடைய வழ கிலவை தாழ்ந்தனவாகா. இவளுறுப்புக்கள் கைவன் மத

வீரால் சிராட்டப்படச் சிறந்தனவன்று இயல்பாகவே அமைந்த சிறப்பினை யுடையன ஆதலினவைக்குப் பொருத்தமற்ற வுவமைகளைக்கூறி வருணனை புரிவதிற் பயனென்னை நீலமணியானது ஒருநாளும் பவளத்துக் குவமையாகாது அதுபோலவவள் முகத்துக்கு மொப்பெதுவுமின்றென்றறிதி இனி அவள் முகத்தினை நீ கண்டாலறியவேண்டிலொன் றுரைக்கின்றேன்.

கொண்டலின் குழவியாம்பல் குனிசிலை வள்ளைகொற்றக்
கெண்டையொண் டரளமென்றிக் கேண்மைய கிடந்ததிங்கள்
மண்டிய வதனமென்று வைத்தனன் விதியேநீயப்
புண்டரீ கத்தையுற்ற பொழுததுபொருந் தித்தேர்வாய். என்றபடி

மாருதியே! மேகமு மிளந்திங்களும் செவ்வல்லி மலரும் வளைந்த வில்லும் வள்ளைக்கொடியும், சேற்கெண்டையும் முத்தும் என்று கூறப்பட்ட இவைகள் பொருந்திய சந்திரனை வட்டமுள்ள முகமாக சிருஷ்டி கர்த்தாவே யவட்கமைத் திருக்கின்றான். என்னன்பிற் குரிய வவளை நீ கண்டாலவண் முகதாமரை யான் கூறிய இத்தகுதியினதேயென்பதை நீயே கண்டறிவாய் அன்றியும்.

காரினைக் கழித்துக்கட்டிக் கள்ளினோ டாவிகாட்டிப்
பேரிருட் பிழம்புதோய்ந்து நெறியுறீ இப்பிறங்குகற்றைச்
சோர்குழற் றொழுதிச்சூழல் சும்மைசெய் தனையதம்மா
நேர்மையைப் பெருமைசெய்த நிறைநறுங் கூந்தனீத்தம். என்றபடி

என் காதலியி னழகிய ஆற்றொழுக் கனைய கூந்தலானது மேகத்தை யொப்பல்லவென்று பழித்தகற்றித்

தேனெனுமிராவி அகிற்புகையுண்டு பெரிய இருட்பிழம்பிற்றோய்ந்து நெறித்து விளங்கிக் குழைந்து சுவையினதாகிக் காணப்படுமென்றறிதி. அன்றியும்,

புல்லிதழ் கமலத்தெய்வப் பூவிற்கு முண்டுபொற்பின்
எல்லைசூழ் மதிக்குமுண்டங் களங்கமென் றுரைக்குமேலும்
அல்லவுஞ் சிறிதுகுற்ற மகன்றில வன்னமன்ன
நல்லிய லாளுக்கெல்லா நலனன்றிப் பிறிதுண்டன்றால்.

அனுமானே! பூவுளெல்லாஞ் சிறந்த பொறிவாழ் பூவான தாமரைக்கும் புறவிதழில்லாமலில்லை. ஒளி பொருந்திய சந்திரனுக்குங் களங்க மென்றுரைக்கு மொரு குற்றமொன்றுளதாம். இவையன்றி யுள்ளனவுஞ் சிறந்து சிறிது குற்ற முடையனவாகவே விளங்குகின்றன. அன்ன நடையினளான சானகிக்கன்றி நலனுங் குறைவில்லாதனவேயன்றி குறைவுள்ள வன்றும். ஆதலிற் குறைவற மழகுறு கோமளவல்லியை நீ கண்டவுடனறிதி. அன்றியும் ஐயனே!

மங்கையர்க் குரைத்துவைத்த விலக்கணம் வண்ணவாசப்
பங்கையத் தவட்குமையா நிரம்பல பற்றிநோக்கின்
செங்கையிற் கருங்கட்செவ்வாய்த் தேவரும் வணங்குந்தெய்வக்
கொங்கையைக் குயிலுக்கொன்றுங் குறைவில குறியுமன்றே.

என்றபடி பெண்கட் கமைய வேண்டுவனவாகக் கூறியுள்ள விலக்கணம் அழகிய வாசனையினை யுடைய கமலாசனியான திருமகட்கு முற்றுப்பார்த்தால் நிரம்பினதில்லை தேவரும் வணங்குந் திறமுடையாளும் செவ்விய கயன்

மீன்போலுமழகிய கண்ணிணை யுடையவளும் தெய்வத்தன்மைவாய்ந்த தனங்களை யுடையவளுமான எனது காதலிக்கு நாலுமைந்து மிலக்கணங்களைத் திரம்பியுள்ளதேயன்றிக் குறையொன்று மில்லாதவளாகிய லவளைக் கண்டால் ஞாபகத்துட னாராய்ந்து கொள்ளுதி யினியவள் வாய்மொழியைக் கூறுகின்றேன்.

குழல்படைத்த யாழைச்செய்து குயிலொடு கிளியுங்கூட்டி
மழலையும் பிறவுந்தந்து வடித்தமைம் மலரின்மேலான்
இழைபொரு முலையினுடனின் சொற்களியை யசசெய்தான்
பிழையில னுவமைகாட்டப் பெற்றிலன் பெறுங்கொலின்னும்.

என்றபடி குழலையும் யாழையையும் படைத்துப் பின் குயிலையுங் கிளியையும் படைத்து பின் மழலைமொழியையு மதுபோன்றவைகளையு முண்டாக்கிக் கைதேர்ந்த பின்னர் இழையுநுழையா இளந்தனத்தியான ஜானகியின் கண்டத்தொனியையும் வசனத்தையும் பொருந்த வமைத்தனன் உவமை யொன்றுங் காட்டாது விட்டனனாதலின் அப்பிரமன் குற்ற மில்லாதவனாயினுன் என்பதை யறிந்து கொள்ளுதி.

வானின்ற வுலகமூன்றும் வரம்பின்றி வளர்ந்தவேனும்
நாநின்ற சுவைமற்றொன்றே வமிழ்தன்றி நல்லதில்லை
மீனின்ற கண்ணினுடன் மென்மொழிக் குவமைவேண்டின்
தேனென்றே வமிழ்தமொன்றே வவைசெவிக் கின்பஞ்செய்யா.

சுவர்க்க மத்திய பாதாளமாகிய மூன்று லோகங்களிலும் நாவினுற் சுவைக்கும் பொருளி லுயர்ந்ததாகக் கூறப்

படுவது அமிழ்தமன்றி வேறே நல்ல தொன்றினையுங் கண்டிலேம் தேனுமமிர்தமு நாவிற்கினிமை பயக்குமேயன்றிக் காதிற்கினிமை பயவாவாதலின் மீனநயனியான சானகியின் சொற்களுக் குவமை வேண்டுமோனுற் கிட்டாதென்றறிதி! அன்றியும்,

பூவரு மழலையன்னம் புனைமடப் பிடியென்றின்ன
தேவரு மருளத்தக்க செலவின வெனவுந்தேறேன்
பாவருங் கிழமைத்தொன்மைப் பருணிதர் தொடுத்தபத்தி
நாவருங் கிளவிச்செவ்வி நடைவரு நடையணல்லோய்.

நல்லோய் கமலமலர்மீதுலவு மரசவன்னமும் அலங்கரித்து விடுத்த இளம்பெண் யானையும் ஆகிய இவை தேவரு மருளத்தக்க நடையின வெனயான் றுணிந்து கூறேன் கவிபாடு முரிமையமைந்த பண்டிதர்களின் வரிசை வரிசையான சொற்கட்டைப் போன்ற நடையினை யுடையாள் அன்றியும் அவள் நிறத்தினைக் குறித்துரைக்குமிடத்து,

எந்நிற முரைக்கேன்மாவி னிளநிற முதிருமற்றைப்
பொன்னிறங் கறுக்குமென்ன மணிநிற முவமைபோதா
மின்னிற நாணியெங்கும் வெளிப்படா வொளிக்கும்
தன்னிறந் தானேயொக்கு மலர்நிறஞ் சமழ்க்குமன்றே.

எந்த நிறத்தையவள் நிறத்துக் குவமையாக வுரைப்பேன் இளமாந்தளிரை யுரைக்கலா மென்றாலோ முதிர்வடையும் பொன்னை யுரைக்கலா மெனிலோவது கறுக்கும் மணிநிற முரைக்கலா மென்றாலோ உவமைபோதாது மின்

னல் நிறத்தை யுரைக்கலா மென்றாலோ அது இவணிறத் துக்கு வெட்கி எங்கும் வெளிப்படா தொளிக்கும் பூவி னிறத்தைக் கூறலாமென்று லதுவாடும். ஆதலி னிவை யெவையு மவணிறத்துக் கொப்பன்றும் ஒப்புக்கூற வேண் டினல் அதற்கதுவே யொப்பு வேறே யொப்பின்றென் றுணர்க. அன்றியும் நீ நின்மனதுள் இவ்வாறு துணிவு வைத்துக் கொள்ளக் கடவை.

மங்கையவ ரவளையொப்பார் மற்றுள ரில்லரென்னுஞ்
சங்கையி லுள்ளந்தானே சான்றெனக் கொண்டுசான்றோய்
அங்கவ ணிலைமையெல்லா மளந்தறிந் தருகுசார்ந்து
திங்கள்வாண் முகத்தினார்க்குச் செப்பெனப் பின்னுஞ்செப்பும்.

இவ்வுலகத்தில் பெண்களுள் எவரும் சானகியை ஒத் தவர்கள் இலர் என்பதுண்மை அவளிலக்கணத்துக் கிது வசாக்ஷி நீயவளைக்கண்டால் நான் கூறியவண்ணம் உள்ள இலக்கண மமைந்தவளா வென்றாராய்ந்தவ ளருகிலெய்தி இவ்வா றுரைத்தி எவ்வா றென்றால், அனுமானே! நீ யெனது காதலிக்கு,

முன்னைநாண் முனியொடும் முதியநீர் மிதிலையில்வாய்ச்
சென்னிநீண் மாலையான் வேள்விகா ணியசெல
அன்னமா டுறையுளுக் கருகுநின் றாளையக்
கன்னிமா டத்திடைக் கண்டதுங் கழறுவாய்.

சூழிமால் யானையின் றுணைமருப் பிணையெனக்
கேழிலா வனமுலைக் கிரிசுமந் திடைவதோர்
வாழிவான் மின்னிளங் கொடியில்வந் தாளையன்
றூழியா னரசவைக் கண்டது மருளுவாய்.

வரைசெய்தாள் வில்லிறுத் தவனமா முனியொடும்
விரைசினு னல்லனேல் விடுவெய்யா னுயிரெனக்
கரைசெயா வேலையிற் பெரியசீற் பினடெரிந்
துரைசெய்தா னிஃதெலா முணரநீ யுரைசெய்வாய்.

முன்புநா னறிகிலா முளிநெடுங் கானிலே
என்பினே போதுவாய் கினைதியோ வேழைநீ
இன்பமா யாருயிர்க் கினியையா யினையினித்
துன்பமாய் முடிதியோ வென்றதுஞ் சொல்லுவாய்.

ஆணபே ரரசிழந் தடவிசேர் வாயுனக்
கியானலா தனவெலா மினியவோ வினியென
மீனுலா நெடுமலர்க் கண்கணீர் விழவிழுந்
தானிலா வுயிரின்வந் தயர்வது முரைசெய்வாய்.

மல்லன்மா நகர்துறந் தேகுநாண் மதிதொறும்
கல்லின்மா மதின்மணிக் கடைகடந் திடுதன்முன்
எல்லைதீர் வரியவெங் கானம்யா தோவெனுச்
சொல்லினு னிஃதெலா முணரநீ சொல்லுவாய்

இனையவா றுரைசெயா வினிதினே குதியென
வனையுமா மணிநன் மோதிர மளித்தறிஞநின்
வினையெலா முடிகென விடைகொடுத் துதவலும்
புனையும் வார்கழலினு னருளொடும் போயினன்.

யானவளை மணமுடித்தற்கு முன்னர் விசுவாமித்திர முனிவனுடன் மிக்க நீர்வளமமைந்த மிதிலாபுரியில் மாலை யணிந்த மகுடத்தினை யுடைய சனகராசனது வேள்வி யைத் தரிசிக்கச் சென்றகாலத்து அன்னப் பறவைகள்

விளையாடுகின்ற தடாகத்தி னருகிலுள்ள கன்னிமாடத்தில் யான் கண்டதனையும் பின்னர் முகபடா மணிந்த யானையின் இரண்டு தனங்களைச் சூழ்ந்திடை யிடைவ தொரு மின்னற் கொடிபோல சனகனவைக் களத்துவந்த வுடன் கண்டதனையும் மலையனைய வில்லினை யொடித்த வன் முனிவன் பின்னுற் சென்றவ னல்லனேல் உயிரை வையேனென நினைத்திருந்த காலத்துச் சிறந்த கற்பினை யுடையவ ளொருத்தி யோடிவந்து முனிவன்பின் வந்த வனே வில்லிறுத்தானெனக் கூறியதனையும் உலர்ந்த மரங் களையுடையதும் பண்டுசென்று பழக்க மில்லாததுமான பெருங்காட்டில் யான் செல்லுங்காலத்து என்னுடன் வர முயன்றபோது இதுகாறும் எனக்கின்பந்தந்த நீ எனக் குத்துன்பந்தரக் கருதுகின்றனையோ என்று யான் கூறிய தனையும் அம்மொழியைக்கேட்டு உரிமை யுடையதான அரசினை இழந்து காடுசெல்லு முனக்கு என்னையன்றி யுள்ளனவெலா மின்பத்தைத் தரத்தக்கனபோலு மினி யென்று மீனென வுலாவுவதும் நெடியதுமான மலரனைய கண்களில் நீர்ததும்பி விழாநிற்பப் பூமியில் விழுந்து மூர்ச் சித்ததனையும் வளமமைந்த அயோத்தியை விடுத்துச் சென்ற காலத்து கன்மதி லினையும் மணிக்கத வினையு முடைய கோட்டைவாசலைத் தாண்டுவதற்கு முன் மிகவும் பெரியதான காடெதுவென்று என்னைக் கேட்டன ளதனை யும் அடையாளத்துக்காக நீயவளிட முரைக்கக் கடவை யுரைத்து இந்த என் மோதிரத்தையும் அடையாளமாக வவளிடங் கொடுக்கக்கடவை நீசெல்லுங்காரிய மனுகூல

மாகவே நிறைவேறுக. என்று ஆசீர்வதித்து இருவருமாக வெளியேவந்தவுடன் ஆஞ்சனேயர் பெருமாளையும் இளைய பெருமாளையும் வானராதிபனான சுக்கிரீவனையும் வணங்கி விடைபெற்றுப் பிராட்டியைத் தேடவோராய்ச் சென்றனர். சென்றவர் சுக்கிரீவனுரைத்த வண்ணமேசென்று செங்கா விக்கற்களுஞ் செம்மணிகளி னொளியும் நெருங்கிச் செவ் வானம்போன்று விளங்குதலாலும் அரவத்துடன் இந்து வும் யாறும் பொருந்துதலாறும் சிவனது சிரம்போல காணப்படுகின்ற விந்தமலையினருகில் விரைந்தெய்தி அந் நெடுங் குன்றினுடைவிர் மணிச்சிகரமும் பொன்னெடுங் கொடுமுடிப் புரைகளும் புடைகளும், நன்னெடுந் தாழ் வரை நாடினார், நவையிலார் பன்னெடுங் காலமாமென்ன வோர்பகலிடை, என்றபடி அநேகநாளிற் றேடத்தக்க வம் மலையின் நெடிய சிகரத்திலும் பொன்மயமான கொடுமுடி களிலும், குகைகளிலும், பக்கங்களிலும், அடிவாரங்களி லும், பிராட்டியைத்தேடினார். வானரர்களுட னஞ்சனேயர் அங்குத் தேடிக் காணாமையால் உடனே விரைந்தங்கு நின்றும் விரைவாக இடையிலுள்ள பூமியினெந்த பாகத் தையும் சும்மாவிடாமற் றேடிக்கொண்டே அன்னப்பறை வைகளும் தேவமாதரும் ஆடுகின்ற சிறந்த துறைகளை யுடைய நருமதையாற்றை யடைந்தார்கள் அடைந்தங்கு,

அன்ன மாடிடங் களும்மரர் நாடியர்
துன்னி யாடிடங் களுந்துறக்க மேயவர்
முன்னி யாடிடங் களுஞ்சுரும்பு மூசுதேன்
பன்னி யாடிடங் களும்பரந்து சுற்றினார். என்றபடி

யந்நருமதைக் கரையில் அன்னங்கள் விளையாடுமிடங் களிலும் தேவருலகினர் நெருங்கி விளையாடுமிடங்களிலும் சுவர்க்க வாசிகளடைந்து ஆடுமிடங்களிலும், ஆண்வண்டு களுடன் பெண்வண்டுகள் இசைபாடி யாடுமிடங்களிலும், சுற்றிச்சுற்றிப் பிராட்டியைத் தேடினார்கள். தேடியலையுங் காலத்து,

பெறலருந் தெரிவையை நாடும் பெற்றியார்
அறனறுங் கூந்தலு மளகவண்டு சூழ்
நிறநறுந் தாமரை முகமு நித்தில
முறுவலுங் காண்பரான் முழுதுங் காண்கிலார். என்றபடி

பிராட்டியின் உருவமுழுது மங்குக் காணவிடினும், அம்மகாதேவியின் கருமணலடுக்காகிய நல்ல கூந்தலையும், ந்தலை நாடிவருகின்ற வண்டாற்சூழப்பட்ட தாமரைமல கிய முகத்தினையும் முத்துக்களாகிய தந்தங்களையுங் காண்கின்றார்கள் இவ்வாறு காண்கின்றனரேயன்றி பிராட் டியைக் கண்டிலர் காணமையின்.

செருமத யாக்கையர் திடுக்கில் சிந்தையர்
தருமத யாவிகை தழுவுந் தன்மையர்
பொருமத யானையும் பிடியும் புக்குழல்
நருமதை யாமெனு நதியை நீங்கினர். என்றபடி

போர்புரிவதில் மதத்த உடலினரும் தருமமுந் தயவு முடையரும் ஆகிய வானர வீரர்களுடன் ஆஞ்சனேயர் பொருந் திறலுடைய மதயானைகளும் பிடியானைகளும் புகுந்துலவுகின்ற நருமதை யாற்றைக் கடந்து.

தாம கூடத்திரை தீர்த்த சங்கமும்
நாமகூடப் பெருந் திசையை நல்கிய
வாமகூடச் சுடர் மணிவயங் குறும்
ஏமகூடத் தடங் கிரியை யெய்தினர்.

வரிசை வரிசையாக அலைவீசி இழுத்துவந்த சங்கங்களும் திரைகட் கொளிதருகின்ற வழகிய சந்திரசூரியர்களை யொத்த மணிகளும் பொருந்திய யாறுகளையுடைய ஏமகூடமென்னு மலையை யடைந்தார்கள் அம்மலையோ,

மாடுறு கிரிகளும் மரனு மற்றவுஞ்
சூடுறு பொன்னெனப் பொலிந்து தோன்றுறப்
பாடுறு சுடரொளி பரப்பு கின்றது
வீடுறு முலகினும் விளங்கு மெய்யது.

பறவையும் பல்வகை விலங்கும் பாடமைந்
துறைவன கனகநுண் பூழி யொட்டலான்
நிறைநெடு மேருவைச் சேர்ந்த நீரவாய்ப்
பொறைநெடும் பொன்னொளி முழுதும் போர்ப்பது

பரவிய கனகநுண் பராகம் பாடுற
எரிசுடர்ச் செம்மணி யீட்டத் தோடிழி
யருவியு நதிகளு மலங்கு தீயிடை
யுருகுபொன் பாய்வபோன் றொழுகு கின்றது.

விஞ்சையர் பாடலும் விசும்பின் வெள்வளைப்
பஞ்சின் மெல்லடியின ராடற் பாணியும்
குஞ்சர முழக்கமுங் குமுறு பேரியின்
மஞ்சின மரற்றலும் வழங்கு மாண்பது

அனையது நோக்கி னராமிதா யயில்
இனையவேலி ராவண னிருக்கும் வெற்பெனும்
நினைவினரு வந்துயர்ந் தோங்கு நெஞ்சினர்
சினமிகக் கனற்பொறி சிந்து செங்கணார்.

இம்மலை காணாது மேழை மானையச்
செம்மலை நீக்குதுஞ் சிந்தைத் தீவினை
விம்மலுற்று வகையின் விளங்கு முள்ளத்தர்
அம்மலை யேறினா ரசச நீங்கினார்

இரிந்தன கரிகளும் யாளி யீட்டமும்
விரிந்தன கோளரிகளும் வெருவி நீங்கின
திரிந்தின வெங்கணுந் திருவைக் காண்கிலார்
பரிந்தன சிந்தனை பரிகின் றுமென.

ஐம்பதிற் றிரட்டிகா வதத்தி னாலகன்
றும்பரைத் தொடுவ தொத்துயர் விணோங்கிய
செம்பொனற் கிரியை யோர்பகலிற் றேடினார்
கொம்பினைக் கண்டிலர் குப்புற் றேகினார்.

இவ்வானர வீரர்சென்று தேடியவம்மலையானது தன்னருகிற் பொருந்திய மலைகளும் மரங்களும் பிறபொருள்களுமெல்லா முயர்ச்சிவாய்ந்த பொன்னைப்போல விளங்காநிற் அருகிலெல்லாம் பொன்னொளிவீசி முத்தி யுலகமாகிய பரமபதத்தினுஞ்சிறந்து விளங்குமுருவினவாயும் தன்னுட் பொருந்தும் பறைவையாதியவும் சிங்கங்கரடி யாதியவும் உயர்ச்சிவாய்ந்த அம்மலையின் பொற்பொடிபட்டு மேருவினை யடைந்த கரியகாகம் பொன்னாமென்னு முறையிற்றவறாது விளங்காநிற்கும் அன்றி அம்மலையினாற் புறங்

களிலும் பரவிய பொற்பொடியொடு மாணிக்க கற்களுந்து
கிடக்க அருவிநீரொழுகுந தன்மைபற்றி யெரியு நெருப்பி
லுருகியோடும் பொன்னைப்போல காணுந் திறமுடையதும்
வித்தியா தரர்களின் பாடலோசை கேட்கப் படுவதும்,
சுவர்க்கத்திலுள்ள அரம்பையரான பஞ்சின் மெல்லடியி
னரின் ஆடற்சதயிலோசையும் யானைகளின் பிளிறொலியும்
குமுறுகின்ற பேரிகையைப்போல மேகங்கள் முழங்குதலை
யும் கொண்டு விளங்கு மாண்பினை யுடையது அன்றியும்
இன்ன மனேகவிதமான அற்புதங்க ளானவை யெல்லா
மமைந்து கிடக்கப்பெற்ற அம்மலையின் வைபவங்களை
யெல்லா முற்றநோக்கி இம்மலை பொன்மலையாக விருத்
தலின் இது கூரிய வேற்படையினை யுடைய இராவண
னுடைய இருப்பிடமாக இருந்தாலு மிருக்கலாம் என்று
கருதி யதனாலுண்டான மகிழ்ச்சியா லுயர்ந்தோங்கு
தோளினை யுடையராய்ப்பின்னர் இராவணன் பிராட்டியை
யபகரித்த பாதகனன்றோவென்று நினைவுதோன்ற மிகுந்த
கோபமுடையராகிக் கண்களிற் செம்மையுந் தீப்பொறி
யுங்கதுவாநிற்ப அம்மலைமீதேறி இம்மலையில் நாந்தேடி
வந்த பிராட்டியைக் காண்போமென்றும் அதனால் பெரு
மாளடைந்துள்ள மனோவியாதியை நீக்குவோ மன்றியும்
நந்தலைவனை சுக்கிரீவ மகாராசன் சுவாமிகாரிய துரந்
தரனுமாறுஞ் செய்வோமென்றும் அச்சமின்றியம்மலையின்
நாலாபக்கங்களி ஓடிச்சாடி நாடினார்கள். இவர்களைக்
கண்டு அம்மலையின்கண் எதிரற்று வாசம்புரிந்த சிங்கங்
களும் யாளிக்கூட்டங்களும் சிங்கக்கூட்டங்களும் பயந்து

விலங்கியோடின இவைகளனைத்து மஞ்சியோடு மாறுலவியும் பிராட்டியை யம்மலையிலெங்குங் கண்டிலர் காணுமையா லம்மலையினின்றுங் குதித்து இரண்டு வெள்ளம் வானர வீரர்களும் சாம்ப னங்கதன் முதலியோரும் உடன்வர மகா வீரரான ஆஞ்சனேயரானவர் இனி மகேந்திரகிரியிற் பார்ப்போமெனச் செல்லுவோர் ஒருகொடிய பாலைவனத் தை யடைந்தனர்.

அப்பாலை வனமோ இருப்பையு மோகமையு நெல்லி யுங் கோங்குமாதிய மரங்களையும் வறுநீர்க் கூவல்களையுங் கிழவோரி முதுபாம்பு கிழயானை மறவர் மறத்தியர் ஆறலைத்தல் றை கொள்ளலென்னு மெவையுமில்லாத வெறு வெளிப் பரப்பேயாம். அவ்வெறு வெளிப்பரப்பில் கழுகு பருந்து முதலிய புட்களும் செல்லா, விரைந்தோடு மான் முதலிய எவ்விலங்கும் புகாப் புள்ளடையா விலங்கரிது புள்ளொடும் கள்ளடை மரனிலகல்லுந்தீந் தீகருள்ளிடை யரறுண் பொடியொ டொட்டலின், வெள்ளிடை யல்ல தொன்ற தவ்வெஞ்சுரம், அத்தகைய கொடும்பாலையிற் புக்கவானர வீரர்கள் ஐம்புலன்களு நடுக்கமுற்று உணர்வு மழிந்து பொன்போலியாக் கைகளும் புழுக்கமுற்று வாடி வதங்கினராய் எமலோகத்தில் எரிவாய் நிரயத்திலெய்திய புழுக்களை யொப்பத் துடிதுடித்து வருந்தி,

> நீட்டிய நாவினர் நிலத்திற் நீண்டுதோ
> றாட்டிய வெம்மையா லுலையுங் காலினர்
> காட்டினுங் காய்ந்த தங்காயந் தீதலால்
> சூட்டகன் மேலெழு பொரியிற் றுள்ளினர். என்றபடி

நீட்டப்பெற்ற நாவினையும்பூமியிற்றாழ்த்துந்தோறுஞ் சுடுதலால் தூக்கித் தூக்கிவைக்குங் காலினையும் உடையராய் வனங்களிலுலவியும பிறவெப்பமானவிடங்களிலுலவியுந் தழும்பேறிய தம்முடலம் தீயபபெற்றுச் சூட்டடுப்பிற் பொரிக்கும் பொரி துள்ளுதல்போலத் துள்ளிக் குதித்து ஓடி ஓடி ஒருநீருமாகாரமுங்காணாமற் கவன்றுகவன்று இனிநங்கதியென்னை சுவாமிகாரியார்த்தமாகவந்த நமக்குமிப்படிப்பட்ட கொடியதுன்பமுண்டாயதே எங்குமொரு நிழலுமில்லையே நீர்பானகமே இருக்கின்றதே ஸ்ரீ ஹரி ஹரி ராமராமராம இஃதென்னையென்று வறண்ட உதடுகளை நாவினால் வருடிக்கொண்டு ஓடுபவரின் எதிரே ஒரு பிலமொன்று காணப்பட்டது இப்பெரும் பிலந்தவிர நமக்கு இப்பொழுதங்கு வழிவேறின்றே யெனக்கவன்ற வானரவீரர்கள் இன்னொரு வெளியிலிதற்குமேற் போக நம்மாலியலாது விண்மேற் பறந்து போதற்குப் பறவைராசியுமல்லேம் பறவைகள் பறக்கினும் இறகு கரிந்தேசாதல் வேண்டும் ஆவோ இனி வேறுகதியற்ற நாம் இந்த பிலத்துட்புகுந்து செல்வோமென.

மீச்செல வரிதினி விளிய னல்லது
நீச்செல வொழியவுந் தடுக்குந் திண்பில
வாய்ச் செலவன்றென மனத்தி னெண்ணினார்
போய்ச் சிலைவறிது மென்றதனிற் போயினார்.

அங்ஙனஞ் சென்றோர் விரைவாக அப்பிலத்தின் முடிவிடஞ் சென்றனர் அவ்விடமோ திகந்தராளங்களெல்லா நிறைந்த பேரிருளினை யன்றி மற்றொன்றுங்

காணப்படாததாக வுள்ளது அதனிற் சூரிய பகவானுக் குப்பயந்து உலகிலுள்ள இருளனைத்துங் குடிப்புக்குளது போன்ற ஒரு குகைக்குட் சென்று சேர்ந்தார்கள் அக் குகையானது உட்புக்க இவர்களின் கைகால் முதலிய அவயவ முதலியவைகளையும் அறியக்கூடாத இருட்பிழம் பினதாகிய தாதலின் காலெடுத்து வைக்கவும் கூடாதவர் களாயும் இனி வெளிப்புறத்தைக் காண்போமென்னு நினை வில்லாதவர்களாயும் இவ்விடத்தில் வழியுள்ளதென்றறியக் கூடாதவர்களாயும் இனி நாமிந்த இருட்குழியி லிறக்க வேண்டியதைத்தவிர மற்றொன்று மின்றுமிங்கே நல்லகாற் றின்மையால் சுவாசமோ திணறுகின்றது இனிநாம் பிழைக் கப்போகிறதில்லை. அந்தோநாராயணு எங்களுக்கித்தகைய கதியும் வரவேண்டுமோ என்று சிந்தைதடுமாறி ஆ ஒன்று மறந்தோம் ஒப்புமுயர்வுமற்ற ஆஞ்சனேயர் நம்முடனிருக் கின்றார் ஆனாலவரை இப்பேரிருளில் நாம் காண்கின்றோ மில்லை நம்முடன் தானிருப்பர் அழைப்போமென அஞ் சனை நந்தன ஆதித்தியமாணவ நெஞ்சம் வருந்துமெங்களை இந்தவேளை ரட்சிக்கவேண்டுவது நின்கடமை நின்னலாகா விடினிறந்து படுவதே எங்கள் கதியாகும் ஆஞ்சனேயா அபயம் அபயமென்று சாம்பவ னங்கதன்முதலான மஹா வீரர்களும் இரண்டு வெள்ளம் வானரவீரர்களும் வருந்தி,

நின்றனர் செய்வதோர் நிலைமை நோக்கலர்
பொன்றின ராமெனப் பொருமும் புந்தியர்
வன்றிறன் மாருதி வல்லையோ வெமை
இன்றிது காக்கவென் றிரந்து கூறினர்.

இவர்க ளிவ்வாறு அபயம்புக் கதனைச் சத்தத்தா லுணர்ந்த கருணாநிதியான ஆஞ்சனேயர் திருவுளமிரங்கி அஞ்சன்மின் யானுங்களைக் காக்கின்றேன் எனநெடிய வாலினை அனைவரும் விடாமற் பிடித்துக் கொள்ளுங்கள் விட்டு விடாதீர்கள் பத்திரம் பத்திரமெனக்கூறி.

உய்வுறுத் துவன் மனமுலை யிருழின்வால்
மெய்யுறப் பற்றுதிர் விடுகி லீரென
அய்யனக் கணத்தி னிலுறகலு நீ ளெறி
கையினிற் றடவி வெங்காலி னேகினன். என்றபடி

அனைவரையுந் தமது வாலைப் பிடித்துக் கொள்ளும் வண்ணஞ் செய்து பன்னிரண்டு யோசனை யளவகன்ற திருமேனியும் அதற்கேற்ற வுயரமும் தாங்கி மின்னலைப் போல வொளிவீசுகின்ற குண்டலங்கள் ஒளிவீசா நிற்பவும் நெடிய மேருமலைபோன்ற புயங்கள் விம்மி விளங்கவுந் தமது நீண்ட கைகளாலுங் கால்களாலும் வழியைத் தடவிக்கொண்டு வாயுவேகமாக நெடுந்தூரஞ்சென்றனர் அ[illegible] மனஞ்சென்றவர் ஸ்ரீராமபிரானது கருணையினால் நிர்மானுஷ்யமான ஒருசிறந்த நகரத்தில் வெளிச்சமுள்ள இடத்தில் அவ்விரண்டு வெள்ளம் வானர வீரர்களையும் சாம்பவன் அங்கதன் முதலியவர்களையும் இழுத்துக்கொண்டு சேர்த்தனர் சேர்த்துத் தம்மிடம் அபயம்புக் கவர்களுயிரை இருணிலத்தி லழிந்தொழியாது காப்பாற்றித் தமது வீரதீர பராக்கிரமத்தை நிலைநாட்டினர்.

வாலைப் பிடித்துக் கொள்ளச்செய்து இருணிலத்தினின்றும் வானர வீரரைத்தமது பராக்கிரமத்தால் ஒளியுங் காற்றுமுள்ள நிர்மானுஷ்ய நகரத்துட் சேர்த்ரக்ஷித்தவுடனே வானர வீரரனைவரும் ஆஞ்சனேயரை பலவாறு புகழ்ந்தார்கள்.

ஸ்வாமிகாரிய துரந்தராயநம:

௫-வது.

# பிலபேதன பராக்கிரமம்.

---

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

*உரம்பெறு வீரமீண்டு முறுதுமே லிருளிற் சாதுந்*
*திரம்பெறு நின்னையுற்ற திறத்தினேந் தம்மைப்பூவிற்*
*தரம்பெறு மாறுசேர்த்தி தயாவுடனென்றூர்க் காப்பான்*
*வரம்பெறு பிலம்பொதுத்த மாருதி சரணம்போற்றி.*

(இ-ள்.) வன்மைவாய்ந்த வீரனே நாந்திரும்பிவந்த வழியே செல்லுவோமாயின் இருளிலகப்பட்டுச் சாவோம் உறுதியமைந்த உன்னைரக்ஷகனுகப்பெற்ற வெங்களைமுறையாகப் பூவுலகிற்சேர்த்துத் தயவுடன் காத்தருளவேண்டுமென்ற வானரவீரர்களையும் தேவமாதினையுங் காக்கும் வண்ணம் சிரேட்டமான அப்பிலத்தின் மேற்புறத்தினைப் பொத்தலாக்கி அனைவரையுங் காத்தருளிய பராக்கிரமசாலியான ஆஞ்சனேயரதுதிருவடிகட்கு நமஸ்காரம் எ-று

## இதன் வரலாறு.

சீதா தேவியைத்தேடிக் கொடுஞ்சுரத்தி லகப்பட்டு ஆங்குக் கண்டவொரு பிலவழியாக ஒரு நிர்மானுஷ்ய நகரினையடைந்த வானரவீரர்கள் அந்நகரி னழகைப் பார்த்தாச்சரிய மடைந்தார்கள் அந்நகரமானது நீருட் சூரியமண்டலமறைந்து விளங்குவதெனவும் சுவர்க்கமும் நாணுமாறுப் பிரகாசிப்பதெனவும் கமலாசனியான ஸ்ரீபெரிய

பிராட்டியின் திருமுகமண்டலம் போன்றதெனவும் 'கண்டனர் கடிநகர் கமலத்தொண் கதிர் மண்டில மறைந்துறைந் தனையமாண்பது' விண்டல நானுற விளங்குகின்றது புண்டரீகத்தவள் வதனம் போன்றது எனக்கவிகள் கொண்டாடுந் திறத்ததாயும்,

கற்பகாடவியை யுடையதாயும் மிகுதியான தாமரை யோடைகளை யுடையதாயும் பொன்மயமான அழகிய கோபுரப் பிராகாரங்களை யுடையதாயும் பொன்னுலகவாசிகளான தேவருங் கண்டா லாச்சரியப் படத்தக்கதாயும் மயனென்பான் தனது சிற்பத்தொழி லெல்லாம் விளக்கமாகக்காட்ட வருந்தி யியற்றி யுள்ளதாயும் தேவேந்திர நகரமு மொப்பிலாததாயும் அங்கு சூரியசந்திராதி ஒளிப் பொருளின் பிரகாச மில்லாவிடினும் ஒளியுள்ள மணிகளி லும், பொன்னாலும், மண்ணாலும், நல்ல பிரகாசத்தோடு விளங்குவதாயும் பொன்னுமணியும் தூசுமூடைகளும் சந்தனமும் பூமாலைகளும் ஆபரணக் குவியில்களும் மிகுதியாக வுடையதாகியும் நல்லதே வருணவனைய போசன திரவியங்களும் தேனுமதுவும் பழவருக்கங்களும் ஆதிய இவைகள ளவனற்றனவாக விளங்குத லுடையதாயும் விளங்கினும் ஆடவரு மடந்தை யருமாகிய அனுபவிப்ப வரைமாத்திர மில்லாததாயுமுள்ள அந்நகரத்தினைக்கண்ட வானரவீரர்கள் இதுதானு யிருக்கலாம் ராவணனென்பூதி னது நகரம் என்று கூறிக்கொண்டு நானுபக்கங்களிலுஞ் சுற்றித் திரிந்து சரப்பிராணிகள் எவையையுங் காணு

தாராய் அந்தோ விஃதென்னை? மனோகரமான தடாகங்களும் பொய்கைகளும் நன்மணம்வீசும் சோலைகளும் அச்சோலைகளில் நல்ல குயில்களும் நாகணவாய்ப் பறவைகளும் இருக்கின்றன இவையனைத்தையா திருக்கின்றன. ஒருவேளை ராக்ஷசமாயையோ பிலத்துளி னிருந்தாரை வரும் யாதேனுங் காரணத்தினு லிறந்துபடவது நிர்மானுஷ்ய நகரமாயிற்றோ.

மிகவும் பெரிய விப்பிலத்தினின்றும் வெளியேறுதற்கொருவழி கூறுவாரையுமிங்குக்காணுது வருந்தவேண்டியவர்களானோம் இவ்வள வாபத்துட் சிக்கியயாம் உயிரிழவாதவர்களாகவும் இருக்கின்றோம இதனுண்மை யெதுவும் புலப்படவில்லை யெனக்கூறிய மற்றைய வீரர்களின் வசனத்தினைக் கேட்ட சாம்பவான் வானர வீரர்களே! பகைவனுகிய ராவணன் நம்முடைய வருகையை அறிந்து நம்மை வஞ்சிப்பா னுண்டாக்கிய பிலமாயிருக்க வேண்டும் நாமபுக்குழன்ற இப்பிலம் இனியதாகட்டும் அவ்விராவணனை ஒருகைபார்ப்பதே என்று கூறியவுடனே ஆஞ்சனேயர் கோபத்துடன் இப்பிலத்தின் முடிவான வெளிவழி கிடைத்து வெளியேசெல்ல நம்மால் முடியாது போனல் சகரர் பூமியைத் தோண்டியது போலத்தோண்டி வெளியே போவோம் அன்றேல் வஞ்சனையினை யுடைய அரக்கரனைவரையுங்கொன்று செல்வோம் என்று கூறி அந்நகரத்தின் பல விடங்களிலும் அசுரர் மறைந்திருக்கின்றார்களா என்று வானர வீரர்களுடன் தேடிப்பார்த்தனர்

பார்த்தவர் அந்நகரத்தின் நடுவில் ஒருசிங்காரமான இடத்தில் விரிந்துகிடக்கும் சடையுடனும் நாசிநுனியில் வைத்த கண்ணுடனும் இருதொடைமீதும் வைத்த கரங்களுடனும் ஒரு மாதிருந்து தவம் புரிவதனைக்கண்டு இவள் தானோ பிராட்டி உற்றுராய்ந்துரைக்க என்ற அங்கதனுதியார் சொற்கேட்ட ஆஞ்சனேயர் அவளை யுற்றுப் பார்த்து பிராட்டியல்லளென்றுணர்ந்து வானரவீரர்களைப்பார்த்து,

எக்குறியோ டெக்குண மெடுத்திவ ணுரைக்கேன்
இக்குறி யுடைக்கொடி யிராமன் மனையாளோ
வக்கின் மணிமுத்த மணிமயார மதிநேர்நின்
றொக்கு மெனிநெக்கு மெனமாருதி யுரைத்தான். என்றபடி

சங்குமணி முத்தினையும் முத்துச் சந்திரனையும் ஒக்குமோ ஒக்காது அதுபோல பிராட்டியி னழகுக்கும் இவளழகுக்கும் சிறிதும பொருத்தமில்லை யாதலிற் பெருமாட்டியல்லள் என்று ஆஞ்சனேயர்கூறி அவளருகினின்றவுடனவளும் கண்களைத்திறந்து சுளித்த முகத்துடன் நீயிர் தேவரல்லீர் இவ்விடத்துக் கெவ்வாறு வந்தீர்கள் நும்வரலா றென்னையெனக் கேட்டாட்கு மறுமொழியாக.

வேதனை யரக்கரொரு மாயைவினை வித்தார்
சீதையை யொளித்தனர் மறைத்தபுரை தேர்வுற்
றேதமில றத்துறை நிறுத்திய விராமன்
றூதருல கிற்றிரிது மென்னுமுனை சொன்னார். என்றபடி

கொடிய துட்டர்களான அரக்கர்கள் உலகத்தில் நீதியை நிலைநிறுத்திய ராமச்சந்திர மூர்த்தியின் மனைவியான

சீதாதேவியைத் திருடிமறைத்து விட்டார்கள் அப்பிராட்டியைத் தேடித்திரியும் தூதர்கள் நாங்கள் என்று கூறினர்கள் கூறிய அம்மொழிகேட்ட மைம்மலிகூந்தற் கொம்மை வெம்முலைக்கோற்றொடி மடந்தை இருந்த ஆசனத்தினின்றுமெழுந்து அளவற்ற மகிழ்ச்சி யுடையவளாகி உங்கள் வரவு நல்வரவாகுக என்று நடனஞ் செய்கின்றேனென்று கண்களி லானந்த பாஷ்பமொழுக ராமபிரான் எவ்விடத்தி லிருக்கின்றனர் என்று கேட்டனள் கேட்டாட்கு ஆஞ்சனேயர் பெருமானது சரிதமனைத்து முரைத்தனர் அவ்வாறுரைத்த ஆஞ்சனேயரை நன்குயப் பூசித்தனள் உடனே ஆஞ்சனேயர் அவளை வணங்கி அன்னாய் இந்நகருக் கிறைவன் யாவன் நின்வரலாறென்னை மறையாதுரைத்தருள்க வென்னலும் அப்பொன்னங் கொடிபோல்வாள் தன் அல்லி மலரனைய வாயைத்திறந்து ஸ்ரீராம தூதரே.

இந்நகரம் மயனென்பவனது சுகவாசத்துக்காக சதுர்முகனாலாக்கப்பட்டது அவனுக்கு மேனகையென்னும் பயிலொருத்திமீததிக ஆசையுண்டாக அவள் எனக்குயிர்த்தோழியாதலாலவளை அவனிடஞ்சேர்த்து யானுமிவ்விடத்தில் வெகுகாலமிருந்து விட்டேன். இதனையுணர்ந்த இந்திரனிங்கெய்தி மயனைக்கொன்று மாதினை அழைத்து நீயே னவ்வாறு செய்தனை யென்னலுமவள் என்னைச் சுட்டிக்காட்டி யிவளால் விளைந்த திதுவென்று கூறுதலும் அவன் என்னை நீ இங்கேயே இரு இந்நகரம் நின்காவல்

இதன்வழி இருளால் மூடப்பட்டொழிக இங்குன்னை யன்றி வேறெந்தச் சரப்பிராணியு மில்லாதொழிக நினக் கிட்ட இச்சாபம் இராமனனுப்பும் வானர மிங்குவந்தா லொழிக என்றுகூறி யவ்வரம்பையுடன் போய்விட்டான் அந்நாள் முதலிந்நாள் காறுமுங்கள் வருகையை நோக்கி அருந்தவஞ்செய்து கொண்டிருந்தேன் இன்றுங்களைக்கண் டேன் இப்பிலம் நூறுயோசனை விஸ்தீரணமுள்ளது யான் மேலுலகங்காண விழைகின்றேன் என்னையீடேற்ற மார்க்க மிருந்தா லுரையுங்களென்று கூறினள் இவள் வாய்மொழி கேட்ட ஆஞ்சனேயர் அவளைவணங்கி நீயஞ்சற்க நின்னைத் தேவர்கள் வாழும் சொர்க்க வுலகத்திற் சேர்க்கின்றேன் என்று கூறினர் இவ்வாறு கூறியவுடன் அவளுமதனி மகிழ்ச்சியுற்று நின்றனள். அப்பொழுது வானர வீரர் களும் ஆஞ்சனேயரைப்பார்த்து,

முழைத்தலை யிருட்கடலின் மூழ்கி முடிவேமைப்
பிழைத்துயி ருயிர்க்கவருள் செய்த பெரியோனே
இழைத்திசெய லாயவினை யெனறன ரிரந்தார்
வழுத்தரிய மாருதிய மன்னது வலிப்பான். என்றபடி

பிலத்துவாரத் திருட்டிற் சாகாது காத்தருளினீர் இப்பொழுதும் இப்பிலத்துணின்று வெளியே கொண்டு சேர்ப்பது உமது கடமை இங்கிருப்பதிற் பயனென்னை என்ற வானரவீரர்களைப்பார்த்து ஆஞ்சனேயர் அஞ்சாதீர் என்று கூறிச்சிரித்துக்கொண்டே ஒரு பேருருவங்கொண்டு வேதபுருஷனுலு மடைதற் கரியதான பரமபதத்தில் அப்

பிலத்தின் மேற்புறஞ்சென்று பொருந்தும் வண்ணம் கைகளை நீட்டி மேலே யுயர்த்தி நிமிர்ந்தனர் இவரதத்தோற்றம் பண்டுபூமியை ஒரு கொம்பி னுதியிலெடுத்த ஆதிவராகப்பெருமாளை யொத்ததெனக் கண்டவ ரச்சங்கொண்டு கூறத்தக்கதாயும் மாவலிபால் மூவடி மண்கேட்ட உலகளந்த பெருமாளன்று யர்த்திய சரணகமலத்தை யொத்ததெனக்கூறத்தக்கதாயும் இருந்தது இத்தகைத் தோற்றத்துடன் கைகளாலூன்றித் தன்முதுகும் பூமியில் நூற்றுநாற்பது யோசனை யகலப்பிளந்து இவர் கைகளில் தங்கமேலுயர்ந்த ஆஞ்சனேயர் அப்பிலத்தின் மேற்பாகத்துப் பூமியைத்தமது தந்தைமேருவின் சிகரத்தைக் கடலிலிட்டாங்கு மேற்குக் கடனடுவி லெறிந்து மேகம்போல வீரகர்ச்சனைசெய்தனர் அவ்வாறு செய்தமையால் பிலமென்பதான்றில்லாது பள்ளமான பூமியாகவும் இருசுடரொளி முதலிய பொருந்தி விளங்கியது இவ்வதி பராக்கிரமமான செயலினைக்கண்டு வானர வீரர்களெல்லாம் ஆச்சரியமும் மகிழ்வுமடைந்து வீரகர்ச்சனையுடன் ஆஞ்சநேயருடைய வீரதீர பராக்கிரமத்தைப் புகழ்ந்து கொண்டாடிப் பிலத்தின் மேற்புறத்தை யடைந்தனர் சுயம்பிரபை யெனும் பெயரினையுடைய வம்மாதும் ஆஞ்சனேயரது பராக்கிரமத்துக்கு மெச்சி யவரைப்புகழ்ந்து சென்றனள். ஆஞ்சனேயரும் வானர வீரர்களுடன் பழய வுருவந் தாங்கிச் சுவாமிகாரிய துரந்தரராகச் சென்றனர்.

வாயுநந்தனாய நம:

---

௯ - வது.

# சுரசாமத்லரபங்க பராக்கிரமம்.

---

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

*விரைசெறி கமலம் பூத்த வீறுசா னீலவாட்கட்*
*சுரைசைவந் தரக்கியாகித் தொடுகட லிடையிற்றுக்க*
*உரைசெறி மேருவென்ன வோங்கியோ ரணுவாய்வென்ற*
*அரைசினை யனுமனமத் தண்ணலை யடைந்துவாழ்வாம்.*

(இ-ள்.) மணம் பொருந்திய தாமரைமலரிற் பூத்த பெருமை மிக்க நீலோற்பல வலரையொப்ப விளங்கும் வாளனைய கண்களையுடைய சுரசையென்பாளொரு தேவ மாது கோரரூபமுள்ள ஒரு அரக்கியாகித் தாண்டப்பட்ட கடலிடைவிற்றனது செல்கையைத் தடுத்து எதிர்த்தலும் அவளை வெல்வான் புகழமைந்த மேருமலையைப் போல பேருருவெய்தி யணுவுருவமாகி யவளைவென்ற தலைவனை அனுமானென்னும் பெயரமைந்த ஆஞ்சனேயரைப் பெருமையிற் சிறந்த சிறிய திருவடியை யடைந்து வாழ்வோமாக - எ-று.

## இதன் வரலாறு.

அங்கதனுதிய சிறந்த வானர வீரருடன் சுக்கிரீவ மகாராசனுடைய கட்டளையால் சீதாதேவியைத் தேடி வந்த ஆஞ்சனேயர் சுயம்பிரபையைக் கண்டு அவர்க்க மளித்து இருளின் மயங்கிய வானரவீரரைப் பிலபேதனஞ் செய்து

ரக்ஷித்து அனைவருடனுந் தென்றிசை நோக்கிப் பிரயாண மாகி மணன்மேடுகளாகிய கொங்கைகளையும் செவ்வல்லி மலர்களாகிய வாயினையும் முத்துக்களாகிய பற்களையும் தாமரைமலராகிய முகத்தினையும் உடையபினாகி நதிக்கரை யவான நாடுகளையும், காடுகளையும், மலைகளையும், கடந்து விதர்ப்ப நாடடைந்து பிராமணவேடத்துடன் அந்நாட்டி லாராய வேண்டியபடி யாராய்ந்து பின் வளமமைந்த தண் டகநாட்டை யடைந்து அங்குமவ்வாறேதேடி அங்கு நின் றும் தேவமாதரும் நாகர்மாதரும் நெருங்கி [illegible]யாடு முண்டகத்துறை யடைந்து அங்குந்தேடி அ[illegible]ந்நின்று மேன்மை யமைந்த பாண்டு கிரிக்குச்சென்று ம[illegible]லையைப் போலவிளங்கு அம்மலையிலும் தேவியைக்கா[illegible] அங்கு நின்றும் கோதாவிரிக் கரையடைந்து அங்கு[illegible]மையா [illegible]ங்குநின்றும் சொன்ன திரத்தக்கரையையடை[illegible] அங்கு நின்றும் எழுவகைக்கொங்கண நாட்டையுங்கட[illegible] அருந் ததிமலையை யடைந்து அங்குந்தேடி யங்குநின்று[illegible] திரு வேங்கடமலையை யடைந்து அங்கு முனிசிரேட்ட[illegible]களும் வேதத்தில் வல்ல பிராமணர்களும் பாகவதோத்தம[illegible]களும் தேவர்களும் தேவர் மாதர்களும் சித்தராயுள்ளாரும் அம் மலையிலுள்ள கபிலமுதலிய தீர்த்தங்களின் நாடொறு நிய மந்தவறாது நீராடுதலையும் காமம்வெகுளி மயக்கங்களை யொழித்து பகவத் சரணாரவிந்தத்தில் வைத்த மனதுடன் தேவர்கள் தவஞ்செய்தலையும் கண்டம்மலையேறி யங்குந் தேடி யங்குநின்றும் காஞ்சிநாட்டை யடைந்து அந்நாட் டிற் குறிஞ்சியென்னு மலைகளில் வேடர்சேரிகளிருத்தலும்

குறிஞ்சி நிலங்களை யடுத்த முல்லை நிலங்களில் இடையர் சேரிகளிருத்தலும் அம்முல்லை நிலங்களினருகில் மருத நிலங்களில் மள்ளர்சேரிகளிருத்தலும் அம்மருத நிலங்களி னருகில் நெய்தனிலங்களில் நுளையர்சேரிக ளிருத்தலும் சிறந்த நகரங்களில் பிரமக்ஷத்திரி வைசிய சூத்திராதி ஜனங்கள் நீர்வள நிலவளங்களால் ஆரோக்கிய காத்திர ராய் சத்தியஞ் சௌசம், தானஞ் சீலம் பகவத் பக்தி யென்னு மிவைகளை யுடைய சத்ஜனங்களாய் நெருங்கி யிருத்தலும் நாங்கண்ட நாடுகளிலிது மிகச்சிறந்ததென்று செல்பவர் சோழம் மலையாளம் முதலிய நாடுகளின் வழி யாய்த் தென்பாண்டி நாட்டை யடைந்து அந்நாட்டின் தெனகோடியிலுள்ள மகேந்திரமென்னு மலையின் சாரலை யடைந்து அங்குப் பல விடங்களிலும் பிராட்டியைத் தேடிக் காணாமையால் மனம்வாடி மற்றை வானரவீரர்கள் ஆஞ்சனேயரைப் பார்த்து வாயுநந்தனரே சுக்கிரீவ மகா ராசன் கூறியனுப்பிய நாளவதியும் ஆய்விட்டது. நாஞ் சென்று பிராட்டியைக் கண்டிலேம் என்று கூறுது மேல் பெருமாளுயிர் நில்லாது ஆதலின் நாம் திரும்பிப்போவதி லொரு பிரயோசனமு மின்றும் அங்ஙனந் திரும்பிப்போ காத நாம் அரியதவத்தைச் செய்துமோ அல்லது விடந் தின்று இறத்துமோ அல்லது பின்யாது செய்துமெனக் கவல்கின்றேம் என்றனர் அங்கதன் மிக்க வருத்தத்துடன் நீங்கள் சென்றின்று பிராட்டியைக்கண்டிலமென்று கூறுங் கள் யானிவ்விடத்திலேயே என்னுயிரினை விடுகின்றேன் என்று உறுதி கூறியதனைக் கேட்ட சாம்பன் நீஙக

ளிளவரசனின்றி எனக்குப்பின் வானரராச்சிய மாளத்தக்கார் எவருமிலர் ஆதலின் மரணமடையுஞ்செயலை நீ கைக்கொள்வதை விட்டு கிட்கிந்தைசென்று சுக்ரீவ மகாராசனிடம் எங்கள் வந்தனத்துடன் எங்கள் செயலையும் உரைக்கும் வண்ணம் உனக்கு வந்தனம் செய்கின்றோம் என்றவுடன் ஆஞ்சனேயா அவர்களைப்பார்த்து என்னை நீர் இவ்வண்ணம் வேண்டாதன கூறிக் காலம் போக்குகின்றீர்கள் நாம் பிராட்டியைப் பிலத்திலேனும் வானத்திலேனும் பொன்வரைக்குடுமியிற்புறததிலண்டத்தில் நன்னுதற்றேவியைக்காண்டு நாமெனில் நீங்கள் கூறிய நாளவதி கடந்து வந்தனிர் அதனுற்றண்டனைக்குரியீரென்று நமதரசனுரையான் ஆதலின் நாம் எங்கும் பிராட்டியைத்தேடி இராவணனோடு சடாயுவைப்போல போர் புரிந்திறத்தலே தகுதி மற்றையாலோசனை முறையன்றும் என்றனர்.

இங்ஙனம் இவர் சடாயுவை யொப்பரென்றுரைத்தவுடன் ஒருபெரிய இறகுதிர்ந்தபறவை மலைநகர்வதெனநடந்தருகி லெய்தி நீவிர்யாவரென்றுகேட்டவுடன் அதனை அசுரனான ராவணனுடைய வஞ்சனையெனக்கருதி ஆஞ்சனேயர் நின்வரலாற்றினை உரைத்த பின்னர் எங்கள் வரலாற்றினை யுரைக்கின்றோம் என்றவுடன் அப்பறவை என் பெயர் சம்பாதி என்னிளையவன் பெயர்சடாயு நீங்கள் என் தம்பி பெயரை இவ்விடத்துக் கூறியதனைக் கேட்டு அவன் செயலை அறிய விரும்பி உங்களிடம் வந்தேன் வெகு

காலமாகக் காணப்படாமல் வருந்திக்கிடக்கிற எனக்கோ
ராறுதல் தருவீர் என்றது. அதைக்கேட்ட ஆஞ்சனேயர்
கண்ணீ ரொழுகுதலுடன் சடாயுவை விசாரித்ததின்
அசுரமாயையாயிராது என்று நிர்மாணித்து ஓபறவையே!
சடாயுவென்னுங் கழுகரசன் தசரதராமன் பத்தினியாம
ஜானகிதேவியை ராவணன் அபகரித்துச் செல்லுங்காலத்
தில் அவனோடு போர்புரிந்து இறந்தனன் அவனுக்குச்
செய்யவேண்டிய நீக்கடனை எங்கள் ராமபிரானே செய்து
சுவர்க்கமளித்தனர். நாங்கள் வானராதிபரான சுக்ரீவ
மகாராஜனின் ஆட்கள்; சீதாபிராட்டியைத்தேடி இங்கு
வந்ததாம் நீ பிராட்டியின் சங்கதி யேதாயினும் அறிதி
யோ ? அறிதியாயினுரைத்தி நின்னிறகுகள் இவ்வண்ணம
ஆவானேன் என்றவுடன், சம்பாதி [illegible]
யோனை சடாயுவும் நானுஞ் சூரியசாரதியான அருணன
மைந்தர்கள் ஒருதினம் மேலுலகம் காணவேண்டுமென்னும்
விருப்பமுடையவர்களாய் இருவரும் பறந்து சென்றோம்.
செல்லுங்கால் சூரியவெப்பத்தால்தனிவருந்திய இளையோன்
என்னைக்காத்தியென்றனன் யானிறகாலவற்கு நிழலளித்
துச் சென்றேன் அதனாலென்னிறகு கருகியது இருவரும்
கவன்று கீழ்விழுந்தனம் என்றம்பிவிழுந்த இடமும் இது
காறும் அவனுயிர்த் திருந்ததனையும் இராவணனால் இறந்த
தனையுமின்று நீவிருரைக்க வறிந்தேன். என்னிறகுக
முளைக்கும் வண்ணம் நீவிரனைவருமாக ராமராமா வென்று
ரக்கக் கூவுங்கள் ராமகாரியமாகவரும் வானர வீரர் கூறும்

ராமநாமத்தொனி கேட்டவுடனுனக்குப்பண்டைய இறகு
கள் முளைக்குமென ஒரு மஹாஞானவர்கூறி யிருக்கின்றார்
அதன் பரீட்சையுங்காண்பீர்கள் என்றவுடன் அனைவரும்
ராம நாமங் கூறினார்கள் கூறுதலும் சம்பாதிக்கிறகுகள்
முன்னிற்போல வளர்ந்துநின்றன அதனைக்கண்ட மாருதி
யாதியர் ஆச்சரியமடைந்தார்கள்.

பின்னர்ச்சம்பாதி வானரர்களைப்பார்த்து உங்களுக்கு
வந்தனஞ்செய்கின்றேன், பிராட்டியாரை இராவணனெடுத்
துச் சென்றதை நானுங்கண்டேன்; இக்கடலுக்கு நூறு
யோசனை அப்புறத்திலுள்ள லங்காநகரத்தில் அசோக
வனத்திற் சிம்சுபாவிருக்ஷ நிழலில் அநேக அசுரர்களின்
காவலிற்பிராட்டியைச் சிறைப்படுத்தியிருக்கின்றான். உங்க
ளில் எவரேனு மொருவர் அங்குச்சென்று பிராட்டியைத்
தரிசித்து வாருங்கள். என்று கூறிப் பறந்துபோதலும்
வானரவீரர்கள் இக்கழுகரசன் பொய் சொல்பவனல்லன்
பொய்ச்சொல்லுபவனுக்குத் தாரகமந்திரமானது பலிக்கு
மா? ராமராம வென்ற தொனியானதவனுக் கிறகுகளைக்
கொடுத்ததனை நாம் நேராகக்கண்டோமாதலின் இவன்
சத்தியசந்தனே. இவன் மொழியை நம்பி இலங்கைக்குச்
சென்றாற் பிராட்டியைக் காணலாம் நூறுயோசனை அக
லந்தாண்டத் தக்கவர்கள் யாவர் என்றாலோசித்து சாம்ப
வனைப்பார்த்தார்கள் அவன் என்னால் ஆகாது என்றனன்,
அதாவதுமாவலியான் மூவடிமண்கேட்டமாயவன் ஓரடி[illegible]

"வேதமனைத்துந்தோ்தர வொட்டாவொருமெய்யான்
பூதலமுற்று மீரடிவைத்துப் பொலிபோழ்தியான்
மாதிரமெட்டுஞ் சூழ்பறைவைத்தேவரமேரு
மோதவிளைத்தே தாளுலைவுற்றேன் விறன்மொய்ம்பீர்,"

இவ்வுலகளந்த ஞான்று அங்குமிங்குமோடிக் காலொடுத்தவ னுகவிருக்கிறேன் ஆதலினென்னாலாகாது ; நூறுயோசனை அகலந்தாண்டுவதற்கு அங்கதனைவிணுவிரென்ன அன் னார் இளவரசேசென்று வருதியோவென அன்னையயானிக் கடலைந்தாண்டுவேன். மீண்டுவர என்னாலாகாது, என்ற வுடன் சாம்பவன் மாருதியைப்பார்த்து சுந்தரரே! ஒப் பற்ற நீரே இக்காரியத்தைச் செய்யவல்லவர் அதனை யுணர்ந்தன்றோ பெருமாளும் உம்மையே தென்றிசை நோக்கிச்செல்கவென்றதும் உம்மிடமே கணையாழியளித் ததும் அன்றியும் அண்ணலே ?

நீரோ? "மேலை விரிஞ்சன்வீயினும் வீயாமிகை நாளீர்" அதுவன்றியும், சூரியபகவானிடத்தில், "நூலை நயந்து நுண்ணி" துணர்ந்தீர், "உணர்ந்தமட்டோடு நில்லா மல் கேட்கத்தக்க அதிகாரிகட்கு" நுவறக்கீர், அதுமட் டோ நீவிர் "காலனு மஞ்சுங்காய்சினமொய்ம்பீர்" அது மட்டோ எதிர்ப்பவர்களை விஷபானஞ்செய்த ருத்திரனைப் போல எளிதிற் கொல்லுந்திறமுடையீர் அதுமட்டோ "வெப்புறு செந்தீநீர் வளியாலும் விளியாதீா்" இங்ஙனம், சுடுந்தீ காற்று நீர் முதலிய வைகளா லழியாதாராயிருப்ப

துடன் "செப்புறு தெய்வப் பல்படையாலுஞ்சிதையாதீர்" தேவர்களின் பலவகையான அஸ்திரங்களாலழியா திருப்ப துடன் ஒப்புரைத்தற்கு வேறொருவருமில்லாதவராக விளங்குகின்றீர் "ஒப்புறிறொபார்நம் மலதில்லீரே, நீர் இக்கடலின் நூறுயோசனை யகலத்தைத்தாண்டிச் செல்லுதலன்றியும் வேண்டுமானால் அண்டத்தப்புறனையுங்குதி கொள்வீர்" அதுமட்டோ?

கல்லவுமொன்றோ தீயவுகாடிநவைதீரச்
சொல்லவும் வல்லீர் காரிய நீரே துணிவுற்றீர்
வெல்லவும் வல்லீர் மீளவும் வல்லீர் மிடலுண்டேற்
கொல்லவும் வல்லீர் தோள்வலி யென்றுங் குறையாதீர்.

அது மட்டோ நீர் உருவங்கொள்ள வேண்டுமென்று கருதிக் கொண்டால் மகமேருவை விடவும் பெரியவுருவினைக்கொண்டு நிற்பீர் சிறியவுருவங் கொள்ளக்கருதினால் மிகவுஞ்சிறிய வுருவினையுங் கொள்ளுவீர் அது மட்டோ வேண்டுமானால் இந்த உலகினையும் பெயர்த்தெடுப்பீர்.

நம்மீது சீறிய இந்திரனெறிந்த வச்சிரப்படையால் நமது தேகத்திலுள்ள ஒரு சிறியமயிரினையும் இழந்திலீர் மந்திராலோசனையிலுஞ் சிறந்து விளங்குகின்றீர்.

அதுமட்டோ "நீதியினின்றீர் வாய்மையமைந்தீர் நினைவாலும், மாதர்நலம் பேணுதுவளர்ந்தீர்" அதுமட்டோ "மறையெல்லா மோதியுணர்ந்தீர்" அதுமட்டோ "ஊழி

கடந்தீர்" அதுமட்டோ "உலகினும் ஆதியயன்முனையென
யாது மறைகின்றீர்" அதுமட்டோ "அண்ணலான அவ்வி
ராமபிரானிடத்திலேயே மிக்க அன்புடையீர் ஆதலால்
பிராட்டியை தேடிக்காண வேண்டுங் கடமை உம்மதே
யென்று கொண்டுள்ளீர் ஆதலினால் நீவிரேயிதனைச்செய்து
முடிக்க வல்லுநர். புண்ணியமொன்றன்றி மற்றெவையும்
நிலையாதென்னு நினைவினை மறவாதவரல்லீர். இங்கு நின்றும்
இலங்கைக்குச் சென்றால் ஒருவேளை போர் நேரிடுமாயின்
யானைக்கூட்டத்தின் நடுவட்புகுந்த சிங்கவேற்றைப்போல
போர்புரியவும்வல்லீர். எண்ணிய கருமத்தை முடித்துத்
திரும்புவதேயன்றி இடையூறு வந்ததென்று திரும்பத்தக்க
வரல்லீர். ஆதலின் ஆஞ்சநேயரே நீரே இலங்கைக்குச்
செல்லத்தக்கவர் சென்று பிராட்டி யிருப்பிடத்தையுணர்
ந்து வந்து எங்களை வருப்பினையு நிலைநிறுத்துவீராக என்று
சாம்பவன் கூறியது கேட்ட ஆஞ்சநேயர் மிகுந்த சந்
தோஷ முடையவராய் அவ்வானர வீரர்களைப்பார்த்து
வீரர்களே? உங்கள் கொள்கை யவ்வாறானால் யானே இலங்
கைக்குச்சென்று வருகின்றேன் உங்களுக்குச்சம்மதமானால்
இலங்கையை பெயர்த்துக்கொண்டு வருகின்றேன். அல்லது
அதிலுள்ளவர்களை யெல்லாம் கொன்று பிராட்டியைத்
தோளிலேந்தி வருகின்றேன். உங்கள் சம்மதமெதுவோ
வதனைச்செய்யச் சித்தமாயிருக்கின்றேன்.

இந்நூறுயோசனை யளவான இக்கடலையன்றிக் கட
லனைத்தையுந் தாண்ட வேண்டுமாயின் நீங்கள் ஒவ்வொரு

வருந்தாண்டியே வருவீர்கள். எதினும் பற்றுதவென்னை
யிதுசெய்யென்று நீங்களுரைத்தது நான் செய்த பாக்கி
யத்தாலேயே யாம். உங்கள் தயவும் எம்பிரானருளும்
எனக்கிரண்டிறகுகளாகக்கொண்டிறகாலத்துக் கடலோங்
கியிருகினும் வைனதேயனை யொப்ப யானிக்கடலைக்கடந்
திலங்கை சேருவேன் யான் சென்றுவருங்காறும் நீங்களிவ்
விடத்திலேயே யிருங்கள் என்று, திரிவிக்கிரமனது திரு
வடியைப்போல நீண்ட பெருருவந்தாங்கித் திருவடியென்
னுந் தன்மையை விளக்கினராய்க் கடலருகிலுள்ள முன்னு
ரைத்த மகேந்திரமலையி னுச்சியிலேறிச் சென்றனர்.

சென்றவர் நீண்டவுருவுடன் நின்று சுவர்க்கவுலகத்
தினைப் பார்த்து இதுதானோ? கடல் நடுவிலுள்ள
விலங்கையென நினைத்துப்பின்னர் எவராலும் விரும்பத்
தகுந்தவர்க்கமென்று அறிந்து அங்குப்பிராட்டி யில்லை
யென்றுமனதிற்கருதினராய்த் தென்றிசையில், பழயவிலங்
கையாகிய, இராவண நகரமிருத்தலைக்கண்டு கைகொட்டி
யாரவாரஞ் செய்து கடலைக் கடத்தற்காகத் திருவடிகளை
யூன்றியழுத்தினர். அழுத்துதலும் அம்மகேந்திர மலையா
னது பூமியிலழுந்தியது அழுந்தியதனா லதனடிப்புறத்தி
னின்றும் ஆஞ்சனேய நதியென வொருநதிதோன்றி ஓடி
யின்றும் அறிகுறியாகச் செல்லுகின்றது. அதுமட்டோ
அம்மலை முழைகளிற்கிடந்த விடப்பாற்களோடுங்கூடிய பாம்
புகளெல்லாம் அம்மலையின் குடர்கள் சரிந்தாற்போல
நகர்ந்து வெளியே சென்றன.

அதுமட்டோ குகைகளிற்கிடந்த சிங்கங்கள் நசுங்கி இறந்தன. ஊழிக்காலத்துக்கடலொலியு நாணப் பேராரவா ரத்துடன் அம்மலையிற்றங்கிய பறவைகளெல்லாம் வானத் திற்பறந்து சென்றன. யானைகள் காதுகளை யசைத்து வாலைத்தூக்கி வீறிட்டுச் சுழன்றன. பெரும்புலிகளனைத் தும் தங்குட்டிகளை வாயிற்கவ்விஎபடியோடின. அம்மலை யிற்றங்கின வித்தியாதரரெல்லாம் வாளும்பரிசையுமேந்தி வானில் விரைந்து சென்றனர். தவஞ்செய்பவரான முனிவ ரெல்லாஞ் சரீரத்துடன் சுவர்க்கமெய்து வான்சென்றுங்கு மேலழுந்து சென்றனர். அம்மலையி லன்றுவந்து விளையாடி யிருந்த தேவமாதர்கள் மலைசுழன் றழுந்துவதனாற் பயந்து பண்டு இராவணனெடுத்த கைலையிலிருந்த சிவபிரானை ஆலிங்கனஞ்செய்த பார்வதிதேவியைப்போல அணைத்துக் கொண்டு வானிற்சென்றனர்.

இங்ஙனமனேகமான அற்புதங்கள் விளையவிரல்களை யூன்றி நின்ற சிறியதிருவடி நின்ற நிலையைக்கண்ட தேவ ராதியர் புஷ்பவருஷ முதலியவைகளாலே யவரைச் சந்தோ ஷப்படுத்தி ஞானரூபரே! நீரெண்ணிச் செல்லுங்காரியம் தடையின்றி நிறைவேறுமென்று கூறினார்கள் வானரவீரர் களும்.

குறுமுனிகுடித்தவேலை குப்புறங்கொள்கைத்தாதல்
வெறுவிது விசயம்வைகும் விலங்கற்றே ளலங்கல்வீர
சிறுவிதென் றிகழற்பாலையதலை நீசேறியென்ற [பான்.
உறுவலித்துணைவர்சொன் றொருப்பட்டான்பொருப்பையொப்

என்றபடி கூறி விரைந்துசெல்லுக வென்றவுடன், இந்நெடிய தோற்றத்தைச்சிறிது குறுக்கிச் செல்லுதுமென்று நினைத்துப் பின்னுமலையை யழுத்தினருடனே தமது முழந்தாளளவு மலையுடன் பூமியினுட் புதைந்தது. உடனே இருகரங்களையும் விரித்துக் கழுத்தைச்சுருக்கி கால்களை மடக்கித் தோள்களைச் சுருக்கி மூச்சடக்கி யெழுந்து இலங்கையை யடைவான் ஆகாயவழியே செல்ல நிமிர்ந்தனர். அப்பொழுதவர் சிரமானது சத்தியலோகமளவு நீண்டு காணப்பட்டது.

**வால்விசைத்தெழுந்து வன்றாண்மடக்கிமார் பொடுக்கிமானத்**
**தோள்விசைத்துணைகள் பொங்கக் கழுத்தினைச் சுருக்கித்தூண்டும்**
**கால்விசைத்தடக்கை நீட்டிக்கட்புலங்கதுவாவண்ணம்**
**மேல்விசைத்தெழுந்தாருச்சிவிரிஞ் சனுடிரிஞ்சவீரன்.**

என்றபடி செல்லுமிவர் மிக்ககிளைகளையுடைய மரங்களும் யானையாதிய விலங்குகளும் சுவாமிகாரியமாகச் செல்லுமிவருக்குத் துணையாகச் செல்லுவோமெனச் சென்று இலங்கையளவுஞ் செலவாற்றலின்றி இடையில் விழுந்தாங்கு அம்மலையினின்றுஞ்சிதறி மேலெழுந்து கீழ்விழவும்; மரங் கொடி செடி மண் கல் முதலியன விழுந்து பின்கட்டு மணைக்கு அனுகூலமாகவும் ! கடனீரானதுவிலகி அரவினுல கினைக்காட்டவும் பண்டமுத மபகரித்துச் சென்ற பெரிய திருவடி மீட்டுமெய்தினனோ? வெனப்பயந்தோடவும் அலைநீரானது இலங்கைக்குட் சென்று விழவும் மேலெழுந்து, கண்டோர் பண்டுகடலில் விழவுந்தமேரு

வின் முச்சிகரங்களோ? இலங்கையை யுத்தேசித்துச் செல்லும் புஷ்பக விமானமோ? இன்னொரு முறையும் இராவணனை நங்கிழிட்டமுக்கலா மெனச்செல்லும் வெள்ளிமலையோ? அல்லது நம்மக்களிங் குள்ளாரன்றோ வவர்களைக் காண்போமெனவந்த மேருமலையோ? அன்றேல் உலகநாசகாலத்தி லாரவாரித்தெழும் வாயுவின் செய்கையோ? அன்றேல் இராவணனழிவுகாலத்தை விளக்க வடக்கிலுதித்துத் தெற்கேசெல்லுஞ் சூரியனோ? அல்லது ஒழுக்கங்கெட்ட இராவணனைக்கொல்லச் செல்லுமாசனது சக்கராயுதமோ? அல்லது இந்த உலகமழியுங்காலத்தில் வடக்கில் உதித்துத் தெற்கிலேகும் பூரணசந்திரனோ? அல்லது பெருமாளுக்குரிய திருத்தொண்டனான கருடாழ்வானது செய்கையோ? என்றுகருதும் வண்ணம் சென்றனர்.

செல்லுங்காலவர் எதிரே வானவெளியிற் கோரமான ரூபத்தினையுடைய ஒரு மாதானவள் தோன்றி யாரடா செல்பவன், எனக்கின்று நல்லவுணவு கிட்டியது நான் மெத்த, பசியுடையவளாகவிருக்கிறேன் சீக்கிரம் என்வாய்க் குட்புகுந்து என் பசியைத்தணிப்பாயாக வென்றனள். அதுகேட்ட மாருதி யான் சுவாமி காரியார்த்தமாகப் போகின்றேன். போய்வந்த பின்னருனக்கே யுணவாகின்றேன் என்று கூறினர் அதுகேட்டவரக்கி கண்களில் நெருப்பெழ அடா? நீ சொல்வது சிறிதும் பொருத்தமாகவில்லை உன்னை வலிய வழைப்பதனாலன்றோ இவ்வாறு கூறுகின்றாய் உன்னை யெடுத்து விழுங்கி விடுகிறேனென்று குறுக்கிட்ட

னள். அதுகண்டவிவர் வல்லை யேற்றின்னுதியென அவளு
ருவினும் பெரியவுருவினைக் கொண்டவளெதிரே நின்ற
னர். அதுகண்டவவள் நானிதனினும் இரட்டியுருவங்கொள்
கின்றேனென்று தனது வாயினை பத்துயோசனை யகலத்
தாக்குத் திறந்தனள். அதுகண்டவிவர் அதனினும் பெரிய
வுருவங்கொண்டனர். அது கண்டவவள் அவ்வுருவினை
விழுங்கத்தக்கவளாயினள். அதுகண்டவிவர் விரைந்து ஒரு
அணுவுருவாயவள் வாயுட் புகுந்து வெளியெய்தி நீ கூறிய
படி நினக்குணவானேன் இனியென்னைத் *தடுத்தியாயி
னுன்னைக் கொல்லுவனென்று கூறித்திரும்பினர்.

உடனே யவ்வரக்கியானவள் ஒரு நல்ல தேவமாதினு
ருவமாகி நீர் செல்லுங்காரியம் வெற்றியுடைய தாகுக.
யானரக்கியல்லேன் சுரசை யென்னும் பெயருடைய தேவ
மாதே. உம்மைப்பரிசோதிக்கும் வண்ணந் தேவர்களாலனுப்
பப்பட்டு வந்தேன். பரீக்ஷித்துத் தேர்ந்தேன் உம்மை யெவ
ரேனும் வெல்லாரென்று சொல்லவாற்றேன் உமது பராக்
கிரமத்தை மெச்சினேனென்று கூறி மறைந்தனள்.

இதனை

கேழ்வாயொரரக்கியுருக்கொடு பெட்பினேகிக்
கோழ்வாயரியின் குலத்தாய் கொடுவ கூற்றமுட்க
வாழ்வாயெனக் காமுளைவாய் வருவாய் கொலென்று
நீள்வாய் விசும்பிற்றனை நூச்சி நெருக்கநின்றாள்.

என்பன வாதிகளா லுணர்க.

## எ - வது.

# சாயாக்கிரகணிசங்காரபராக்கிரமம்

---

எங்கியங் கிடுதியென்று விழுத்தெதிரெய்திச்செய்ய
பங்கிகொடலையசைத்துப் பற்கடித் திடியினார்த்த
சிங்கியைக் கிழித்துச்சென்ற செல்வனை யமரரேத்து
மங்கியைப் பொருவும்வீரத் தனுமனையடைந்து வாழ்வாம்.

(இ-ள்.) நீ யெங்கே போகின்றாய் என்று நிழலைப் பிடித்து எதிரேவந்து செவந்த பங்கித்தலையை அசைத்துப்பற்களைக்கடித்து இடிபோல ஆரவாரித்து எதிரேவந்த சாயாக்கிரகணி என்னும் ஸிம்ஹியைப்பிளந்துசென்ற செல்வனைத்தேவர்கள் துதிக்கின்ற அக்கினியையொத்த வீரத்தினையுடைய ஆஞ்சநேயனை அடைந்து வாழ்வோமாக.

## இதன் வரலாறு.

ஆறாவது பராக்கிரமத்திற் கூறியவண்ணம் மத்ஸரமிட்ட சுரசையைவென்று அவளாற் புகழ்ப்பெற்று ஆஞ்சனேயர் கடல்மீது தோளே துணையாகச் செல்லுங்காலத்தில் மஹாதுஷ்டையா யுள்ளவளும் எத்தகைய வன்மையுடையவர்களாயிருந்தாலும் அவர்கள் நிழலின்வழி அவர்களை யிழுத்துண்ணும் அரிய வித்தையைப் பழகியுள்ளவளும் இராவணனுடைய இலங்கையினகம்போன்ற வக்கடலிலொரு துஷ்டஜந்துவா யுள்ளவளுமான ஸிம்ஹி



சாயாக்கிரகணி சங்கார பராக்கிரமம்.

என்பவளான சாயாக்கிரஹணி யானவள் இவ்வாஞ்சனே யரது வருகையைக்கண்டு தன் சாயாக்கிரகணவல்லபத்தா லவரையிழுத்தும் வராமையால் பேயுமஞ்சுந் தனது பெரிய வுருவுடன் ஆகாயத்திலெய்தி.

"காந்தக் கடுங்குறி கணக்கிறுதி கண்ணுள்
பாந்சிலம்பிடுஞெலி வேலையொலிபம்ப
வேதக்கொழுஞ்சுடரைநாடிநெறிபேணுள்
ஓதத்தின் மேவுமது கைடவரையொத்தாள்." என்றபடி.

கடலொலியினும் பேரொலியாகக் காற்சிலம்புகளை சைகடட கொலேந்தொழிலின் நிறைந்தைக் கண்கள் காட் டாநிற்பப் பண்டுகடனீர்நடுவில் ஆலிலையிற் பள்ளிகொண்டிருந்த பரந்தாமனெதிரே யெய்தி நீ யாரடா வென்றுகேட்ட மதுகைடவருக்குச் சமானமானவளாய்.

"துண்டப்பிறைத்துணே யெனச்சுடரெயிற்றுள்
கண்டத்திடைக்கறையுடைக்கடவுள்கைம்மா
முண்டத்துரியாண் முளரிவந்தான்
அண்டத்தினுக் குறையமைத்த பிலவாயாள்." என்றபடி

துண்டு படுத்திய இளம்பிறைபோல விளங்குங் கோரைப்பற்களை யுடையவளும், கழுத்தில் விஷத்தினை வைத்துள்ள சிவனுரித்த யானையின் தோல்போன்ற போர் வையினையுடையவளும் கமலாசனனான பிரமனுண்டாக்கிய வண்டத்தினையும் உறையிலிடுவதுபோல விடத்தக்க பிலம் போன்றவாயினையுடையவளும் ஆகிவந்தாள் ' அத்தகைய

வளைக்கண்ட ஆஞ்சநேயர் இவள் அறத்தை யருளோடுந் தின்றுளான கொடியவரக்கியே யென்பதுணர்ந்தார். அப் பொழுதக்கொடியவள் இவரெதிரே தனதுபெரியவாயைத் திறந்து கைகளை விரித்து விழுங்கச்சித்தமாக இருந்தனள் இருந்தவளைப்பார்த்து.

"சாயாவரந் தழுவினுய் தழியபின்னும்
ஓயாதுவந்த விசைகண்டுணரா தில்லாய்
வாயாலளந்து செல்வோன் வழியடைத்தாய்
நீயாரோவென்னையிவணின்ற நிலையென்ருன்

ஓ சாயாக்கிரகண வரம்பெற்றவளே! யான்விரைவா கச்செல்லுதலைக்கண்டும் என்னைத்தடுத்து உண்ணக்கருதிய உனதுபிலமனைய வாயைத்திறந்து கொண்டு வான்வழியை யடைத்து நிற்கின்றவளான நீயார் நீயேன் இவ்வாறு நிற் கின்றனை என்றனர்.

அது கேட்டவவள், நீ யென்னை யொரு பெண்பா லெனக்கருதுந் தன்மையை விட்டுவிடு, என்னெதிரே வந் தாற்றேவராயினும் என்னுல் விழுங்கப்பட் டிறந்துபடுவர்; அனைத்துயிர்களையும் கொலைபுரியும் யமனென்னெதிரே வருவானுயின் அவனுயிரையுண்டு பசியாறுவேனென்று.

" பெண்பாலெனக்கருது பெற்றியொழியுற்றால்
விண்பாலவர்க்கு முயர்வீடு றுதறிண்ணம்
கண்பாலடுத்தவுயிர் காலன்வருமேனும்
உண்பானருத்தியப்தொழிபெரியதென்ருள். என்றுகூறி

இதோ உன்னையுந்தின்று என்பசியிற் சிறிதாறுகின்றேன் என வாயைத் திறந்தனள் அண்ணலும் தரும முதலிய வெகுறுமோ வென்று சலிக்க அவளதகன்ற வாயுட் புகுந்து அவள் வயிற்றைக் கிழித்துக் குடர்மாலையுடன்,

"திறந்தாளெயிற்றையவ ளண்ணலிடைசென்றான்.
அறந்தானரற்றிய தயர்த்தமரரெய்த்தார்
இறந்தானெனக்கொ டொரிமைப்பதனின்முன்னம்
பிறந்தானெனப்பெரிய கோளரிபெயர்ந்தான்"

என்றபடி வெளிப்பட்டுத் தேவர்களிப்பு மிக்காரவாரித்துப் புஷ்பவருஷம் பெய்யவும் அசுரர் அஞ்சி வெயர்வையடையவும் முனிவர்கள் ஆசிகூறவும்.

"ஆர்த்தனர்கள் வானவர் கடானவர் நடுங்கா
வேர்த்தனர் விரிஞ்சனும் வியந்து மலர்வெள்ளம்
தூர்த்தனரரன் கைலையிற் றொலைவி லோனும்
பார்த்தனன் முனித்தலைவ ராசிகள் பகர்ந்தார்." என்றபடி

பிரம ருத்திரர்கள் கண்டு மகிழவும் பெவறுயுடன வெளிப்பட்டுச் சென்றனர்.



மாருதி விஜயமென்னும்

அ-வது.

# லங்கா ராட்சஸீத் தொம்ஸ பராக்கிரமம்.

விலங்கலை யனையதோளில் வியனெடுஞ் சூலமேந்தி
விலங்கலையெடுத்தவண்ணல் வியன்பதியகத்திராவில்
விலங்கலின் றிவந்த வெறியன்யா ரென்றுட்கோறும்
விலங்கலை யனுமன் றன்னை வியந்தடி பரவிவாழ்வாம்.

(இ-ள்.) மலையனையதோளில் மிகப்பெரிய சூலமேந்திய சிவனது மலையான கைலாயத்தை யெடுத்த பெருமையிற்சிறந்த எங்கள் ராவணமகாராசனது லங்காநகரத்துட் செல்லுதல் தகுதியன்றெனச் செல்லாமல் இரவில் (திருடனைப்போல) வந்த வெறியனே நீ யாவனென்றன லங்காநகர தேவதையான இலங்கணி என்பவளை ஓரே குத்திற் கொன்ற நீங்காத பராக்கிரமத்தினை யுடைய ஆஞ்சனேயரது புகழைக்கூறி அவரதடிமலர்களை வணங்கி வாழ்வோமாக-எ-று.

## இதன் வரலாறு.

ஆஞ்சனேயர், ஏழாவது பராக்கிரமத்தி னுரைத்த வண்ணம் கருங்கடலைக்கடந்து இலங்கையையடைந்து பகலிற்சென்றால் விண்ணுலகம் விளையும் பிராட்டியி னிருப்பிடத்தைக் காணமுடியா தெனக்கருதி ஒரு மறைவிடத்தி

துயர்ந்த இடத்திலிருந்து லங்கையினழகு முதலியவை
களைக் கவனித்துச் சூரியனஸ்தமித்திரவு தோன்றியவுடன்
ஒரு சிறிய வுருவுடனே அனேகமாயிரம் அசுரர்களா
காக்கப்படுகின்ற லங்கையின் கோட்டை வாசலின் மதி
லேறிக்குதித் துள்ளேசென்றனர் அங்ஙனஞ் செல்பவரை.

எட்டுத் தோளினையும் நான்கு முகத்தினையு முடைய
வளும் மிக்க வொளிபொருந்திய மலையனைய வுருவினளும்
சுழலுங் கண்களை யுடையவளும் எதிர்த்துவந்தால் மூவு
கத்தையும் எதிர்க்கு மாற்றலுடையவளும் பொறுமையற்ற
வளும் வேலும், வாளுஞ், சூலமும், தண்டமும், பாசமும்,
சங்கமும், கோலுங், குந்தமும், ஏந்திய கைகளை யுடையவ
ளும் பொன்னுடை யுடுத்தவளும் நாகங்களஞ்சுமாறு பூமி
யதிரநடப்பவளும் தயவற்றவளும் பஞ்சவன்னமான மே
லாடை யுடையவளும் கடலிற்பிறந்த நல்ல நிறமமைந்த
முத்துமாலை யணிந்தவளும் சந்தனக் குழம்பணிந்தவளும்
கடூரமான வொலியினையுடைய சொல்லினை யுடையவளும் மந்
தார மாலை யணிந்த மகுடத்தினை யுடையவளும் ஆகிய
இலங்கணி யென்பவள் இவர் செல்வதைக்கண்டு விரைந்து
சென்று தடுத்து நில் என்று கூறி நின்றனள்.

அவளைக்கண்ட திருவடியும் வருகவருகவென்று எதி
ரேகின்றனருடனே யவளவரைப் பார்த்து புகைதுன்றிய
கண்களுடன்.

"ஆக்ஞசெய்தா யஞ்சலைபோலு மறிவில்லாய்
சாகாமூலந் தின்றுழல்வார் பாற்சலமென்றும்
பாகாரிஞ்சிப் பொன்மதிருவிப் பதையாதே
போகாயென்றாள் பொங்கனலென்னப் புகைகண்ணாள்."

என்றபடி, அடா, தகாதவேலை செய்தனை நினக்கறி விருக்குமோ இலைகளையும் வேர்களையுந் தின்னுஞ் சாதியா னவுனக்கு ரோஷமேது, இந்தநல்ல மதிலைத்தாண்டி, வந்தவழியே போய்விடு, என்றாள் அதுகேட்ட ஆஞ்சநேயர்.

"களியாவுள்ளத் தண்ணன் மனத்திற் கதமூழ்க
விளியா நின்றே நீதிநிலத்தின் வினையோர்வான்
அளியா விவ்வூர்காணு நலத்தினிலை நின்றேன்
எளியே னூற்றல்யாவ துனக்கிங் கிழவென்றான்." என்றபடி

உள்ளே சீற்றத்துடன் மாதே! யானிந்தவூரின் நீதி முறைகளை யறிந்து செல்லவந்தேன் யானுள்ளே செல்வதனாலுனக்கென்ன கெட்டுப்போகின்றது என்றனர் அது கேட்ட வவ்விலங்கணி யாவனடா நீ யானுன்னைப் போவென்று சொன்னவுடன் போகாமல் எதிர்த்துப் பேசுகின்றனை திரிபுரதகனனு மிந்நகருளெய்த வஞ்சுவானானால் ஆசைப்பட்ட நீயெவ்வாறு செல்லுவாயென்று கூறிச்சிரித்தனள்.

இவள் சிரித்ததனைக் கண்ட ஆஞ்சநேயர் பற்காட்டிச்சிரியாது அவமதிச் சிரிப்பாகத் தம்முட் சிரித்தலைக் கண்டு, இலங்கணி என்னை யவமதித்துச் சிரித்தனை நீயா

வன் எவனாலனுப்பப்பட்டு வந்தனை நீயிறந்தன்றி யில்லூர் விட்டுப் போகாய்போலும் என்றனள் அதுகேட்ட வீவர் இவ்வாறு நீ கூறியதனை லிவ்வூருட் புகுந்தன்றி யான்போ கேன் என்றனர். இவர் கூறிய விம்மொழியைக் கேட்ட விலங்கணி.

"வஞ்சங் கொண்டான் வானரமல்லன் வருகாலன்
தஞ்சங் கண்டாலென்னை யிவன்சூழ் திரையாழி
நஞ்சங்கொண்ட கண்ணுதலே போனகுகின்றான்."
நெஞ்சங் கண்டே கல்லெனநின்றே நினைவுற்றாள். என்றபடி.

ஆஞ்சனேயரது மனோபாவத்தைக்கண்டு சிலைபோல நின்று இவ்வாறு நினைத்தனள் இவன் வானரனல்லன் வஞ் சங்கொண்டவனா யிருக்கின்றான். இந்நகருளெமன் வந் தாலுமென்னைக் கண்டஞ்சுவானிவனஞ்சாது விஷதரனை சிவனைப்போல புன்முறுவல் கொள்கின்றான். ஆதலினிவ னைச் சும்மாவிட்டுப் போகப்படாதுபோனால் இவ்வூருக்கிவ னாற்றீங்கு நிச்சயமாக வுண்டாகும் என்றுகருதி வானரா! நீயே வெல்வாயென்று கண்களில் தீப்பொறி பறக்கத்தன் கையிலிருந்த அக்கினிச் சுவாலையினையுடைய சூலத்தினை அவர்மீது விடுத்தனள் மின்னல்போல வவளெறிந்த சூல மானது இவரெதிரே வருதலு மதனைப் பிடித்திரண்டாக ஒடித்தெறிந்து அவள் கையிலிருந்த மற்றையாயுதங்களை யும்பிடுங்கி ஆகாயத்தில் வீசியெறிந்தனர் தன்னாயுதங்களை யிழந்தவவள் மலைகளை யெடுத்துக் கழங்காகவாடுந் தனது கையினாலோங்கி, யோரடி யடித்தனள். அடித்தவுடனே

ஆஞ்சனேயர் அவளைப் பெண்ணெனக்கருதி வேறுவிதத்தி லொன்றும் புரியாமல்,

"அடியா முன்னமங்கை யனைத்து மொருகையால்
பிடியாவென்னே பெண்ணிவள் கொல்லிற் பிழையென்று,
ஒடியா நெஞ்சத்தோ ரடிகொண்டா னுயிரோடும்
இடியேறுண்ட நாகமெனப் பாரிடை வீழ்ந்தாள்" என்றபடி.

அவளதெட்டுக் கைகளையுந் தமது ஒரு கரத்தினால் பிடித்துகொண்டு மற்றொரு கையினால் அவண் மார்பிலோ ரறை யறைந்தனர் அவ்வறைபட்டு இடியேறுண்ட பாம் பினையொப்ப மயங்கிப் பூமியிலுயிருடன் விழுந்து பின்ன ரெழுந்து ஐயனே குரங்கின்கையால் யானடிபட்டுச்சாமன் றிந்நகருக் கழிவெனப் பிரமதேவன் முன்னு ளென்னிட முரைத்த வண்ணமாயது என்று தேவமாதி னுருவெய்தி ஆஞ்சனேயரை வாழ்த்திப் பிரமனுலக மெய்தினள் பெரு கிய பானுக்குச் சிறுபிறையென இலங்கணியை வதைத் துத் தாம்வந்த காரியார்த்த மாஞ்சனேயர் சென்றனர்.

---

௯ - வது.

# மஹாத்ரூப பராக்கிரமம்.

மருக்காட்டு மலர்மென்கூந்தன் மாதேவி மருண்டுநீரின்
னுருக்காட்டு வாயென்றேத வும்பர்நாட் டவர்கள்காணு
வெருக்காட்டு முள்ளங்கொள்ள வேதியன் படைப்பிற்சாரா
வுருக்காட்டுமெனுமப்பேர்சொ ளொருவனையுளத்துள்வைப்பாம்.

(இ-ள்.) மணம்வீசும் மலரணிந்த கூந்தலினை யுடைய சீதாபிராட்டியார் நின்மொழியையான் நம்புதற்குக்கடலைக் கடந்த நினதுருவினையான் காணக்காட்டென்று திருவாய் மலர்ந்தருள அதனைக்கேட்டுத் தேவருங்கண்டு அஞ்சத் தக்கதாயும் பிரமசிருட்டியி லமையாததாயுமுள்ள தமது பெரியவுருவினைப் பிராட்டி காணுமாறு காட்டிய ஆஞ்ச னேயரை யுளத்துள் வைத்துத் தியானிப்போமாக எ-று.

## வரலாறு.

எட்டாவது பராக்கிரமத்திற் கூறியவண்ணம் இலங் கணியை வதைத் தூர்முழுதுந் தேடி யசோக வனத்திற் பிராட்டியைக்கண்டு அடிபணிந்து பெருமாள் பிராட்டியை யின்றி வருந்துந்திறமும் அவதாரமுதல் ராவணனெடுத்து வந்த நாளளவுமுள்ள ரகசியங்களையு முரைத்துங் கணை யாழியை யளித்தனர் அளித்தவுடன் இவனுண்மையாக நம்பெருமானு லேவப்பட்ட தூதனென்பது மெய்யே அசுரமாயையென யாங்கருதியது தவறே ஆயினும் ஒன்று

இச்சிறிய வுருவத்தினை யுடைய விவன் நூறுயோசனை அகலமான கடலினை யெவ்வாறு கடந்து வந்திருப்பான் இவன் வைநதேயனல்லனே இவனுக்கிற கில்லையே நமதடியையும்பணிந்து நிற்கின்றான் இவனையேகேட்போம் என்று திருவுளத்தில் நினைத்து! மாருதி நீகூறியவனைத்து முண்மையேயானாலும் இந்த வுருவினையுடைய நீகடலை யெவ்வாறு கடந்தாயென்பதே யெனக்குள்ள பெரிய சந்தேகமச்சந்தேகந்தீரும்வண்ணம் நீகடல்கடந்த போது கொண்டரூபம் மற்றொன்றானால் அதனையான் காணவிரும்புகின்றேனென்றருளிச்செய்தலும் அம்மொழியைக் கேட்ட ஆஞ்சனேயர் அன்னையே என்னைக் குறித்துத் தாங்கள் சந்தேகப்பட வேண்டாம் யான்கூறிய வனைத்தும் உண்மையே இதோ என்னுருவினையுங் காட்டுகின்றேன் என்று.

"சுட்டின னின்றனன் றொழுத கையினன்
விட்டுயர் தோளினன் விசும்பின் மேக்குயர்
எட்டரு நெடுமுக டெய்தி நீளுமேல்
முட்டுமென் றுருவொடு வளர்ந்த மூர்த்தியான்"

"செவ்வழிப் பெருமையென் றுரைக்குஞ் செம்மைதான்
வெவ்வழிப் பூதமோ ரைந்தின் மேலதோ
அவ்வழித் தன்றெனி னனுமன் பாலதோ
எவ்வழித் தாகுமென் றெண்ணு மீட்டதே"

"ஒத்துயர் கனகவான் கிரியி னோங்கிய
மெய்த்துறு மரந்தொறு மின்மினிக் குலம்
மொய்த்தன வாமென முன்னும் பின்னரும்
தொத்திய தாரகை மயிரின் சுற்றெலாம்."

"கண்டல மறிவொடு கடந்த காட்சியான்
விண்டல மிருபுடை விளங்கு மெய்ம்மையக்
குண்டல மிரண்டுயக் கோளின் மாச்சுடர்
மண்டல மிரண்டொடு மாறு கொண்டவே"

"எண்ணில தொருகுரங் கீதன் றெண்ணலா
வாணியை யனுமனை யமைய நோக்குவான்
சேணுயர் பெருமையோர் திறத்த தன்றெனு
நாணுறு முலகெலா மளந்தநாயகன்"

"எண்டிசை மருங்கினு முலகம் யாவையும்
தண்டலி லுயிரெலாந் தன்னை நோக்கிலின்
அண்டமென் றதினுறை யமரர் யாரையுங்
கண்டனன் றானுந்தன் கயலக் கண்களால்"

"எழுந்துயர் நெடுந்தகை யிரண்டு பாதமும்
அழுந்துற வழுத்தலி னிலங்கை யாழ்கடல்
விழுந்தது நிலமிசை விரிந்த தெண்டிரை
தழைந்தன புரண்டன மீனந் தாமெலாம்"

"வஞ்சியம் மருங்குலம் மறுவில் கற்பினள்
கஞ்சமும் புரைவன கழலுங் கண்டிலாள்
துஞ்சினர ரக்கரென் றுவக்குஞ் சூழ்ச்சியாள்
அஞ்சினே னிவ்வுருவ டங்குவா யென்றாள்." என்றபடி.

பிராட்டிக்குத்தமது பேருருவத்தைக் காட்டக்கருதி வணங்கியகையுடன் அகன்றதோள்களையும் அண்டமுகட்டின் முட்டாமல் வளர்ந்த திருமேனியையும் ஐம்பெரும் பூதங்களினு மகன்றுயர்ந்த வுருவினையும் மேருவிலுள்ள மரங்களில் மின்மினிக்குலந் தொத்திக் கிடந்தாற்போல

நட்சத்திரங்களாற் சூழப்பட்ட ரோமங்களையும் உலக விளக்கான சந்திரசூரியர்களின் இரண்டுமண்டலங்களையும் மாறுபடுத்துகின்ற "குண்டலங்களையும் உலகளந்த பெருமாளும் வெட்கத்தக்க பெரியதன்மையையும் உடைய உருவமாக நிமிர்ந்துநின்றா தமது கண்களாலனைத் துலகங்களையும் கண்டனர் இவர்காலடிகள் புதைந்து கடனீரானது மேற்பொங்கி மீனனைத்தையுங்கரையிலாக்கின இத்தகைய பேருருவினை வஞ்சியங்கொடியிடைப் பிராட்டியார் தமது கண்களாற் பார்த்தார்கள் பார்த்தவர்கள் ஆஞ்சனேயரது காலினடிப்புறங்கூட நன்கு கண்டிலர் அவ்வளவு பெரிய தோற்றமாக நின்றனர் பின்னர் பிராட்டியார் திருவுளத்தினியரக்கர்கள் மாண்டார்கள் இனி நந்துயரமொழிந்தது எனநினைத்து எனக்குப்பயமாக விருக்கின்றதாதலி னிவ்வுருவினை அடக்கி முன்னுருவாதியென்றருளிச்செய்தனர் பேருருவங்காட்டுதலாலும் பராக்கிரமரான திருவடி, தமது முன்னுருவாக அடங்கிநின்றனர் பிராட்டியுமஞ்சுந்திறத்த வுருவங்கொண்டமையானு மத்தகைய வுருவினைக் கண்டாரெல்லா மஞ்சுவராதலானும் பிறரை யாக்கிரமித்த வுருவமாதலானும் இஃதுருக்காட்டு பராக்கிரமமாயதென்க.

## ௰ - வது
# துருமத்வம்ச பராக்கிரமம்.

அழிதகனுன பொல்லா வரக்கனுக் கிதுவுமொன்றே
வழிபடு தேவாஞளை வருத்திஞ னிருத்தற்கேற்ற
வெழிலுறு மேடையாதி யெய்தியவசோக மென்னும்
பொழிலினை யிறுத்தவீரன் பொன்னடியகத்துள்வைப்பாம்.

(இ-ள்.) பாவியான பொல்லாத அரக்கனுக் கிதுவு மொன்றேவென்று நாம்வணங்குந் தேவியான் ஜானகியை உபத்திரவித்த ராவண னிருத்தற்குத் தக்கவா றமைத் துள்ள மேடையாதிகளை யுடைய அசோக வனத்தினை அழித்த பராக்கிரமரான ஆஞ்சனேயரது பொன்னனைய திருவடிகளை உள்ளத்தில் வைப்போமாக எ-று.

### இதன் விவரம்.

ஒன்பதாவது பராக்கிரமத்தி லுரைத்த வண்ணம் பிராட்டியார் காணத்தமது பேருருவினைக்காட்டிய ஆஞ்ச னேயர் பெருமாட்டி யளித்த சூளாமணியைப் பெற்றுப் பிராட்டியிடம் போய் வருகின்றேனென் றுத்தரவு பெற்று ராய்த்திரும்பி அச்சோலையிற் சிறிதுதூரம்வந்து தமக்குள் நாமித்தனைதூரம் வந்து ராவணனைக்கண்டு அவனுக்கு நற் புத்தி புகட்டாதுபோதல் தகுதியன்றும் ஒரு நிமித்தமு மில்லாமல் அம்மூடாத்மாவை நாஞ்சென்று காணுதனுமழ கன்றும் அரியபெரிய கொடிகள் செடிகள் மரங்கள் தாம ரையோடைகள் மணன்மேடுகள் கட்டுமலைகள் முதலிய வைகளை யுடைய விவ்வனத்தினை யழித்து அது காரண

மாகச் சண்டையை யுண்டாக்கி ராவணனைக் காணலாம் நாம் இங்கு வந்து செல்வதற்கிது வோரடையாளமாக இருக்குமன்றோ என்று கருதி அவ்வனத்தினை அழிக்கத் தொடங்கியவர் ஒரு பெரிய வுருவங்கொண்டு இராவணனுக்கு அதிக பிரியமான அவ்வனத்தினைச் சின்னபின்னஞ் செய்தனர். உயர்ந்த மரங்களையெல்லாம் பிடுங்கி ராவணனுக்கு ஆகாயத்திலும் ஒரு சைத்திரவன முண்டென்று கண்டார்கருதும் வண்ணம் நல்ல நவரத்தின மயமாகவும் சொர்ணகாந்தி யுள்ளவுமான அரிய பெரிய மரங்களையெல்லாம்பிடுங்கி மேலெறிந்து அடியோடு நாசஞ்செய்து அவ்வசோகவனத்தினை வெறுந்தரையாகச் செய்தனர்.

பிராட்டி யெழுந்தருளி இருந்த சிம்சுபா விருக்ஷமொன்று தவிரவுள்ள மரங்களனைத்தையும் நாசஞ்செய்து.

"தாழிரும்பொழில்களெல்லாந் துடைத்தொருதமியனின்றே
ஏழினோ டேழுநாளு மளந்தவ னெனவுமானான்
ஆழியி னடுவணின்ற வருவரைக் கரசுமொத்தான்
ஊழியினிறுதிக்காலத் துருத்திரமூர்த்தியொத்தான்" என்றபடி

ஆஞ்சனேயர் உலகளந்த பெருமாளையும் கடனடுவணின்ற மலையரசான மைநாகத்தையும் உலகமழியு நாளினுருத்திர மூர்த்தியையும் போலவும் நின்றனர் உடனே காவலாளிகள் பரபரப்புடன் ஓடிவந்து சண்டை செய்தார்கள் அவர்களையெல்லாம் ஆஞ்சனேயர் வெகுலேசாகக் கொன்று அச்சோலையிலுள்ள ஒருபெரிய மண்டபத்தினை அடியோடு பெயர்த்து இலங்கா நகரத்தி னனேகபாகமழியும்படி யெறிந்து ஊழிகாலத்துக் கடலொலியு நாணவீரகர்ச்சனை செய்து நின்றனர்.

## கக - வது.

# கிங்கரத்தொம்ச பராக்கிரமம்.

---

*செங்கணி லுதிரஞ்சிந்த சேகுளத் திலகவைவே*
*லங்கையிலமரக் கூர்ங்கோட் டரியின மென்னத்துன்னுங்*
*கிங்கரர் தம்மையெல்லாங் கிடைத்தடித் துயிரைமாய்த்த*
*துங்கனை யனுமப்பேர் கொடியனைத் துன்னிரொழ்வாம்.*

(இ-ள்.) *செவ்விய கண்களிலுதிரஞ்சிந்தவும் வைரமனத் திற்றுலங்கவும் கூரிய வேல்தனழகிய கைகளிற் பொருந் தவும் கூரிய கொம்புகளையுடைய மலைகளைப்போல வந்த ராவணகிங்கரரனைவரையும் அடித்துக்கொன்ற வீரமுடை யவனுமாரென்று பெயரமைந்த பரிசுத்தரான ஆஞ்சனேய ரையடைந்து வாழ்வோமாக-எ-று.*

## இதன் வரலாறு.

*பத்தாவது பராக்கிரமத்திலுரைத்தவண்ணம் ராவண னுடைய அசோகவனத்தை யழித்தங்கிருந்த காவலாளர் களையுங்கொன்று மணிமண்டபத்தைப் பெயர்த்து நகரு ளெறிந்து நகரத்திற்பல பாகத்தினைப் பாழ்படுத்தி வீர கர்ச்சனை செய்துகொண்டு ஆஞ்சனேயர் நின்றகாலத்து வனபாலர்களாற் சங்கதி யுணர்ந்த தசக்கிரீவன் தனது போர்வீரர்களான அநேகர்களைப்பார்த்து நீங்களப்புல்லிய குரங்கைக்கொல்லாமற் பிடித்துக்கொண்டு வாருங்களென் றனுப்பினன் அவர்களும் அவனாணைப்படி ஆஞ்சனேயரை நாடிவந்தார்கள் வந்தவர்களெத் தகையரென்னில்.*

"நானில மதனிலுண்டு போரென நவிலினச்சொல்
தேனினுங் களிப்புச்செய்யுஞ் சிந்தையர்த் தெரித்துமென்னின்
சானினும் பெரியரோசைக் கடலினும் பெரியர்கீர்த்தி
வானினும்பெரியர்மேனி மலையினும்பெரியர்மாதோ" என்றபடி

இந்தப்பூமியி லெங்கேனுந் தங்கட்கொரு சண்டை யுளதென்று கேள்விப் படுவார்களாகு லஃதன்னூர்க்குத் தேனினு மினியதாகுமேயன்றிக் கசப்பாகாது; ஆரவாரஞ் செய்வாராயினுழிய கடலும் நாணத்தக்கதாகும்; வெற்றி பெற்றமையா லவர்களடைந்திருக்குங் கீர்த்தி வானவெளி யினும் பெரியதேயாகும்; இவர்களுடற் பருமனுக் கெந்த மலையையு மீடுசொல்ல முடியாது; எதிர்ப்பவர்கள் தம்மின மான அசுரராயினும் அல்லது தேவராயினும் இவரன்றி யுள்ள யாவராயினும் தடையின்றி யவர்களை வெல்லுந்திற மன்றித்தோற்குந் திறமிதுகாறுமில்லாதவர்கள்; இடையிற் கட்டப்பட்ட வாளினையும் மார்பிலிட்ட கவசத்தினையும் காலிலணிந்த வீரக்கழலினையும் திசையளவும் பூரித்த தோள்களையும் மேகங்களைத் தடவானின்ற கைகளையும் அண்டமுகட்டைத் தொட்ட முடிகளையும் மலைகளைப் பந் தாடுங்கால்களையும் மேகங்குமுறுவது போலவும் பேரிகை தொனிப்பதுபோலவுந் தொனியாகப்பேசும் பேச்சினையும் தேவாசுரர்களால் விடப்பட்ட ஆயுதங்கள் பட்டுத்தழும் பேறிய தோள்களையும் மார்பினையும் யானைகளைச்சிறுபழம் போலவெடுத்து அடுக்கடுக்காக விழுங்கும் வாயினையும் இரண்டிளம்பிறைபோல விளங்குங் கோரைப்பற்களையும் தீப்பொறிபறக்குங் கண்களையும் சக்கரங்கள், உலக்கைகள்

கலப்பைகள், வாட்கள், கேடகங்கள், சங்கங்கள், முத்கரங்கள், பிண்டிபாலங்கள், வேல்கள், சூலங்கள், கங்கபத்திரங்கள், வச்சிரங்கள், வில்லுகளம்புகள், எழுக்கள், மழுக்கள், குந்தங்கள், கழுக்கடைகள் முதலிய ஆயுதங்களை யேந்திய கைகளையும் உடையாராய் நமது வீரமெல்லாம் வாளா போமாறு நம்மை இராவணன் ஒருசிறு குரங்கின்மீது சண்டைக்குப் போகச்சொன்னானே யென்று நாணமுள்ளத்தினை யுடையவர்களாய் ஒருவர்முதுகில் ஒருவரிடித்துக் கொண்டு வாயுவேக மனோவேகங்களும் பின்னிடும்வண்ணம் முரசம் முதலிய வாத்தியகோஷத்துடன் அசோகவனத்தைச் சூழ்ந்துகொண்டு கர்ச்சனை செய்ததனைக்கண்ட ஆஞ்சனேயர் சிறிது நகையுடன் ஒரு பெரியமரத்தினை வேருடன் பிடுங்கிக் கையிலேந்திச் சுழற்றிக்கொண்டு அவர்களின் வருகையை யெதிர்பார்த்து நின்றனர்.

இவரதந் நிலையைக்கண்டவரக்கர் இவன்தான் இவன் தானென்று கூறிக்கொண்டே கிட்டநெருங்கித் தங்கள்தங்கள் கைகளிலிருந்த ஆயுதங்களால் தாக்கினார்கள் ஆஞ்சனேயர் அவ்வனைவரையும் கையிற்பிடித்த மரத்தினாலேயே லேசாக வடித்துக் கொன்றனர் மலைகள் நிலைபெயர்ந்து விழுந்தாற்போல அனைவரும் விழுந்துமாண்டனர். இது கண்ட தேவர்கள் சந்தோஷமடைந்தார்கள்.

## ௧௨ - வது

# சம்புமாலிசங்கார பராக்கிரமம்.

தம்பியை முதலபல்ல துணைப்படை சூழவெய்தி
யம்பினைவேலைவாளை யசைத்தமர் புரிந்த பொல்லாச்
சம்புமாலியை வதைத்துச் சயவொலி காட்டிநின்ற
நம்பியை யனுமன் றன்னை நயர்தடி யடைந்துவாழ்வாம்.

(இ-ள்.) யானைகள் முதலிய பல சைனியங்கள் சூழ்ந்து வராநிற்பச் சென்று அம்பும் வேலும் வாளுமுதலிய விடுத்துப் போர்புரிந்த கொடிய சம்புமாலி யென்பவனைச் சங்கரித்து வெற்றிக் குறியாக வீரகர்ச்சனை செய்து அசோகவனத்தில் நின்ற புருடருட் சிறந்த ஆஞ்சனேயரது பொன்னடிகளை விரும்பி வாழ்வோமாக-எ-று.

## இதன் விவரம்.

பதினோராவது பராக்கிரமத்திலுரைத்தவண்ணம் கிங்கரர்களை வதைத்து வீரகர்ச்சனை செய்துநின்ற ஆஞ்சனேயரைப் பிடித்துக் கட்டிக்கொண்டு வரும்வண்ணம் அதிவீரதீர சூரனை சம்புமாலியை இராவணனனுப்பினன் அவனோ இராவணன் கோபமே யோருருக்கொண்டனையாவன் அத்தகையோன் பல்லாயிரம் யானைப்படைகளும் பல்லாயிரங் குதிரைப்படைகளும் அனேகங் கோடிக் காலாட்படைகளும் அநேகமாயிரந் தேர்ப்படைகளும் புடைசூழ்ந்து கொடிகளுடனுங் குடைகளுடனுஞ் சாமரைகளுடனும் முரசவாத்தியங்களுடனும் ஒரு பெரிய தேரின்மீது

சம்புமாலியென்பவன் வருதலை ஆஞ்சனேயர்கண்டு அவன் போர் தமக்கொரு விளையாட்டாகக்கருதி ஆங்குக் கட்டப் பட்டிருந்த நவரத்தினமயமான தோரணக்கம்பத்திலேறியி ருந்து மேகவொலியும் திரைகடலொலியும் தாழ்ந்தனவாக வும் அளையுறைபாம்புகள் அச்சங்கொள்ளவும் அசுரருந் தேவரு மஞ்சவும் வீரகர்ச்சனைசெய்து திக்கஜங்களும் யம னும் உள்ளந் திடுக்கிடவும் வானிற்கெடாது காணப்படு கின்ற நட்சத்திரங்களெல்லாம் பலபலவென் றுதிரவும் நிமிர்ந்து தமது இருதோள்களையுந் தட்டினார் அவ்வோ சையைக் கேட்ட அசுரர் தாமுங் கர்ச்சனை புரிந்தார்கள் அங்ஙனங் கர்ச்சனை புரிந்தாரைச் சம்புமாலி யணிவகுத்து நிறுத்திப் போர்புரியச் செய்தனன், அவர்களும் அவனுத் தரவின் வண்ணம் கொம்புகள் சங்குகள் முதலிய வாத்தி யங்களை முழக்கிக்கொண்டு தங்கள் கையாயுதங்களை அவர் மீது விடவேண்டு முறையில் விடுத்துப் போர்புரிந்தனர்.

அதுகண்ட ஆஞ்சனேயர் தன்கைகளால் அவர்கள் விடுத்த அம்பு சூலம் வேல் ஈட்டி யாதிகளைத் தட்டியெறிந் தும் சிலவற்றைப் பிசைந்து தூள்படுத்தியும் நாசஞ்செய் து கீழே குதித்து அங்குக் கிடந்த ஒரு எழுவென்னுந் தண்டத்தை யெடுத்து அங்கு மிங்குமாகத் தாவி,

"இருந்தன னெழுந்தன னிழிந்தன னயர்ந்தான்
திரிந்தனன் புரிந்தன னெனநனி தெரியார்
விரிந்தவர் குவிந்தவர் விலங்கினர் கலந்தார்
பொருந்தின நெருங்கினர் களம்படப் புடைத்தான்" என்றபடி

அனைவரையு மடியடியெனவடித்து நாசஞ்செய்தலும் இவரடித்த வடியால் யானைப்படைகளும் குதிரைப்படைகளும் தேர்ப்படைகளும் காலாட்படைகளும் நாசமாயின முன்னணிப்படை யிவ்வாறு நாசமானவுடனே அதன்பின்னணிப்படையைச் சம்புமாலியேவினன் அப்படைஞரும் வந்துபொருதார்கள் அங்ஙனம்பொருதாரை ஆஞ்சநேயர்,

"கரிகொடு கரிகளைக் களப்படப் புடைத்தான்
பரிகொடு பரிகளைத் தலத்திடைப் படுத்தான்
வரிசிலை வயவரை வயவரின் மடித்தான்
நிரைமணித் தேர்களைத் தேர்களி னிரைத்தான்." என்றபடி

யானைகளை யெடுத்து யானைகண்மீ தடித்துங் குதிரைகளைப் பிடித்துக் குதிரைகளின் மேல் மோதியும் தேர்களை வாரி தேர்களின்மீ தெறிந்தும் காலாட்களைப் பிடித்துக் காலாட்களை யடித்தும் நாசஞ்செய்தனர். அன்றியும் வாட்போர் புரிவான் வந்தவர்களை மூளைமுதலிய குழம்பி ரத்தம்வடியக் குத்திக் கொன்றனர். அன்றியும் மல்யுத்தம் முதலியன செய்வான் வந்தவர்களைக் காலாலுதைத்து மிதித்துக் கொன்று அச்சோலை முழுதும் பிணக்காடாக்கினர்.

இவ்வாறன்றியும் குதிரைகள்மீது குதித்தும் யானைகள்மீது பாய்ந்தும் தேர்கள்மீது பாய்ந்தும் அவைகளை நாசஞ்செய்து அப்போர்க்கள முழுதிலும் அரசரானைபோலவும் ஞானிகளுள்ளம் போலவும் வேசையர் நினைவுபோலவும் காற்றாடிபோலவும் திரிந்தனர். ஸ்ரீமந்நாராயணனது சரணாரவிந்த ஸ்மரணையுடைய பரமபாகவதர்கள் அந்தப்

பகவானது விபூதியைப் பெறுவாரென்பதை உண்மையாக வங்கு விளக்குபவரைப்போல,

"அண்ணலவ் வரியினுக் கடியவ ரிவன்சீர்
நண்ணுவ ரெனும்பொரு ளையறத் தெரிப்பான்
மண்ணினும் விசும்பினும் மருங்கினும் வலித்தார்
கண்ணினு மனத்தினுந் தனித்தனி கலந்தான்." என்றபடி

அப்போர்க்கள முழுதுந் தாமாகவே விளங்கி யானைகளைக் கைகளிலிட்டுக் கசக்கிப்பிழிந்து நாசஞ்செய்து எல்லாச் சேனைகளையும் கொன்றவுடன் சம்புமாலியென்பவன் ஒருவனே நின்றனன், நின்ற சம்புமாலியி னெதிரேசென்று அடா உடன்வந்தாரைக்காக்கு மாற்றலற்றவனே போர்புரிகின்றாயா ஓடிப்பிழைக்கின்றாயா என்று கேட்டவுட னன்னோன் கடுங்கோபங்கொண்டு தனது வில்லில் நாணியேற்றி அநேக நூறுபாணங்களை ஆஞ்சநேயர்மீது விடுத்தனன். அவர் அவையனைத்தையும் எழுவாயுதத்தா லடித்தொடித் தெறிந்தனர். அதுகண்ட சம்புமாலி அவர்கையிலிருந்த எழுவினைஅம்பு விடுத்தொடித்து அவர்மீது அம்புகளை விடுத்தனன் உடனே அதிக சீற்றத்துடன் ஆஞ்சநேயர் ஓரேபாய்ச்சலாகப் பாய்ந்து அவன் கையிலிருந்த வில்லினைப் பறித்துக் கழுத்தில் மாட்டியிழுத்துத் தலையையறுத்துத் தள்ளிக் குதிரைகள்மீது குதித்தவைகளையுங் கொன்று சாரதியையும் உதைத்துக் கொன்று தேரினையும் தூள்தூளாக உடைத்து நாசஞ்செய்து எதிர்ப்பாரொருவருமின்மையால் முன்போல தோரணக்கம்பத்தி லேறியிருந்தனர்.

---

## ௧௩ - வது.

# பஞ்சசேனாபதித்வம்ஸபராக்கிரமம்.

*சேனைத்தலைவர்கள் பல்லோர் செறிந்திடச் சேமத்தேர்கள்*
*கானுற்ற கிரிகள்பேர்ந்து கடுகிய தென்னப்போத*
*மானத்தி னமரரஞ்ச மன்னிநின் றடற்றும்பொல்லாச்*
*தானைத்தலைவரை வதைத்த தடக்கைமா ருதியைத்தாழ்வாம.*

(இ-ள்.) உபசேனாபதிகள் அநேகர் நெருங்கிவராநிற்க வுஞ் சேமத்தேர்கள் மரங்கொடி செடியாதிகளையுடைய வனமடர்ந்த மலைகள் நிலைபெயர்ந்து வருமாறு வராநிற்ப வும் எய்திச் சுவர்க்கவாணரான தேவர்கள் கண்டஞ்சும் வண்ணம் போர்புரிந்த பொல்லாத பஞ்சசேனாபதிகளைச் சங்கரித்த தீர்க்க பாகுக்களையுடைய ஆஞ்சனேயரடிமலர் களை வணங்குவாம்.

### விவரம்.

முன் பன்னிரண்டாவது பராக்கிரமத்தி லுரைத்த வண்ணம் சம்புமாலியை வதைத்துப் பொன்னுலகினின் றும் ராவணன் கொண்டுவந்து நட்டுள்ள தோரணக்கம்பத் திற்பாய்ந் தின்னம் வருவோர் யாவர் என்று எதிர்பார்த்த வராக ஆஞ்சனேயர் இருந்தகாலத்தில் ராவணனானவன் பஞ்சசேனாபதிகளான கொடிய வசுரத்தலைவர்களை ஆஞ்ச னேயரைப் பிடித்துக் கட்டிக்கொண்டு வருமாறனுப்பினான்.

இராவணனாணையை யங்கீகரித்த அவர்களும் அநே கம் தேர்கள் யானைகள் குதிரைகள் காலாட்கள் முதலிய படைகளுடன் அசோகவனத்தினை யழித்துத் தோரணக் கம்பத்தி லெழுந்தருளி யிருக்கும் பராக்கிரமரான ஆஞ்ச னேயரைக் கண்டு தமது சைனியங்களை யவர்மீ தேவினார்

கள். அவர்களும் முறையே முரசுமுதலிய முழக்கத்துடன் ஆரவாரித்துச் சென்று அம்புமுதலிய ஆயுதங்களை அவர் மீது விடுத்தனர் ஆஞ்சனேயர் தமது ரோமங்களைச் சிலிர்த்துக்கொண்டு தூங்குபவரைப்போல சிறிதுநேரமிருந்தனர் அவர்கள் விடுத்த ஆயுதங்களெல்லாம் மயிர்ச்சிலிர்ப்பினாற் சிதறிவிழுந்தன. அதுகண்ட அசுரர்கள் கடுங்கோபத்துடன் முன்னிலுமதிகமாக ஆயுதங்களைப் பிரயோகித்துப் போர்புரிந்தனர்.

பின்னர் ஆஞ்சனேயர் முன்னரிற்போல எழுவாயுதமேந்தி அவ்வசுர சேனைகளையெல்லாம் அடித்துக் கொன்றனர் சேனையனைத்து நாசமானவுடனே சேனாபதிகளான ஐவருமெதிர்த்து ஒவ்வொருவரும் ஆயிரம் ஆயிரமம்புவிடுத்துப் பொருதனர் பொருதகாலையில் ஆஞ்சனேயர் அவ்வம்புகளைக் கைகளாற் றட்டியெறிந்து ஐவரிலொருவன்றேரைத் தூளாக்கினர் உடனேயவன் ஒருவாளினால் ஆஞ்சனேயரை வெட்டினான் அவர் அவ்வெட்டினை எழுவினாற்றடுத்து வாளினையொடித் தெறிந்தனர் வாள் ஒடிந்தவுடனவனான் மீட்டும் விற்போர்புரிந்தனன் பின்னர் எழுவினால் வில்லினையும் நாசஞ்செய்தனர் உடனே யவனொரு மலையையெடுத்திவர்மீ தெறிந்தான் இவர் எழுவினாலேயே யம்மலையைத் தூளாக்கி யதனைக்கொண்டே அச்சேனாபதியையடித்துக் கொன்றனர்.

உடனே மற்றைய நான்குபேர்களும் விற்களைவளைத்து ஆஞ்சனேயரது தோள்களிற் படும்படி அம்புகளை விடுத்தனர் அவைகளை யிவர்கைகளாற் றட்டியெறிந்து ஒருபெருங்

கல்லினையெடுத் தவர்கள்மீது விடுத்தனர் அவர்களதனை அம்புகளா லுடைத்தெறிந்தனர் அதுகண்ட மாருதி கோபங்கொண் டொருவனுடைய தேரினையெடுத்து ஆகாயத்தி லெறிந்தனர் மேற்சென்ற தேர்விசை யொடுங்கிக் கீழ்விழு வதன்முன்னர் அதனிலிருந்த அசுரன் கீழே குதித்தனன் அவன் தரையிற்குதித்தலைக்கண்டு அவன்மீது தாம்குதித்து அவனைக் கீழேதள்ளி நன்ருய் மிதித்துக் கொன்றனர் அதுகண்ட எஞ்சிய மூவரும் விரைவாக நெருங்கி இனி யெங்கே போகப்போகின்றனை யென்று அஸ்திரவருஷம் பெய்து போர்புரிந்தனர் அதுகண்ட ஆஞ்சனேயர் தம திரண்டு கரங்களையும் நீட்டி யவர்கள் மூவரிலிருவர் தேர் களையெடுத்து இருபுறத்திலும் அணைத்துக்கொண்டு வானி லெழுந்தனர் இவரிருபுறத்திலும் அணைத்தவுட னந்தவிரதங்கள் பொடிபொடியாகப் பொடிந்து குதிரைகள் சாரதிகள் முதலியவுமழிந்து நாசமாயின வாதலும் இரண்டசுரர் களும் தப்பித்தவர்களாய் ஆகாயத்தில் நின்று இவருடன் பொருதனர் பொருதவர்களின் கைகளிலிருந்த விற்களை ஒடித்து அம்பறாத்தூணி வாள் முதலியவைகளை நாசஞ் செய்தனர் உடனேயவர்கள் இவருடன் மல்லுயுத்தம் புரிந்தனர் இவர் அவ்விருவரையும் ஒவ்வொருகுத்தி லுயிரை வாங்கி யமலோகஞ்சேர்த்து வானில்நடக்கும் இச்சண்டை யென்னுகுமோவென்று தேரினின்று பார்த்த மற்றைய ஐந்தாவது சேனபதியின் தேரின்மீது ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தனர் பாய்ந்தவுடனே தேருடன்தானும் நாசமெய்தினன் இதனைக்கண்ட வானவர்கள் மகிழ்ச்சியெய்தினர்கள்.

௧௪ - வது.

# அக்ஷயமர்த்தன பராக்கிரமம்.

*கொண்டலிற் கரியமேனிக் குனிசிலை யசுரவெள்ள*
*மண்டியொன் றருகிற்சூழ மறலியு மஞ்சுமாற்றல்*
*அண்டிநின் றடுபோர்செய்த வட்சயன் றன்னையட்ட*
*திண்டிறல் வாயுமைந்தன் றிருவடி யிணைகள்போற்றி*

(இ-ள்.) சூல்வாய்ந்த மேகத்தினுங் கரிய உடலினையு டையவர்களும் வளைந்த வில்லினை யுடையாருமாகிய அசுர சேனைகள் ஒருவெள்ளக் கணக்காக நெருங்கி அருகிற்சூழா நிற்ப யமனுமஞ்சும் வண்ணம் நெருங்கிநின்று கொலைக் குரிய சண்டையைச் செய்த அக்ஷயனென்னு மசுரனைக் கொன்ற மிக்க வன்மையினையுடைய வாயுகுமாரரான ஆஞ்சனேயரா தழகிய உபயசரணங்களுக்கு நமஸ்காரம் என்றவாறு.

## விவரம்.

பதின்மூன்றாவது பராக்கிரமத்தி லுரைத் தாங்குப் பஞ்சசேனாதிபர்களான அசுரவீரர்களைக் கொன்ற வீராதி வீரரான ஆஞ்சனேயரைப் பிடித்துவரும்படி கருதி நான்கு லக்ஷத்துப் பன்னீராயிரம் தோழர்களுடனும் ஒருவெள்ள மென்னுங் கணக்கினையுடைய சைனியங்களுடனும் தேவ ராசனுக்குரிய ஒரு பாரிய தேரின்மீது ஆரெனக் கிணையெ னப் பேரி, மத்தளா, பூரி, காகளா, சங்க, படக, முராஜ மா திய வாத்திய கோஷத்துடனும் வில், வேல், வாள், தண்ட,

சூல, பிண்டி பால, முசல, தோமர, முசுண்டி, கப்பண, பாச வங்குசமாதி யாயுதங்களை நிரப்பிய அநேகமாயிரந் தேர்களுடனும் இருகண்களினுஞ் செவப்புநிறந் ததும்ப மகுடஹார கேயூர கடக கங்கண கவசமாதிய வாபரண பூஷிதனாய் தன் தந்தையைப் பார்த்து எந்தையே? நமது சைனிய வீரர் முதலியவர்களைக் கொன்ற வீரமுள்ள அக் குரங்கினைத் தேவரீராணைப்படி கொல்லாது பிடித்துக் கட்டி நிராடங்கமாக இங்குக் கொண்டுவருவேன் அக் குரங்கு மாயாசாலங்களை யுடைய தேவனாயினும் சரி பண் டிரணியனை வச்சிரத் தூணின்வழி யெய்திக்கொன்ற உக் கிரநரசிங்க மானாலுஞ்சரி யானதனைப் பிடித்து வருகின் றேனென்று சபதங்கூறி இராவணன் மைந்தனான அட் சய குமாரனென்பவன் விரைந்து வந்து, தோரணக் பத்தி லேறியிருந்த ஜயவீர ஹனுமந்தரைப் பார்த்து சிரித்து இந்தக் குரங்குதானே இதனையிதோ பிடித்து விடுகின்றே னென்று அவர் திறமறியாது கூறுவதனைக் கேட்ட சாரதியானவன், அவனைப் பார்த்து அழகிற் சிறந்த அண்ணல்! இதனைக் குரங்கென்று நினைத்து அவ மதிக்கவேண்டாம் பண்டு குரங்காகிய வாலியினிட மகப் பட்டு உயிர் தப்பிவந்த லங்காதிபனை நினைத்துக் கொள் வீராக. அதோ ரத்தமழை பெய்கின்றது தேர்களில் துஷ்டபக்ஷிகளான காகங்கள் முதலியன சண்டையிட்டு விழுகின்றன. வீரர்க ளணிந்துள்ள ஆபரணங்களெல் லாங் கறுத்துக் காணுகின்றன. மண்காற்று வீசுகின் றது ஒவ்வொருவரு மணிந்துள்ள மணமாலைகளிலுந் துர்க்

கந்தம் வீசுகின்றன, தேவரீர் முகமும் நிறமாறி யிருக்கின்றது, யானைகளு மதநீரடங்கினவையாக நிற்கின்றன, இவைகளை யுற்றுப்பாரும் இவைகளால் அப்ஜயமுண்டாகுமென்பது திண்ணம் ஆதலின் விரைந்து நகரஞ்சென்று மற்றொருமுறை வருவோம் கொடியாடையு மறுந்து விழுந்தது என்றுகூறி யதனையும் பொருட்படுத்தாது நீ இவைகளையெல்லாமெனக் குரைக்கவேண்டாம் ரதத்தினை முறையாக ஒட்டு ஒரு குரங்கைப் பிடித்தற்கு இத்தனை யாலோசனையா என்று கர்ச்சனைசெய்து தன் சைனியங்களைப் பார்த்து இச்குரங்கைப் பிடியுங்கள் என்றான் உடனே அவர்கள் கல்லென்னும் மைக்கடலொலியும் இடியொலியு நாண வெழுமுரசொலியுஞ் சிற்றொலியென்னுமாறு பொற்றையந் தோள்தட்டிக் கர்ச்சித்து அம்புமுதலிய ஆயுதங்களா லஞ்சனைசூனுவை அதிவீரபராக்கிரம பானுவையடித்தார்கள். இங்ஙனமடித்த அசுர சைனியங்களைக் கண்டு மிகவு மகிழ்ச்சிகொண்டு தோரணக் கம்பத்தினின்றுங் கீழே குதித்து ஆட்டுமந்தையிற் புலி புகுந்தாற்போல புகுந்து அசுர சேனைகளைக் கொல்லத் தொடங்கினர் கீழிறங்கிப் போர்புரிவதனைக் கண்ட வசுரர் விரைவிலெளிதாக வவரைப் பிடித்துவிடலாமென்று கருதி ரதங்களை யவர்மீது மோதும்வண்ண மோட்டினார்கள் அவைகளவருதைத்த உதைகளால் அச்சுமச்சு குத்துக்கால் கூவிரஞ்சக் கரமுதலிய வனைத்தும் பொடிப்பொடியாகி அழிந்தன யானைகளையேவினர் முட்டவந்த யானைகள் கிட்டவந்தவுடன் எட்டியுதைத்துக் கொன்றனர். கூட்டங்கூட்

டமாக வந்த குதிரைப்படைகளை அதிருங்குரலுடைய யானைகளை வாரியெறிந்து நசுக்கிக் கொன்றனர். அணி யணியாக வந்த துணிவுடைச் சேனைகளை மணிகட்டிய வாலாலடித்துக் கொன்றனர். சேனாபதிகளாநின்று சோன மேகம்போல அம்புவிடுத்து வம்பு விளைத்தவர்களை யெல் லாம் எட்டியுதைத்தும் கட்டி அடித்தும் காலான் மிதித் தும் வாலால் வலித்தும் கையாற் பிசைந்தும் கொன்று குவித்தனர். "உடனே நான்குலக்ஷத்துப் பன்னீராயிரந் தோழர்களுடன் அக்ஷயனெதிர்த்துச் சங்கநாத சிங்க நாதங்களாற் கடலொலியை யடக்கிப் பற்குடித்து விற் பிடித்துப் பாணங்களை விடுத்துப் போர் புரிந்தனன். சாணைபிடித்துத் தைலமூட்டி மெழுகுமணல் தேய்த்துப் பளபளப்பாக்கி வைத்துள்ள கூரிய நாராசபாணம் பஞ்ச முகபாணம் அர்த்தசந்திர பாணமுதலிய பாணங்களை விடுத்துக் கடும்போர் புரிந்த அக்ஷயனையும் அவன் தோழர் களையுங் கண்டு சீற்றங்கொண்டு வெடியுமிடியு நாணத் தோள்கொட்டி யாஞ்சனேயர் அங்குக்கிடந்த ஒருபெரிய எழுவாயுதத்தினை யெடுத்துச் சுழற்றி அக்கோடி யசு ரர் குமாரர்களையுஞ் சிங்கம் யானைமத்தகம் பிளக்குமாறு அடித்து மண்டையை யுடைத்து முகங்கடுத்து வெடுவெ டுத்துக் கொல்லுதலைக் கண்டவர்களிலனேகர் இவனெ திரே நின்றால் நாம் சாவோமென்று கருதிப்பயந்து காகம் கழுகு பருந்து நாய் நரி பூதம் பிசாசம் முதலியவையாக உருமாறியும் பிணமலைகளி னுள்ளொளித்தும் உயிரைக் காப்பாற்றிக் கொண்டனர். இவைகளையெல்லாங் கண்ட

அக்ஷய னஞ்சாதெதிர்த்துக் கூரிய பாணங்களை விடுத்து ஆஞ்சநேயருடலைச் செந்நிறமாக்கினான். அதுகண்ட வாஞ்சநேயர் விரைந்து ஓரே பாய்ச்சலாகத் தோரணகம்பத் திற்றாவி யதன்மீதிருந்தனர். அதுகண்டு மிகுந்த மகிட்சி கொண்ட அக்ஷயன் ரதத்துடன் தோரணக்கம்பத்தின் அருகிற்சென்று வீரகர்ச்சனை செய்து கடும்போர் புரிந்த னன் சிறிதுநேரம் அவனுடைய அம்புகளைக் கைகளாற் றட்டியெறிந்து அவன் தேரின்மீது ஓரே பாய்ச்சலாகப் பாய்ந்து தமது திருவடியே ஒரு குழவிக்கல்லாகவும் ரதம் குதிரை சாரதி அக்ஷயன் முதலான பொருள்கள் அரைக் கும் பொருள்களாகவும் தரையோ ரம்மியாகவும் கொண்டு தேய்த்து மிதித்து மிதித்து இன்னதென்று தெரியா வண்ணமாக்கி யழித்துக் கர்ச்சித்தனர். இதனைக் கண்டு இனித் தங்கள் துன்பம் விரைவி லொழியுமென்று கருதி மிகுந்த மனோல்லாசத்துடன் தேவர்கள் புட்பவருஷம் பெய் தாரவாரித்தனர் ஆஞ்சனேயர் பின்னும் வருபவர் களை யெதிர் நோக்கித் தோரணக் கம்பத்திற் பாய்ந்தி ருந்தனர்.

---

## கரு - வது.

# இலங்காதகன பராக்கிரமம்.

---

தலங்கையை யெடுத்துப்போற்றச் சமீரணன் புகழ்ந்துவாழ்த்த
மலங்கையை முனிவர்யாரு மன்றநின் றாசிகூற
சலங்கையை யணிந்தபாதத் தானவர் மகளிரேங்க
விலங்கையை யெரித்தவீர னிணையடி முடிமேல்வைப்பாம்.

(இ-ள்.) உலகங் கைத்தூக்கித் துதிக்கவும் வாயுதேவன் புகழ்ந்து வாழ்த்தவும் ஆசாதிகளை வெறுத்த சிறந்தவர்கள் ஆசிகூறுநிற்கவும் சதங்கையணிந்த தாள்களை யுடைய அசுரமடந்தைய ரேங்கவும் இலங்கையை யெரித்த பராக்கிரமரான ஆஞ்சனேயரது திருவடிகளைத் தலைமீது வைத்துத் துதிப்போமாக-எ-று.

## இதன் வரலாறு.

பதினொன்காவது பராக்கிரமத்தி லுரைத்த வண்ணம் அட்சயனைக் கொன்று தோரணக் கம்பத்திலிருந்த ஆஞ்சனேயரைப் பிடித்து வருவதாகப் பிரதிக்ஞை செய்து ஆயிர மாயிரமான சதுரங்கங்களுடனே இராவணனது மூத்த குமாரனான இந்திரசித்தென்னும் அசுர சிரேஷ்டன் ஒரு பாரிய தேரிலேறிவந்து சைனியங்களை விடுத்துப் போர்புரிவித்து நிற்றலும் ஆஞ்சனேயர் தோரண-கம்பத்தினின்றும் விரைவாகக் கீழிறங்கித் தேர்கள் யானைகள் குதிரைகள் காலாட்கள் என்னுஞ் சதுரங்க

சைனியங்களையும் கண்களை மூடித் திறப்பதற்குள் உதைத்தும் அடித்தும் இடித்தும் குத்தியும் மொத்தியுங் கொன்றனர். அதுகண்ட மகாவீரனான இந்திரஜித்து கடுங்கோபங்கொண்டு தனது பெரிய வில்லினை வளைத்து நாணேற்றிட்டு குணத்தொனி காட்டி ஆரவாரத்துடன் போர்புரிந்தனன். இவன்செய்யும் போரினைக்கண்ட ஆஞ்சனேயர் ஒருபெரிய எழுவாயுதத்தினை யெடுத்துக் கையிற் பிடித்து அவன் விடுத்த ஆயுதங்களை யெல்லாம் பொடிப் பொடியாகப் பொடித்தெறிந்து வீரகர்ச்சனை செய்து விரைந்துசென்று அவன் கையிலிருந்த பெரிய வில்லினைப் பிடுங்கி இருதுணியாக ஒடித்தெறிந்தனர். அதுகண்ட இந்திரசித்து பின்னும் அதிக கோபத்துடன் ஒரு இந்திரதனுசை யெடுத்து [illegible]த்து நாணேற்றி கண்டு அபரிமிதமான அம்புகளை [illegible]தனில் வைத்து விடுத்து ஆஞ்சனேய ருடலமெல்லாம் இரத்தமயமாக்கினன்.

இவனிவ்வாறு செய்ததைக்கண்டு வானரகேசரியானவர் அவன் றலையணியான மகுடமுடைந்து விழவும் மண்டைபிளந்து மலையினின்று மருவியொழுகுவது போல சோரியொழுகவு மொரே ஓரடி மண்டையி லடித்தனர். அவ்வடிபட்டு இரத்தமொழுகிய இந்திரசித்தன் பின்னு மனேக பாணங்களை விடுத்துப் பொருதனன் அவன் விடுத்த பாணங்களையெல்லா மெழு மராமரமென்னு மித்தகைய ஆயுதங்களால் நாசஞ்செய்து அவன் தேரினருகிற் சென்று அதனை ஒருகையாலெடுத்து மேலேயெறிந்தனர்

தேருடன்மேற் சென்றவன் கீழ்விழாமற் தப்பித்து லகுவாகப் பூமியிற் பாய்ந்தனன். இவனிவ்வாறு பூமியிற் குதித்தற்குள் அவனுடைய க்ஷேமத்தேர் அனைத்தையுஞ் சின்னாபின்னமாக உடைத்தெறிந்தனர். அதுகண்டு இந்திரசித்தன் பிரமாஸ்திரமென்னு மஸ்திரத்தை யெடுத்து அதனைப் பூசிக்குமுறையிற் பூசித்து விடுத்தனன் அது ஆதிசேடனைப் போன்ற ஒரு பெரிய பாம்பினுருவமாகி ஆஞ்சனேயரை வந்து சூழ்ந்துகொண்டது அதுகண்ட அஞ்சனாநந்தனர் அதனைப் பிரமாஸ்திர மென்றறிந்து இவ்வத்திரபந்தனத்தை யா[illegible]ரமாகக்கொண்டு இராவணனைக் காணலாமென மௌன[illegible]க இருவிழிகளையும் மூடியிருந்தனர்.

அதுகண்ட இந்திரசித்து இவரை அசுரவீரர்களைக் கொண்டிழுப்பித்து ராவணனுடைய சபைக்குக் கொண்டு போயிவரை யவனெதிரே நிறுத்தி இதோ கொண்டுவந்தேன் இவனையினித் தேவரீர் திருவுளம்போல் செய்யலாமென்றவுடன் ஆஞ்சனேயர் இருவிழிகளையுந் திறந்து ராவணனுயர்ந்த சிங்கவனையி லிருத்தலையுந் தன்னை யவனெதிரே நிறுத்தி யிருத்தலையுங் கண்டு உடம்பையொருதரமுதறினர் உடனே பிரமாஸ்திர மொய்த்திருந்த விடந்தெரியாது விலகி யொழிந்தது ஒழிதலும் தமது வாலை மிகவு நீட்டி இராவண சிங்காதனத்தினு முயரமான ஆசனமாகச் செய்ததன்மீ திருந்தனர். இராவணன் அவரைப் பார்த்துச் சீற்றத்துடன்,

"நேமியோ குலிசியோ நெடுங்க ணிச்சியோ
தாமரைக் கிழவனோ தறுகட் பஃறலைப்
பூமிதாங் கொருவனோ பொருது முற்ற
நாமமு முருவமுங் கரந்து நண்ணினாய்."

"நின்றிசைத் துயிர்கவர் நீலக் காலனோ
குன்றிசைத் தயிலுற வெறிந்த கொற்றனோ
தென்றிசைக் கிழவனோ திசையி னாட்சியர்
என்றிசைக் கின்றவர் யாருள் யாவனீ."

"அந்தணர் வேள்வியி னுக்கி யானையின்
வந்துற விடுத்தவோர் வயவெம் பூதமோ
முந்தொரு மலருளோ னிலங்கை முற்றுறச்
சிந்தெனத் திருத்திய திகிரித் தெய்வமோ "

என்று கோபத்துடன் வினாவின னங்ஙனம் வினாவிய இராவணனைப் பார்த்து இராவணா! யான் நீ கூறிய எவருல்லேன் கோதண்ட வில்லியான ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியின் தூதன் நினதிலங்கையை காணியவந்தனன் என்றனர் என்றவுடன் ராவணன் சிரித்து ஓ மனிதனான ராம தூதனா நீ யென்றனனுடனே ஆஞ்சநேயர் இராவணா நீ ராமபிரானைக் கேவலமான மனிதனென்று நினையாதே அவர் பிரமருத்தி ரேந்திராதி தேவரையுமாளு மூர்த்தி, ஆதிமூலமான வையன் ஆழிக்கையன் காயாம்பூ மெய்யன் துய்யர்க்குத் துய்யன் மெய்யர்க்கு மெய்யன்,

'மூலமு நடுவுமீறு மில்லதோர் மும்மைத்தாய
காலமுங் கணக்குநீத்த காரணன் கைவிலேந்திச்
சூலமுந் திகிரிசங்கும் கரகமுந் துறந்ததொல்லை
யாலமு மலரும்வெள்ளிப் பொருப்பும்விட் டயோத்திவந்தான்."

"அறந்தனை நிறுத்திவேத மருள்சுரந் தறைந்தநீதித்
திறந்தெரிந் துலகம்பூணச் செந்நெறி செலுத்தித்தீயோர்
இறந்துக நூறித்தக்கோர் ரிடனுடைத் தேகவீண்டு
பிறந்தனன் றன்பொற்பாத மேத்துவார் பிறப்பறுப்பான்.

இத்தகையனந்த விராமச்சந்திர மூர்த்தி யென்றறிந்துகொள்க என்றனர். அதுகேட்ட ராவணன் புல்லிய மனிதனை யென்முன்னர்ப் புகழ்ந்த இவனைக் கொல்கின்றேனென்று கூறிய காலத்துத் தூதனென்றுணைக்கோறல் முறை யன்றெனக்கூற வதுகேட்ட ராவணன் வாலிற் கிழி சுற்றுவித்துத் தீப்பற்றிக்கொள்ளச் செய்துவிடுதலே தகுந்த மரியாதையென்று கூறினன்.

ஆஞ்சனேயர் பிராட்டி விஷயமாகவும் அநேக நியா யங்களைப்பேசி வாலில் திரிசுற்றித் தீயிட்டபின்னர் இந்த விலங்கையை நெருப்பிட்டுக் கொளுத்திப் பின்னர்க் கடல் தாண்டிப்போவதே நலமெனக் கருதி மவுனமாக விருந்தனர்.

இராவணனுடைய கட்டளையால் அசுரர்கள் வண்டிவண்டியாகத் துணியைக் கொண்டுவந்து வாலிற் சுற்றினார்கள் அவர்கள் துணியைச் சுற்றுந்தோறு மிவர்வாலை மிக நீளமாக்கிக் கொண்டே யிருந்தனர். அசுரர்களும் அவரவர் கட்டியுள்ள வஸ்திரங்களைத் தவிர உள்ள துணிகள் அனைத்தையுஞ் சுற்றி யொருமலைபோல பெரிதாக்கினர் பின்னர் எண்ணெய் முதலிய பலவகைத் தைலங்களை

அத்துணிச் சுருண்மீது விடுத்தனர் இலங்கையி லெண்ணெய் முதலிய எந்தத் தைலங்களும் இல்லையென்னும் வண்ணம் அனைத்துத் தைலங்களையும் விடுத்து நனைத்தனர் நனைத்தபின்னர் நெருப்புக்கொண்டுவந்து பற்றவைத்தனர் வாலில் நெருப்பு வைத்தால் அவர்க்கு வருத்தமுண்டாகு மென்று கருதினார்களேயன்றி எந்த வசுரனும் அவரை அக்கினிதேவனுக் குரியவர் பிள்ளையென்றும் அக்கினிக் குத் துணைவர் என்றும் அறிந்தவரல்லர் வாலில் நெருப் புப் பற்றிக்கொள்ளு மளவும் சும்மாவிருந்த மாருதிவிரைந் தெழுந்து அங்குமிங்குமாக உலாவிக் குதித்து வாலைநீட்டி ஒரு கணநேரத்தினுள் அந்த லங்காநகர முழுமையும் தீமய மாகி யெரியும் வண்ணஞ் செய்தனர்.

இவ்வாறிவர் செய்வாரென்றறியாத ராவணன் ஊர் முழுமையும் நெருப்பிட்டுக் கொளுத்திய வானரவீரரைப் பிடித்துவரும்படி பின்னுமனேக அசுரரையேவினான் அவர்கள் இவரிடம் வந்தவுடனே இவர் அவர்களைத் தமது வாலினுட்புறத்து வளைத்துச் சுற்றித் தீயாற் கொளுத்திக் கொன்றனர் பின்னுமனேகரை யனுப்பினான் அவர்களையும் தமது வாற்கோட்டைக்கு ளமைத்துத் தீயாற்கொளுத்திக்கொன்றனர். இதனை,

"உண்ட நெருப்பைக், கண்டனர் பற்றிக்
கொண்டணை கென்றா, னண்டரை வென்றான்
உற்றகலா முன், கற்ற குரங்கைப்
பற்றுமி னென்றான், முற்று முனிந்தான்.

"சாரய னின்றார், வீரர் வெகுண்டார்
நேருது மென்றார், தேரினர் சென்றார்
எல்லை யிகந்தார், வில்லர் வெகுண்டார்
பல்லதி காரத், தொல்லர் தொடர்ந்தார்.

நீர்கெழுவேலையிமிர்ந்தார், தார்கெழுதாலினமைந்தார்
போர்கெழுமாலைபுனைந்தார், ஓரெழுவீரருயர்ந்தார்.

விண்ணினைவேலை விளிம்பார்
மண்ணினையோடி வளைந்தார்
அண்ணலைநாடி யணைந்தார்
கண்ணினின்வேறிலை கண்டார்.

பற்றுதிர் பற்றுதிரென்பார், எற்றுதிரெற்றுதி ரென்பார்
முற்றினர் முற்றுமுனிந்தார், கற்றுணர்மாருதி கண்டான்.

எல்கொடுவெஞ்ச ரெதிர்ந்தார், கால்கொடுகைகொடு கார்போல்
வேல்கொடு கோலினர்வெந்தீ, வால்கொடுதோளும் வளைந்தான்.

பாதபமொன்று பறித்தான், மாதிரம்வாலின் வளைத்தான்
மோதினன் மோதமுனிந்தார், ஓதியுகாளு மிழந்தார்.

நூறிடமாருதி னொந்தார்
ஊறிடஊமகு புண்ணீர்
சேறிட வூரடுசெந்தீ
யாறிட வோடினதானும்.

என்றுவரும் உதாரணங்களாலுணர்க.

௧௧ - வது.

# சத்தவீரத்வம்ச பராக்கிரமம்.

கல்லாரமுத பேரொலியு நறுந்தாரணிசேர் புயவசுர
ரெல்லாமமுத சும்மையுமவ் வெரியினடங்க விலங்கையழல்
புல்லாநின்ற பொழுதெய்திப் பொருதநிருதர் தமின்மிகவும்
பொல்லாவெழுவர் தமைக்கொன்ற புனிதவநுமன் கழல்போற்றி.

(இ-ள்.) அந்தோவென வரக்கிய ரமுதவொலியு நல்ல மலர்மாலையணிந்த தோளினரான வசுரரமுத வொலியு மவ் வெரியின் சடசடவென்னு மோசையினடங்கா நிற்குமாறு இலங்காநகரம் தீக்கிரையான அந்நாளிற் போர்புரிந்த அசுர வீரருட் சிறந்த பொல்லாத சத்த வீரர்களைக் கொன்ற தூய்மையினரான ஆஞ்சனேயரது சரணாரவிந்தங்களுக்கு நமஸ்காரம், எ-று.

## இதன் விவரம்.

பதினொன்றாவது பராக்கிரமத்தி லுரைத்த வண்ணம் ஆஞ்சனேயர் இலங்கா நகரத்தை அலங்கோலமாக்கி யெரித்த சமயத்தில் அந்நகர வாசிகளான அசுரர்களனைவரு நனிநடுங்கிப் பலர் மேலே பறந்து சென்றனர், சிலர் தீக்கே இரையாயினர், இச்செய்தியை யுணர்ந்த ராவணன் கடுங் கோபத்துடன் அக்குரங்கு தானறியாண்மையுடையது இலங்கையைக் கொளுத்தியது இந்த அறிவுள்ள அக்கினியானவன் எவ்வாறு கொளுத்துவான் இஃதென்ன விபரீதம் ஆரடா சத்தவீரர்களே நீங்களுங்கள் சைனியங்களுடன்

விரைவாகச்சென்று நமது நகரத்தை வாற்றீயா லெரிக் கின்ற அக்குரங்கினைப் பிடித்துக்கட்டி அக்கினியையும் பிடித்துக்கொண்டு வாருங்கள் என்று கூறியனுப்பினான். அவர்களும் மிகுந்த கர்வத்துடன் வில்லம்பு முதலிய ஆயு தங்களுடன் ஆஞ்சனேயருலாவி லங்கையைக் கொளுத்து மிடத்துச் சென்று நாற்புறத்திலும் வளைந்துநின்று பாரிய தங்கள் விற்களை வளைத்து நாணேறிட்டு அம்புகளை வைத்து விடுத்து ஹட்டகாஸஞ் செய்தனர்.

அதுகண்ட அஞ்சனாநந்தனர் தமது வாலையுயர்த்தி அச் சத்தவீரர்களையும் வாலுக்குள்ளாக்கிப் பின்னும் வாலை வளைத்து அவர்களின் முகமுதலிய இடங்களில் நெருப்புப் பற்றுமாறுசெய்து அவர்களை யந்நெருப்பி லேயே பொசுக்கி நசுக்கிக் கொன்றனர். அவர்களை யவ் கொன்றது மற்றையோரைக் கொன்றதினு மதிகவேடிக் கையாகக் கொன்றனர். உடன் வந்தவர்களையும் அவ் வாறே கொன்றனர். அனைவரையுங் கொன்றபின்னர் பிராட்டியை வணங்கி விடைபெற் றிலங்கையி னின்றும் ஓரே பாய்ச்சலாக மகேந்திரகிரியை யடைந்தனர். இதனை,

“சுற்றின தேரினர்தோலா
விற்றொழில் வீரம்விளைத்தார்
எற்றினன் மாருதியெற்ற
வுற்றொருவோரு முலர்ந்தார்.

என்பது முதலியவைகளாலுணர்க.

---

## ௧எ - வது.

# நளகருவபங்க பராக்கிரமம்.

கரியகடலி லுயர்சேது கட்டுஞான்று விலங்கினங்கள்
சரியமலைக ளெடுத்தெய்தித் தருமத்தனையு மொருகையாற்
றெரியவேந்திச் செருக்குற்ற நீரநளனறன் வீரத்தைப்
பெரியவேழு மலையிட்டுப் பெயர்த்தவனுமன் கழல்போற்றி.

(இ-ள்.) கருநிறத் தோற்றத்தினை யுடைய கடலில் அணைகட்டுங் காலத்து அதற்குக் கொத்தனாக விருந்து (கொத்தன் கொல்லத்துக்காரன்) வானரவீரர்கள் விலங் கினஞ் சரியப் பெரிய பெரிய மலைகளைக் கஷ்டத்து டன் பறித்துக்கொண்டு வந்திருகைகளாலுங் கொடுத்தா லவைகளை ஒருகையால் இலகுவாக வாங்கிச் செருக்குற்ற நளனது பராக்கிரமத்தைப் பெரிய ஏழுமலைகளை ஒரே தடவையிலிட் டிரண்டுகையாலு மேந்தமுடியாது செய்து அவன் செருக்கினை யொழித்த ஆஞ்சனேயரது திருவடி கட்கு நமஸ்காரம், எ-று.

## வி வ ர ம்.

பதினாறுவது பராக்கிரமத்தி லுரைத்த வண்ணஞ் சத்தவீரர் முதலியோரைக் கொன்று இலங்காபுரியைக் கடந்து மகேந்திரமலையை யடைந்து வானர வீரர்களைக் கண்டு சோபனங்கூறி ராமபிரானை யடைந்து வணங்கிப்

பிராட்டியைக் கண்டது முதலியகூறிச் சுக்கிரீவன் முத லான வானரத் தலைவர்களுடன் பெருமாளையும் இளைய பெருமாளையும் அழைத்துக்கொண்டு தக்ஷிண சமுத்திரக் கரை யடைந்த வாஞ்சனேயர் விபீஷணன் சுக்கிரீவன் இளையபெருமாள் முதலியவருடன் ஆலோசனை செய்து சேதுபந்தனஞ் செய்யும் வண்ணம் வானராதிபனுன நள னுக்குச் சுக்கிரீவன் கட்டளையிட்ட காலத்தில் அவனதற் கிணங்கி அணைகட்ட மற்ற வானரர் மலைகள் மரங்கள் முதலிய கொண்டுவந்து கொடுத்த காலத்தில் ஆஞ்சனேய ருஞ் சுவாமி காரியமாகப் பெரிய பெரிய மலைகளைப் பெயர்த்து இருகையிலு மேந்திக்கொண்டு வந்து கொடுத் தனர். கொடுத்தவைகளை யெல்லாம் நளனுனவன் வெகு லகுவாக ஒரு கையினுலேயே வாங்கிச் சிறுகல் லடுக்கு வதுபோ லடுக்கி அணைகட்டினுன் அதுகண்ட ஆஞ்சனே யர் நாங்கொண்டு வருவதை மாத்திரம் இவ்வாறு செய்கின் ருனு அல்லது மற்றையர்கள் கொண்டுவருவதையு மிவ் வாறே செய்கின்ருனு என்று பார்த்து அனைவரிடமு மிவ் வாறே செய்கின்ரு னென்பதைக் கண்டு அவன் செருக்கை யடக்கக் கருதிப் பெரிய பெரிய மலைகளைப் பறித்து சுமந் துக்கொண்டு வந்து திடீரென்றிட்டனர். அவைகளையு மவன் கைகளால் இலகுவாகப் பிடித்தும் கைக்குத் தவறி னுல் காலினுலெற்றிப் பிடித்துங் கடலிலிட்டு அணைகட்டி னுன் அங்ஙன மவன் செய்யவே இவனை இருகரத்தாலும் மலையைத் தாங்கச் செய்யவேண்டு மென்றுதம துள்ளிற் கருதி ஓர்காலத்தில் மிகவும் பெரிய ஏழுமலைகளை யடுக்

காக எடுத்து வந்திட்டனர். அவைகளை யொருங்கே தாங்குமாற்ற லின்றித் தவறவிடுத்து முகம்வாடிச் செருக் கொழிந்தனன். இதனை,

"மூடுக்கினன் றருகென மூன்று கோடிய
ரெடுக்கினு மம்மலை யொருகை யேந்தியிட்
டடுக்கினன் றன்வலி காட்டி யாழியை
நடுக்கின னளனெனு நவையி னீங்கினான்."

"மஞ்சினிற் றிகழ்தரு மலையை மாக்குரங்
கெஞ்சுறக் கடிதெடுத் தெறிய வோளன்
விஞ்சையிற் றாங்கினன் சடையன் வெண்ணெயிற்
றஞ்சமென் றோர்களைத் தாங்குந் தன்மைபோல்." எ-ம்.

"சோலைவாய் மணிவரையை
நிரைநிரை பறித்தனை
தலக்கிய னளன்செருக்கைச்
சூழிட்டவரைகளோ ரேழிட்டடக்கி" எ-ம்.

வருவனவற்றானுணர்க.

---

## கஅ-வது.

# இராவண மர்மதந்த பேதன பராக்கிரமம்.

---

"மாமுர சுடுக்கைதக்கை மல்லரி தருணிச்சம்மே
யாமிவை முழங்கத்தேரி லணைதசக் கிரீவன்செய்ய
மாமணி மார்பிற்குத்தி மறங்கெடுத் தென்னையாண்ட
தாமனை யிராமதூதத் தலைவனைத் தாழ்ந்துவாழ்வாம்.

(இ-ள்.) சிறந்த முரசுகள் உடுக்கைகள் தக்கைகள் மல்லரிகள் தருணிச் சங்கங்கள் முதலிய இவைகள் முழங்காநிற்ப இரதமிவர்ந்து வந்த தசக்கிரீவனது செவ்விய சிறந்த மணிக்கவச மணிந்த மார்பிற்குத்தி யவனது வீரத்தினைக் கெடுத்து என்னையாண்ட காந்திரூபனை ராமதூதனை தலைவனை வணங்கி வாழ்வோமாக, எ-று.

## இதன் விவரம்.

பதினேழாவது பராக்கிரமத்தி லுரைத்த வண்ணம் நளகர்வத்தை யடக்கிய மாருதியானவர் சேதுவின் வழியாகச் சென்ற பெருமாள் முதலானவர்களுடன் இலங்கா நகரத்தின் வடபாகத்தை யடைந்து சுவாமிகாரிய துரந்தரராய் இருந்த காலத்தில் வானரசேனைகளுடன் இராமபிரானெழுந்தருளி வந்திருத்தலை யுணர்ந்து கடுங்கோபங் கொண்டு அனேகமான அசுர சைனியங்களுடன் போர்க்

கோலங் கொண்டு வெளிவந்து பத்துக் கைகளிலும் பத்து விற்களைப் பிடித்துக் கடும்போர்புரிந்து வானர வீரர்களைக் கலக்கிக்கொண்டு வருதலைக்கண்ட ஆஞ்சனேயர் அந்த ராவண னெதிரே சென்று உனக் காண்மையிருந்தா லென்னுடன் முஷ்டி யுத்தமென்னுங் குத்துச் சண்டையைச் செய் பார்க்கலாம் என்றன ரதுகேட்ட ராவணன் தனது லங்கையைக் கொளுத்தி நாசஞ் செய்தவனென்று கருதி இதோ வந்தேனென்று விரைந்து தேரினின்று மிறங்கி ஆஞ்சனேயருடன் குத்துச் சண்டைக்கு நின்று இருவருமாகச் சண்டை செய்தார்கள் கடைசியாக இராவணனுடைய மார்பில் ஆஞ்சனேயரொரு குத்துக் குத்தினர்.

"கைக்குத்தது படலுங்கழ லிருதார்க் கிறைகறைநீர்
மைக்குப்பையி னெழில்கொண் டொளிர் வயிரத்தடமார்பில்
சிக்கிச்சின மதயானைகள் வயவெம்பனை செருவில்
புக்கிற்றன போகாதன புறமுக்கன புகழின்.

அள்ளாடிய கவசத்தனி மணியற்றன திசைபோய்
விள்ளாநெடு முழுமீனென விழிவெம்பொறி யெழநின்
றுள்ளாடிய நெடுங்கால்பொர வொடுங்கா வுலகுலையத்
தள்ளாடிய வடமேருவிற் சலித்தானறம் வலித்தான்."

என்றபடி யக்குத்துப் பட்டவுடனே மஹாதீரனு ராவணன் வீரமிழந்து தன்னிலை கலங்கி உலகழியுங் காலத் தூழிக்காற்றினு னிலைபெயருமேரு மலையைப் போலத் தள்ளாடினு னவனது மார்பில் அஷ்டகஜங்களின்

கொம்புகள் தைத்திருந்தவை புறமே உருவிவிழுந்தன சில உள்ளே உடைந்து தூளாயின இங்ஙனமாகியபின் னிராவணன் ஆஞ்சனேயரைப் பார்த்து வானரவீரா! யான் முன்னர் திக்கயங்களோடு பொருதகாலத்தி லவைகளென் மார்பிற் றங்கொம்புகளாற் குத்தித் தோற்றன. கைலையென்னும் வெள்ளிமலை என் கரங்கட்குப் பந்துபோலவிருந்தது. அத்தகைய வென்னை வென்ற ஒப்பு முயர்வு மற்ற உன்னை மெச்சினேன் உன் பராக்கிரமமே பராக்கிரமமெனப் புகழ்ந்தனன். இதனை,

"வலியென்பது முளதேயது நின்பாலது மறவோய்
அலியென்பன புறநின்றன வுலகேழினு மடைத்தாய்
சலியென்றுயர் மலரோனுரை தந்தாலிறை சலியேன்
மெலிவென்பது முணர்ந்தேனெனை வென்றாயினி விறலோய்.

என்பதனாலுணர்க.

௧௬ - வது.

# ராமாநுஜக்கிரஹண பராக்கிரமம்.

கூரிய காலவேலிற் கொடுஞ்சமர் புரிந்துவீழ்ந்த
வாரிய விளையோன் றன்னை யடைந்தெடுத் தகங்கரித்த
வீரிய விலங்கைவேந்தன் வெட்குற விரைவினெய்தி
நேரிய னென்னவேந்து நிமலனை நினைந்துவாழ்வாம்.

(இ-ள்.) கூர்தங்கிய காலவேலினாற் கொடிய போர்புரிய வவ்வேல்பட்டு விழுந்த அழகிய இலக்குமணனை விரைந் தடைந் தெடுத்து அகங்கரித்த வீரியத்தினையுடைய இலங் கையரசன் எடுக்கவு மசைக்கவும் முடியாது வெள்கிநிற் கும் வண்ணம் இலக்குமணப் பெருமாளை மிகவும் இலகு வானவரைப்போல எடுத்துச் சென்ற தூய்மையாளரான ஆஞ்சநேயரைத் தியானஞ்செய்து வாழ்வோமாக-எ-று.

## விவரம்.

பதினெட்டாவது பராக்கிரமத்தி லுரைத்த வண்ணம் இராவணனைக்குத்திய ஆஞ்சநேயர் மற்றொருபுறஞ் செல் லாநிற்பப் பின்னும் இராவணன் தனது தேரிலேறி விற் சண்டைசெய்து வானரர்களை அதஞ்செய்த காலத்து அவ னையெதிர்த்துப் பெரும்போர் புரிந்த இலக்ஷ்மணர் அவ் விராவணன் விடுத்த அம்புகளை யெல்லா நாசஞ்செய்து அவனை நடுங்கும் வண்ணஞ் செயதனர். அதுகண்டு கடுங் கோபங் கொண்ட ராவணன் தெய்வீகமுடைய ஒரு வேலாயுதத்தினை யெடுத்து விடுத்தனன். அவ்வேலாயுத மானது இலக்ஷ்மணர் விடுத்த அம்புகளையெல்லா நாசஞ் செய்துகொண்டு சென்றவர்மார்பிற்றாக்கியது. அதனால் மூர்ச்சிதராகி அவர் கீழே சாய்ந்தார் அதுகண்டு தேவர்

முதலிய நல்லோரனைவருஞ் சலித்தார்கள் அசுரர் முதலிய தீயோ ரனைவருங் கெக்கலி கொட்டிச் சிரித்தார்கள். உடனே இராவணன் தன் மனதினுள் இந்த மனிதன் இராமனுக் கிளையவன் இவன் நல்ல போர்வீரன் இவனை தேவாஸ்திரமானது கொல்லாதுமூர்ச்சைப் படுத்தியது இவன் சிறிது நேரத்தில் மயக்கநீங்கி யெழுந்தி ராமனோடு கலந்தால் காடுபற்றி யெரியுங் காலத்துக் காற்றுமுடன் கலந்ததுபோலாகி நமது சேனைகளை நாசஞ் செய்வார்கள். மயங்கிக்கிடக்கு மிவனுணர்தற்கு முன்னே இவனை நாமெடுத்து நமதிலங்கைக்குட் சீதையைப்போல சிறையிலடைத்துவைப்போம் பின்னர் இராமனையும் கூடுமானல் அவ்வாறு செய்யலாமென்று கருதித் தனது பர்வதாகாரமான தேரினின்றும் இறங்கி இலக்ஷ்மணப் பெருமாள் கிடக்குமிடஞ் சென்று இருபுறத்துக் கைகளாலும் தூக்கிப் பார்த்தான் அவர் சிறிது மசைந்தாரில்லை அஷ்டகஜங்களும் எனக்கிணை யல்லாதன சிவன் கைலையுமெனக்கு ஈடானதன்று பெருமலையான கைலாய மென்னாற் றூக்கப்பட்டதே சிறு மனிதனை இவனையேன் றூக்கமுடியவில்லை நமது பெலமெல்லாங் கூட்டித் தூக்குவோமென்று கருதி மூச்சடக்கி அதிக வன்மையுடன் லக்ஷ்மணனைப் பின்னுந் தூக்கிப் பார்த்தான் அசைக்கக்கூட அவனாலாகவில்லை அதனலவனிவன் மேருவினுந் திண்ணியன் என்னாலசைக்கப் படாதபோது இவன் எவராலு மசைக்கப்படான் அம்மம்ம என்று வியந்து பின்னும் பின்னுந் தூக்கிப் பார்த்தான்.

இதற்குளந்தப் போர்க்களத்தில் ஐயோ இளையபெருமாளை இராவண னெடுத்துக்கொண்டு போக உருட்டுகிறான் புரட்டுகிறான் மாருதியெங்கே மாருதியெங்கே யென்றொரு பெரிய ஆரவார முண்டாயது அதனைக் கேட்ட ஆஞ்சனேயர் ஒரே பாய்ச்சலாக இராவணனெதிரே சென்றனர். இவர் வருகையைக் கண்ட இராவணன் இறுமாப்புடன் விலகிநின்றனன்.

இவனெவராலு மிவனை அசைக்கமுடியாது என்று கருதி இறுமாந்தலைக் கண்ட மாருதி இளையபெருமாளையொரு குழந்தையைத் தாய் தூக்குவதுபோலத் தூக்கியெடுத்துக்கொண்டு ஒரே பாய்ச்சலாக முன்நின்ற இடம் போய்ச் சேர்ந்தனர். இதனைக்கண்ட இராவணன் நம்மாலசைக்கவுமுடியாத இலக்ஷுமணனை இந்த அனுமான் எவ்வளவு இலகுவான பொருளாகத் தூக்கிக்கொண் டோடிப் போயினான் இவனை ஒத்த பராக்கிரமசாலிகளு முளரோ வென்று உள்ளுக்குள் ஆஞ்சனேயரை மெச்சினவனாகச் சென்றான் இதனை,

"எடுக்க லுற்றவன் மேனியை யேந்துதகேற்ற
மிடுக்கிலாமையி னிராவணன் வெய்துயிர்ப் புற்றான்
இடுக்கினற்றவம் மாருதி புக்கெடுத் தேந்தித்
தடுக்கலாததோர் விசையினி லெழுந்தயல் சார்ந்தான்."

"தொகவொருங்கிய ஞானமென் றொவரினுந் தூயோன்
தகவுகொண்டதோ ரன்பெனுந் தனித்துணை யல்லால்
அகவுகாதலா லாண்டகை யென்னினு மனுமன்
மகவுகொண்டுபோய் மரம்புகு மந்திரை நிகர்த்தான்."

என்றும் வருவனவற்றானுணர்க.

## உ௰ - வது.

# இராமரோசண பராக்கிரமம்.

---

இந்திரன் முதலதேவ ரிறைஞ்சுதா ளமலன்போரில்
வெந்தரை நிற்றனேக்கி விரைந்தவன் முன்னரெய்தி
எந்தையென் றோளிலார்க வெனவகன் றோளிலேற்றி
மந்தர நாணநின்ற மாருதி சரணம்போற்றி.

(இ-ள்.) தேவேந்திரன் முதலியோர் வணங்குஞ் சரணாரவிந்தங்களை யுடைய தூய்மையாளரான ஸ்ரீராமபிரான் இராவணனேடு செய்யும் போரில் வெவ்விய தரையினிற்றலைக்கண்டு விரைவாக அவரெதிரே சென்று எந்தையே எனது தோளிலேறி யருள்க என்றுகூறி யவரைத் தமது தோளிமேலேற்றி மந்தரமலையு நாணுமாறு நின்ற ஆஞ்சனேயரது திருவடிகட்கு நமஸ்காரம், எ-று

## வி வ ர ம்.

பத்தொன்பதாவது பராக்கிரமத்தி லுரைத்தவண்ணம் இளையபெருமானை விரைந்தெடுத்துக்கொண்டு ஆஞ்சனேயர் சென்றபின்னர் இராவணன் ஆயிரங் குதிரைகளால் இழுக்கப்படுவதும் குடைகொடி சாமரைகளால் விளக்கமானதும் பொன்மயமானதும் மாணிக்க மரகத கோமேதக புஷ்பராக வைடூரிய இந்திர நீலாதி ரத்தின கசிதமானதும் மேருபர்வதம் போல்வதும் வாயுவேக மனோவேகமாகச் செல்லத்தக்கதும் அநேகம சாரதிகளையுடையதும் அதிக விசாலமானதுமான ஒரு பெரிய தேரின்மீது

பேரி காகளாதிகள் முழங்கச் சங்கபடகங்கள் தழங்க மகுட ஆர கேயூர கடக கங்கண கடிசூத்திர அங்கு லீர கண்டையாதி திவ்வியாபரண அலங்கிருதனுய் இருட்டிடை மதியங்காட்டு இருபதுபிறைத் தந்தங்களுடன் முன்னிலும் பின்னிலும் திவ்வியாபரணு லங்கிருதரான அசுரர்கள் மெய்க் காவலர்களாகப் போர்க்கோலத்துடன் வர அதிக கெம்பீரமான தோற்றத்துடன் போருக்கென இராமபிரானெதிரே வந்தகாலத்தில் பெருமாள் இடையிற் கட்டிய மரவுரியுடனும் தலையிற்கட்டிய ஜடாசூடத்துடனும் இரதமுதலிய எவையுமின்றிப் பாதசாரியாய்த் தமது திருமேனியின் காந்தியே பரிவாரமாக விளங்க வெறுந்தரையினிற்பதைக்கண்ட மாருதி பெருமானைப் பண்டுபடியளந்த பரந்தாமனென் றறிந்தவராதலின் இழிந்த இராவணன் மிகவும் உயர்ந்த தேரினின்று பொருதலும் அவனையெதிரியாகக்கொண்டு பொரநின்ற எம்பெருமான் வெறுந்தரையினின்று பொருதலு முண்டானல் ஏழைமானிடனென் றவ்விழிஞன் கருதியதனை யவன் மெய்யென்றன்றோ நினைப்பான் இவ்வெம்பெருமான் இவ்வாறு நிற்றலைக்கண்டு இராவணன் கொண்ட செருக்கினையா னடக்குகின்றேனென்று விரைந்து ஸ்ரீராமபிரானை யடைந்து அண்ணலே தேவரீர் எதிரியான இராவணனெதிரே அவனுயர்ந்த தேரினின்று பொரும் காலத்துத் தரையினிற்ப தடியோங்களுக்குச் சகிக்கக்கூடாத விஷயம் தயைசெய்து அடியேன் றோளின் மீது எழுந்தருள வேண்டுகின்றேன் என்றவுடனே பெருமாள் ஆஞ்சனேயரது பராக்கிரம முழுது முணர்ந்துள்ள

வராதலி னவ்வாறே யென்றனர். செம்மல்கூறிய வம்மொழிகேட்ட நம்மாருதி இராவணன்றன் தேரினுமுயரமுமகலமுமான அகன்ற புயங்களையுடைய மிகவும் பெரிய வுருவினராகித் தாழ்ந்தனர் பெருமாளும் அவர் தோள்கள்மீது திருவடிகளை வைத்துக் கோதண்டமேந்தித் தரையினிற்குமாபோலக் கஷ்டமின்றி நின்றனர்.

ஆஞ்சனேயருடைய புயங்கள் இராமபிரானுக்குப் போர்புரிதற்கு இனி இந்திரனனுப்பும் இரதத்தினும் அதிக சௌகரிய மானவையாகவே விளங்கின. இரதங்கள் உள்ள அளவிலேயே கிடக்கும் அகலவுநீளவுங் குறுகவுமவற்ருலாகா ஆஞ்சனேயர் புயங்கள் எவ்வளவகலவும் வேண்டுமானாலும் அகலும் குறுகவேண்டுமானாலுங் குறுகும் உயரவேண்டுமானாலு முயரும் இவ்வாறதிக சிறப்பமைந்த புயத்தில் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி ஏறி நின்று தமது கோதண்டமென்னும் வில்லினை வளைத்து நாணையிட்டு யுத்தத்துக்கு ஆரம்பித் ததனைக்கண்ட இராவணன் சாரதியை யெச்சரிக்கச் சாரதி அவனுடைய அசுர மாயாசம்பந்தமான அசுவாதிகளையுடைய இரதத்தினைப் பலவிதங்களாகச் சுழற்றி விட்டனன் அங்ஙனம் விட்ட இரதத்தினெதிரே ஆஞ்சனேயரும் விளையாட்டாகவே எதிரேயே எங்குச்சென்ருலுந தாமுமிருந்தனர்.

இவ்விதமான ஆச்சரியச் செயலினைப் பார்த்து ஆதிசேடனும் கருடனும் நாம் பகவானுக்கு வாகனபீடங்களாக இருப்பவர்களாயினும் இம்மாருதிக்குள்ள ஆற்றல்

நமக்கில்லையென்று கருதி நடுங்கினர். அண்டபிண்ட சரா சரங்களை யெல்லாந் தமது குக்ஷியில் வைத்து ரக்ஷிக்கும் பகவானை யேந்தி இரதமாகவும் சாரதியாகவும் அசுவங்க ளாகவும் உள்ளவையின் றொழில்களைத் தாமே செய்யக் கண்ட இராவணாதியர் நடுங்கினர். தேவராதியர் களிப் புற்றனர். இதனை,

"நன்று நன்றென நாயகனேறின னும்ம
குன்றின் மேலிவர் கோளரி யாமெனக்கூறி
அன்றுவானவ ராசிக ளியம்பின ரீன்ற
கன்றுதாங்கிய தாயென மாருதி களித்தான்."

'மேருவின் சிகரம்போன்ற தென்னினும் வெளிறுண்டனமான்
பரிதேரண்ட மெல்லாம் வயிற்றிடை முன்னங்கொண்ட
சூரியற் கனேகமார்க்கத் தாலிடம் வலமதாகச்
சாரியை திரியலான மாருதிதருமப் பொற்றோள்."

"இம்பரானெனின் விசும்பின னருமோ ரிமைப்பின்
தும்பைசூடிய விராவணன் முகந்தொறுந் தோன்றும்
வெம்பு வஞ்சகர் விழிதொறு மேவினனின்றான்
அம்பின்முன் செலுமனத்தின் முன்செலு மனுமன்."

என்னு மிவைகளாலுணர்க.

---

## உக - வது.

# சூலபேதன பராக்கிரமம்.

---

ஞாலத்தைப் பெயர்த்துக் கோட்டி னடுவிடத் தாக்கிநின்ற
கோலத்தை யனையகும்ப கருணனுங் கொடியோன் விட்ட
ஆலத்தை நிகர்த்ததாகி யமரரை யலைத்த பொல்லாச்
சூலத்தைத் தகர்த்த வண்மைசுந்தர னடிகள்போற்றி.

(இ-ள்.) கடனடுவின் மறைந்த பூமியைத் தந்தத்தினடு விலமைத் தெடுத்துநின்ற வராகமூர்த்தியையொத்த கும்ப கருணனென்னுங் கொடியவன் விடுத்த வாலகாலத்தை யொத்ததாகிப் பண்டுதேவரை வருத்தியதான கொடிய சூலத்தைப் பிடித்தொடித் தெறிந்த ஆஞ்சனேயரது திருவடிகட்கு நமஸ்காரம், எ-று.

## இதன் வரலாறு.

இலங்கையிற் சீதா பிராட்டியினிமித்தம் வானரவீரருக்கும் இராவணனுக்கும் போர்நடந்து இராமபிரானால் இராவணன் வலியிழந்து இலங்கையிற் புகுந்து நித்திரையிற்கிடந்த கும்பகருணனை யானை முதலியவைகளை விட்டு மிதிப்பித்தெழுப்பி அவனுக்கு யானை குதிரை யாடு பன்றி முதலிய விலங்குகளின் ஊன்முதலியவைகளுடன் மலைமலையாகக் குவிக்கப்பட்ட அன்னராசிகளையும் பலவகையான சாராயங்களையுங் கொடுத் துண்பித்துச் சந்தனமுதலிய பூசித் துப் பூல முதலியவளித்துச் சந்தோஷப்படுத்தித்

தானே மகுடஞ்சூட்டியும் கவசமணிந்தும் கச்சைகட்டியும் பிற ஆபரணங்களால் அலங்கரித்தும் உல்லாசப்படுத்தி ஆனைகளாயிரங் குதிரைகளாயிரம் பேய்களாயிரமாக இழுக்கும் பெரிய தேரிலேற்றிப் பேரிபடக முதலிய வாத்திய முழக்கத்துடன் இராமபிரானை வெல்லுமாறு அனுப்ப மலையைபெயர்ந்து வருமலைபோல விரைவாகப் போர்க்களமெய்தி அசுரசேனைகளை வானரர்கள்மீ தேவித் தானுமஸ்திரப் பிரயோகஞ்செய்தும் தேரினினின் றிறங்கி முசலத்தா லடித்தும் பெரும்போர் புரிந்தகாலத்து வானர ராஜனை சுக்கிரீவன் அந்தக் கும்பகர்ணனை டெதிர்த்து மலைகளாற் பெரும்போர் புரிந்தனன். சுக்கிரீவனெடுத்தெறியு மலைகளையெல்லாங் கும்பகர்ணன் பொடிபொடியாகத் தகர்த்துக் கடைசியாக விடுத்தவொரு பெருமலையைக் கையாற்பிடித்துப் பிசைந்து பொடிபொடியாக்கி யுதிர்த்து மிக்க கோபத்துடன் எவராலுந்தடுக்கவும் எடுக்கவும் விடுக்கவுமுடியாத பெரிய சூலமொன்றைத்தான் முன்னந்தவஞ் செய்தகாலத்துப் பெற்றுள்ளதனை யெடுத்துச் சுக்கிரீவன் மீது விடுத்தனன். அதுகண்ட வானரர்களும் பிறருஞ் சுக்கிரீவமகாராச னிறந்தான் இறந்தானென்று கூவினார்கள். உருத்திரன் கைச்சூலம்போன்ற அச்சூலமானது அவன் கையினின்றும் அந்தரத்தி லெழும்பி அக்கினிச்சுவாலை வீசிக்கொண்டு சுக்கிரீவனை நாடிவந்தது அதனைக்கண்ட ஆஞ்சநேயர் உடுக்கை யிழந்தவன் கைபோல விரைந்து ஓரே பாய்ச்சலாகப் பாய்ந்து அந்தச் சூலத்தினை ஒருகையினாற் பிடித்து இருதுணியாக ஒடித்துவீசிக் கீழே யெறிந்

கனர் அதுகண்ட ஆதித்தியர் வசுக்கள் அசுவனி தேவர் உருத்திரர் முதலிய தேவர்களும் சாம்பன் நீலன் நளன் குமுதன் பனசன் கேசரி முதலிய தேவர்களும் வானர வீரர்களும் ஆரவாரஞ்செய்து ஆஞ்சனேயரை வாழ்த்தினர். எனக்கிணை யெவருமின்றென விறுமாப்புடன் நின்று பெரும்போர் புரிந்த மஹாவீரனை கும்பகருணனும் ஆஞ்சனேயரைப் பார்த்து வீரனே நின்னையொத்தவர்களிருக்கும் பக்கத்தினர் வெல்லுதற் கென்னதடை நீயே பராக்கிரமசாலியெனப் பலவாறு கொண்டாடினன். இதனை,

"நிருதனுமனையவ னிலைமைநோக்கியே
கருதவுமியம்பவு மரிதுன்கைவலி
அரியனமுடிப்பதற் கனைத்துநாட்டினும்
ஒருதனியுளையிதற் குவமம்யாதென்றான்" என்பதனுலுணர்க

## ௨௨ - வது
# தேவாந்தக சங்கார பராக்கிரமம்.

பூவாரகழி பொலியிலங்கைப் புறத்திலரிக டம்முடனே
மேவாவரக்கர் குலஞ்செகுப்ப மேவுஞான்று மிடுக்குடனே
மாவாரணங்கடமை நடத்தி மதர்த்துப்பொருத கொடியோனாந்
தேவாந்தகனைச் சவட்டியுயிர் செகுத்தவனுமன் கழல்போற்றி.

(இ-ள்.) நீர்ப்பூக்கணிறைந்த வகழிகளுடன் விளங்கு மிலங்கைநகரின் வெளிப்புறத்தில் வானர சேனைகளுட னெய்தி நகரை வளைந்துப் பொராநின்ற காலத்தில் இருமாப் புடனே மிக்க யானைப்படைகளை நடத்திவந்து திமிருடன் சண்டைசெய்த கொடியவனான தேவாந்தகனென்பவனை யெதிர்த்துப் பொருதவனுயிரைத் தொலைத்த ஸ்ரீ அஞ்சன நந்தனது திருவடிகட்கு நமஸ்காரம். எ-று.

## இதன் வரலாறு.

அதிகாயனென்னு மசுராதிபனுக்குச சகோதரனும் யானைப்போர் நடத்துவதி லதிசமர்த்தனும் தேவர்கட்கெ மன்போல்பவனாதலால் தேவாந்தகனென்று பெயர்பெற்ற வனுமான அசுரவீரன் இலங்கையின் தென்புறத்தில் சீதா பிராட்டியைச் சிறைமீட்டும் பொருட்டு வந்திருந்த வானர வீரர்களை யெதிர்த்துப் போர்புரிந்தனன் அவன் அவ்வா றனேகம யானைப்படைகளுடன் வந்து வானரவீரர்களை வாட்டுதலைக் கண்ட வீராதிவீரரான ஆஞ்சனேயர் கடுங் கோபத்துடன் அவ்வியானைப் படையின் நடுவுட்பாய்ந்து அவைகளை,

"கருங்கார்புரை நெடுங்கையன களியானைக ளவைசென்
றொருங்காயின வுயிர்மாய்ந்தன பிறிதென் பலவுரையால்
வருங்காலமும் பெரும்பூதமு மழைமேகமு முடனுய்ப்
பொருங்காலையின் மலைமேல்விடு முருமேறெனப் புடைத்தான்."

"மிதியாற்பல விசையாற்பல மிடலாற்பல விடறும்
கதியாற்பல காலாற்பல வாலாற்பல வாலின்
நுதியாற்பல நுதலாற்பல நொடியாற்பல பயிலும்
குதியாற்பல குமையாற்பல கொன்றானற நின்றான்."

என்றபடி உதையாலுங் குத்தாலு மிதியாலு மடியாலும் இடியாலும் யானைகளை யெல்லாம் நஞ்சனைகளாகச் சங்கரித்து நின்றனர் பின்னுந் தேவாந்தகன் கடுங்கோபத்துடன் அனேகமாயிரம் யானைகளை ஆஞ்சனேயர்மீ தேவினான் அவைகளைக்கண்ட மாருதி மிக்கவீரத்துடன்,

"பறித்தான்சில பகிர்ந்தான்சில வகிர்ந்தான்சில பனைபோல்
இறுத்தான்சில விடந்தானசில பிளந்தான்சில வெயிற்றால்
கறித்தான்சில கவர்ந்தானசில கடித்தான்சில பிடித்தான்
முறித்தான்சில திறத்தானையின் நெடுங்கோடுகண் முனிந்தான்."

"வாரிக்குரை கடலிற்புக விலகுந்நெடு மரத்தால்
சாரித்தலைத் துருட்டுந்நெடுந் தலத்திற்படுத் தரைக்கும்
பாரிற்பிடித் தடிக்குங்குடர் பறிக்கும் படர்விசும்பின்
ஊரிற்செல வெறியும்மிதித் துழக்கும் முகத்துதைக்கும்."

"வாலால்வர வளைக்குந்நெடு மலைப்பாம்பென வளையா
மேலாரொடு பிசையும்முழு மலைமேற்செல விலக்கும்
ஆலாலமுண் டவனேயென வகல்வாயினிட் டடக்கும்
தோலாயிரமிமைப்போதினி லரியேறெனத் தொலைக்கும்."

"சைய்யத்திணு முயர்வுற்றன தறுகட்களி பதமா
நொய்திற்கடி தெதிருற்றன நூறுயிர மாறு
மையற்கரி யுகிரிற்சில குழையுக்குரு மறையத்
தொய்யற்பட ரழுவக்கொழுஞ் சேனுயுகத் துகைப்பான்."

என்றபடி பின்வந்த யானைப்படையிற் சிலவற்றின் கொம்புகளைப் பறித்தும் சிலவற்றைப் பிளந்தும் சிலவற்றை வகிர்ந்தும், சிலவற்றை மரக்கிளையை யொடிப்பது போல வொடித்தும், சிலவற்றையிடந்தும், சிலவற்றைப் பிளந்தும், சிலவற்றைப் பற்களாற் கடித்தும், சிலவற்றைக் கடித்தும், சிலவற்றைப் பிடித்தும், சிலவற்றை முறித்தும், சிலவற்றைக்கடலுள் விழவெறிந்தும், சிலவற்றைப் பெரிய மரத்தால் மோதியடித்தும், சிலவற்றைத் தரையிலிட்டுத் தேய்த்தும், சிலவற்றை வாரிபெடுத்துத் தரையிலடித்தும், சிலவற்றைக் குடரைப் பறித்தும், சிலவற்றை விண்ணிற் புகவெறிந்தும், சிலவற்றை மிதித்துருட்டியும், சிலவற்றை முகத்திலுதைத்தும், சிலவற்றை வாலால்வளைத்து மலைப் பாம்பெனச்சுற்றி மேலாக ஒரு விசையிற் பிசைந்தும், சிலவற்றைப்பெரியமலைமீது சென்றுவிழவெறிந்தும்,சிலவற்றை யாலால முண்டவனைப்போல பெரிய வாயிலிட்டடுக்கியும் கொன்று எங்கும் யானைக்குருதியும் பிணமுநிரம்பிக் கிடக்குமாறு செய்தனர். அதுகண்ட கொடியோனுன தேவாந்தகன் வெகு விரைவாகத் தனது தேருடன் ஆஞ்சனேய ரெதிரேயெய்தி வீரகர்ச்சனை செய்து வில்லை வளைத்து நாணேறிட்டுக் குணத்தொனி காட்டி அநேகம் அம்புகளை ஆஞ்சனேயர் மீதுவிடுத் தாரவாரித்தனன் அதுகண்ட

ஆஞ்சனேயரு மதிககோபத்துடன் அவன்மீது சென்று படும்படி ஒரு பெரிய மரத்தினைப் பிடுங்கி யெறிந்தனர் அதனையவன் அம்புகளால் நாசஞ்செய்து பின்னும் பின்னும் அம்புகளைத்தொடுத்தான் உடனே ஆஞ்சனேயர் ஒரு பெரிய மலையைப்பிடுங்கி யவன்மீதெறிந்தனர் அவன் அதனையுந் துண்டுதுண்டாக உடைத்தெறிந்தனன். உடனே ஆஞ்சனேயர் அவனையொரு பொருட் படுத்தாதவன் தேரிற பாய்ந்து அவன் கைவில்லைப் பிடுங்கி அனேகந் துண்டுகளாக வொடித்தெறிந்து கர்ச்சித்தனர். உடனே யவனொரு தோமராயுதமெடுத் திவர்மீதுவிடுத்தனன அது வந்து ஆஞ்சனேயர திடத்தோளிற்பட்டது அத்தோமரத்தினை வலக்கையாற் பிடித்து தேவாந்தக னேறிவந்த தேரினையும் சாரதியையுங் குதிரைகளையு மடித்து நாசஞ்செய்தனர். தேர்முதலிய நாசஞ்செய்யப் பட்டவுடன் தேவாந்தகனொரு சூலாயுதத்தினை யெடுத்தனன் சூலாயுதமெடுத்தவுடனே ஆஞசனேயர் விரைந்து அவனெதிரே சென்று கடுங்கோபத்துடன் அவன் கன்னத்திலறைந்தனர். அவ்வறைபட்டுத் தேவாந்தகன்.

"சூலப்படை தொடுவான்றனை யிமையாதமுன் றொடர்ந்தான்
ஆலத்தினும் வலியானும்வர் தெதிரேபுகுந் தடர்த்தான்
காலற்கிரு கண்ணுன்றன கையாலிருந் தய்ப்பின்
மூலத்திடை புடைத்தானுயிர் முடிந்தான்சிர மடிந்தான்."

என்றபடி இறந்துபட்டனன் அதுகண்ட தேவர்கள் மகிழ்ச்சியுற்றனர்.

## உ௩ - வது.

# திரிசிரத்வம்ச பராக்கிரமம்.

---

பைத்தலை யரவந்தாங்கும் பார்முத லுலகமெல்லா
மெய்த்தலைந் திடுமாசெய்த விராவண னகனித்தார்ந்த
முத்தலை யரக்கன்றன்னை முனிந்தழித் திட்டவீர
சித்தனை யனுமன்றன்னைச் சிந்தனை செய்துவாழ்வாம்.

(இ-ள்) விடப்பையினையுடைய வாவந்தாங்கும் பூமிமுதலிய வுலகமனைத்தும் இளைப்புற்று வருந்தும் வண்ணங்கேடுசெய்த விராவண சைநியத்தொருவனாய் மூன்றுசிரங்களை யுடையனாதலாற் றிரிசிரனென்று பெயருடையனாய் நின்றபொருத அசுரனைச் சீற்றத்துடனேயற்றழித்த வீரசிந்தையினையுடைய ஆஞ்சநேயனை நினைந்து வாழ்வோமாக. எ - று.

## இதன் விவரம்.

இருபத்திரண்டாவது பராக்கிரமத்தி லுரைத்தாங்கு தேவாந்தகனைக் கனனத்திலடித்து ஆஞ்சநேயர் கொன்றவுடன அதிக கோபத்துடன் அதிகாயனென்பவனும் திரிசிரனென்பவனுமாக வந்து ஆஞ்சநேயருடனெதிர்த்துப் பெருஞ்சமர் புரிந்தனர் அங்ஙனஞ் சமர்புரிந்தவர்களில் திரிசிரனென்பவனை யாஞ்சநேயர் காலாலொரு வுதையுதைத்துக் கீழேதள்ளி யவன்றலையை மிதித்து நசுக்கியுடைத்தவனை,

“ஆமாமெனத் தலைமூன்றுடை யவனார்த்தவன் கடர்த்தான்
கோமான்றனிப் பெருந்தூதனு மெதிரேசமர் கொடுத்தான்
காமாண்டவர் கல்லாதவர் வல்லீரெனக் கூறு
காமாண்ட னாயனின்றுற நடுவேபுக நடந்தான்.”

“தேர்மேற்செலக் குதித்தான்றிரி சிரத்தோனையோர் திறத்தால்
கார்மேற்றுயில் மலைபோலியை கரத்தாற் பிடித்தெடுத்தான்
பார்மேற்படுத் தரைத்தானவர் பழிமேற்படப் படுத்தான்
போர்மேற்றிசை நெடுவாயிலி லுளதாமெனப் போனான்.”

என்றபடி வதைத்தனர். அதுகண்ட தேவர்கள் ஆரவாரஞ் செய்தனர். அதிகாயன் இவரோடு பொராம லஞ்சி வேறிடம் புக்கனன்

---

## ௭௪ - வது.

# நிகும்பசங்கார பராக்கிரமம்.

---

தகும்பரிசிதுவே யென்னத் தருநிழ லரசமன்னன்
மிகும்பரி சனத்தினோரும் மேனிலத் தூற்றுவாழ்த்த
இகும்படி வேலொன்றேவி யிளையனோ டெதிர்த்தபொல்லா
நிகும்பனை வதைத்தவைய னினைவினால் வினைகமர்வாம்,

(இ-ள்.) இவனுக்கிதுவே சரியானதெனக் கற்பகிழலரச னை இந்திரனு மவனுடைய பரிசனங்களான தேவர்களும் வாழ்த்தும் வண்ணம் இளைய அங்கதன்மீது சூலவேலினை விடுத்துப் போர்புரிந்த கொடியவனை பொல்லாத நிகும்ப னைக்கொன்ற ஆஞ்சநேயரைத் தியானித்துப் பாவங்களை நீக்கிக் கொள்ளுவோமாக, எ-று.

### விவரம்.

நிகும்பனென்னும் பெயரினையுடைய அரக்கன் அங் கதனென்னும் வானரராஜ குமாரனோடு பொருது அவ னைக் கொல்லக் கருதித் தெய்வீகம் வாய்ந்த ஒரு சூலத் தினை யெடுத்தனன். அதனை யாஞ்சனேயர் கண்டு தம திளவரசனுக் குண்டாகுந் தீங்கைநீக்க கருதி விரைந்து அந்நிகும்பனெதிரே சென்றவன் கையிலிருந்த சூலத்தி னைப் பிடுங்கி அநேகஞ் சுக்கலாக வொடித்தெறிந்து,

"தடையேதுமில் சூலமுனிந்து சலத்தால்
விடையேநிக ரங்கதன்மேல்விடு வீரனை
இடையேதடை கொண்டதனோட விழுங்கைப்
புடையேகொடு கொன்றடன் மாருதிபோனான்."

என்றபடி அவனை ஒரேகுத்தினாற் கொன்றனர். இத னைக்கண்டு தேவர் முதலியவர்கள் மகிழ்ச்சியுற்றனர்.

## உடு - வது.

# தூமாக்ஷசங்கார பராக்கிரமம்.

---

நெடியமேருமலை நாணநீண்ட வைய்ய மீதாகிக்
கடியபெரும் போர்புரிதூமக் கண்ணன்மடிய வமர்செய்த
படியிலழகார் திருமேனிப் பாமவனும னதுசெய்ய
வடிகடம்மை முடிமேலா வமைத்தக்கலியை யகல்வோமால்.

(இ-ள்.) உயர்ந்த மேருமலையு நாணும்வண்ணம் உயர்வு பொருந்திய தேரின்மீதேறி வந்து கடுமையாகப் பெரிய போர்புரிந்த தூமாட்சன் இறந்தொழியுமாறு போர்செய்த ஒப்பற்ற வழகிய திருமேனியினையுடைய சிறந்த ஆஞ்சனேயரது திருவடிகளைச் சிரசிற்றுங்கி வறுமையை யொழிப் போமாக. எ-று.

## விவரம்.

கொடிய செயலனைத்துந் தனதாகவுடைய விராவணனுடைய சிறந்த சேனாபதிகளி லொருவனும் தேவர் முனிவர் முதலிய சாதுக்களுக்கதிக தீங்கிழைப்பவனும், தூமாக்ஷனென்னும் பெயருள்ளவனுமான ராக்ஷஸவீரன் ராவணனு லேவப்பட்டு ராமச்சந்திரமூர்த்திக்கு விரோதியாகிச் சதுரங்க சைனியங்களுடன் போர்க்களமெய்தி வானரவீரர்களுடன் போர்புரிந்த காலத்து ஆஞ்சனேயர் கடுங்கோபத்துடன் அவனெதிரே சென்று வீரகர்ச்சனை செய்து அவனுடைய சதுரங்க சைனியங்களையும் அடித்

தும் உதைத்தும் மிதித்தும் வதைத்தனர். அதுகண்ட தூமராக்ஷன் கடுங்கோபத்துடன் தன்தேருடன் ஆஞ்சனேயரை எதிர்த்து மலைபோன்ற வில்லினை இளம்பிறைபோல் வளைத்து மலைபாம்பு போன்ற நாணியை ஒழுங்குறப் பிணித்து விரனுதியால்தெறித்து நாணொசைகண்டு அர்த்த சந்திரம் பதுமட்நாராசம் கங்கபத்திரம் சூசிமுகம் முதலிய கூரிய சீரிய அம்புகளை விடுத்துப் போர்புரிந்தனன். அங்ஙனம் போர்புரிந்தவனை ஆஞ்சனேயர் கிட்டி அவனேறிய தேரை யுதைத்துடைத்து அவனைக் கீழேதள்ளி,

"மலையிற் பெரியா னுடல்மண் ணிடையிற்
கெலறக்கடரு வியகால் கொடுதைத்
தலையிற்பருகிப் பருவா யனல்கால்
தலையைக் கொடெறிந்து தனிந்தனனால்."

என்றபடி அவன் தலையைக் கையாற்றிருகி யெறிந்து நர்த்தித்தனர். தேவாராரவாரஞ் செய்தனர்.

---

உ௯ - வது.

## அகம்பத்துவம்ச பராக்கிரமம்.

*கறையடிக் களிநல்யானைக் கணத்துடன் காற்றின்வேக*
*நிறையடிப் பரிமாவெள்ள நிரையுறத் தமுலங்காட்டும்*
*பறையடித் தமர்க்குநேர்ந்த பதகனை யகம்பனென்னும்*
*பிறையெயிற் றவனைச்சாய்த்த வனுமனைப் பேணிவாழ்வாம்.*

(இ-ள்.) உரலனைய காலினவான களிப்பினையுடைய நல்ல யானைக் கூட்டத்துடன் வாயுவேகம்போலும் விரைவினையுடைய கால்களோடுங்கூடின குதிரைப்படைகளும் உடன் வராநிற்ப ஆரவாரத்தினையுடைய பேரிகையாதிய முழங்க வமர்க்களத்தெய்திப் போர்புரிந்த பிறைபோலுந் தந்தங்களையுடைய அகம்பனென்பவனை வதைத்த ஆஞ்சனேயரை யடைந்து வாழ்வோமாக. எ-று

### விவரம்.

தேவசேனாபதியாற் பண்டு தொலைக்கப்பெற்ற தாருகனென்பவனே மீட்டும் பிறந்து இராவண சேனாபதியாய் வந்தானோ? என்றெண்ணத்தக்க கொடியோனும் ஆயிரங் கோவேறு கழுதைகளைப் பூட்டிய தேரினையுடையவனும் ரதகசதுரகபதாதி யென்னுஞ் சதுரங்க சைனியங்களையுடையவனும் மலைசலிக்கினு நிலைசலியாத வீரனுமான அகம்பன் என்னுமசுரன் ராவணனுடைய தூண்டுதலால் வானர வீரர்களை நாசஞ்செய்யக் கருதி பேரிமத்தள காகளாதி வாத்திய கோஷத்துடன் ரணகளமடைந்து,

'யான்றடே னென்னின்மற்றிவ் வெழுதிரை வளாகமென்னும்
வான்றடா தரக்கரென்னும் பெயரையு மாய்க்குமென்று
ஊன்றடா நின்றவாளி மழைதூரந் தூருந்துச்சென்றான்
மின்றொடா நின்றதிண்டோ ளனுமனும் விரைவின்வந்தான்.''

என்றபடி அகம்பன் ரணக்களமடைந்து யானிவ்வா னரவீரரை யடக்காவிட்டா லின்னோர் நம்மினத்தின ரனை வரையுங் கொன்று குவிப்பரென்று வீராட்டகாசஞ் செய் துவருதலைக்கண்டு ஆஞ்சனேயர்,

"தேரொடு களிறுமாவு மரக்கரு நெருக்கித்தெற்றிக்
காரொடு கனலுங்காலுங் கிளர்ந்ததோர் காலமென்ன
வாரொடுதொடர்ந்த பைம்பொற் கழலினன் வருதலோடுஞ்
சூரொடு டெ ...ர்ந்ததண்டைச் சுழற்றினன் வயிரத்தோளான்."

"எற்றின வெறிந்தவெல்லை யெய்தின வெய்தபெய்த
முற்றின படைகள்யாவு முறைமுறை முனிந் துமிந்தச்
சுற்றின வயிரத்தண்டாற் றுகைத்தன னமரர் துள்ளக்
கற்றில னின்றுகற்றான் கதையினுல் வதையின்கல்வி."

என்றபடி தம்மை யெதிர்த்த அசுரவீரர்கள் விடுத்த வேல் வாள் அம்பு முதலிய ஆயுதங்களும் நெருங்கிவந்த ரதங்களும் யானைகளும் குதிரைகளும் காலாட்படைகளும் நாசமுறும் வண்ணம் ஒருபெரிய தண்டத்தினை யெடுத்துச் சுழற்றியடித்துக் கொன்றனர்.

அன்றியும் பத்துக்கோடி யானைகளையும் அத்தொ கைக் குதிரைப்படைகளையும் அத்தொகைத் தேர்களையும்

ஒரு கணப்பொழுதாக்குள் அடித்து நாசஞ்செய்து இனிப் போரேயில்லையென்று கூறுமாறு செய்தனர்.

இதுகண்ட அகம்பரவருளள்ள அகம்பன் தனது பில மனைய வாயை யதுக்கித் தனது தேரைச் செலுத்திக் கொண்டு ஆஞ்சனேய நெதிரே சென்று வருஷைகாலமேகமு நாணுமாறு கர்ச்சனை செய்து தனது வில்லினை வளைத்து நாணியேற்றி ஆஞ்சநேயர்மீது.

"சொரிந்தன பசுழிமாரி தோளினு மார்பின்மேலும
தெரிந்தன வசனிபோல்வ செறிபொறி பிதிர்வதிக்கின்
வரிந்தன வெருவைமானச் சிறைகளா லமரர்மார்பை
வரிந்தன வடிம்புபொன்கொண் டமைந்தன வாகுங்கண்ணே."

என்றபடி கூரிய விறகினையுடைய சிறந்த அம்புகளை விடுத்துப் பொருதனன். இங்ஙனம்பொருத அகம்பனது கழுதைபூண்ட தேருஞ் சாரதியு மழிந்தொழியத் தண்டினு லடித்து நாசஞ்செய்துநின்றனர். அதனைக்கண்ட அகம்ப னொரு பெரிய தண்டமொன்றைக் கையினுலெடுத்துக் கொண்டு இவனையித் தண்டினுலடித்துக் கொன்று பணி தரை வெறியராக்கி ராவணனை வெற்றியுடையவனுகச் செய்கின்றேனென்று ஆரவாரஞ்செய்து வருதலைக்கண்ட மாருதி விரைந்தவனெதிரே சென்று தண்டினுன் மோதி யவனையடிக்க வவனிவரை யடிக்க இருவருஞ் சிறந்த பெ ரும்போரினை நெடுநேரஞ்செய்து கடைசியாக ஆஞ்சனே யர் அகம்பனது தண்டினையுந் தண்டேந்திய கையினையும்

ஒடித்துக் கீழேதள்ளினார். ஒருகையிழந்த அகம்பனிடி யிடித்தாற்போல மாருதியின் மார்பின்மோதி யடித்தனன். அவ்வடியேற்ற ஆஞ்சனேயர் இவன் இடக்கையி லடித்தா னிவனை நாம் தண்டத்தாலும் வலக்கையாலும் அடிப்பது சரியல்லவென்று,

"அடித்தவன் றன்னைநோக்கி யசனியே றனையதண்டு
பிடித்துநின் றேயுமென்றான் வெறுங்கையாற் பிழையிற்றன்னு
மடித்துவா யிடத்தகையான் மார்பிடைக் குத்தவாயால்
குடித்துநின் றுமிழ்வாளென்னக் கக்கினன் குருதிக்கொள்ளை."

என்றபடி தமதிடக்கையா லவன்மார்பிலொரு குத் துக்குத்தினர் அக்குத்துடனவன் இரத்தம் கக்கிக்கொண்டு கீழ்வீழ்ந் திறந்தனன் இவனிறந்ததனைக் கண்ட தேவர் கள் ஆஞ்சனேயரைப் புகழ்ந்து கொண்டாடினர்.

## ௨௭-வது.

# சகஸ்த்ரகோடி ராக்ஷஸத்வம்ச பராக்கிரமம்.

---

*இரைக்குங்கடலி னொருபுறமா யிலங்கு மருந்து மலைதன்னைப்*
*புரக்குமவரில் வந்தெதிர்த்த பொல்லாக்கொடிய பாதகரா*
*மரக்க ரறுப தாயிரங் கோடி பேரைத் தலையட்ட*
*குரக்குச்சீயந் தனையுள்ளிற் கொண்டவெனக்கோர் குறையென்றால்.*

(இ-ள்.) அலையொலி மலிந்த நெடுங்கடலி னொருபுறத்த தாய் விளங்கிய மருந்துமலையைத் தாங்குமவரைப்போல வந்தெதிர்த்த கொடிய பொல்லாத பாவிகளான அரக்க ராறுபதினாயிரங் கோடிப் பேர்களையும் அடித்து முதைத் தும் கொன்ற வானரசிங்கமான ஆஞ்சநேயராகிய திருவு ருவை யுள்ளத்திற் கொண்டுள்ள எனக்கொரு குறையுமின் றென்பதாம், எ-று.

## விவரம்.

இராவணன் மகனை இந்திரசித்தென்பவன் பிரம தேவனிடம் பெற்றுள்ள வரத்தின் திமிரினால் பிரமாஸ் திரத்தையெடுத்து தன்னுடன் பொருத இளையபெருமாள் முதலியவர்கள்மீது விடுத்தனன். அதனால் அங்கிருந்த இளையபெருமாள் வானரவீரர் முதலியவர்கள் பிராண னில்லாதவர்களாகிக் கிடந்தனர் அவர்களை உயிர்ப்பிக்கும் வண்ணம் சஞ்சீவியென்னு மருந்தினைக் கொண்டுவரும்

வண்ணம் கரடிவீரனை சாம்பவனும் அசுரவீரனை விபீஷணனும் ஆஞ்சனேயரை வேண்டியனுப்ப அவரும் ராமநாமஸ்மரணையுடன் இருதோள்களையுஞ் சுருக்கி நிமிர்த்து மண்டியிட்டுமேலெழுந்து மேகமண்டலமாதிகளைக் கடந்து வடதிசை நோக்கிச்சென்று சாம்பவன் கூறிய இடத்தினையடைந்து அருமருந்து மலையையெடுக்கத் தொடங்கிய காலத்தி லறுபதாயிரங்கோடி அசுரர்கள் ஒரு கூட்டமாக எய்தி ஆஞ்சனேயரைத் தடுத்து அவராலுயிர்தயுண் டிறந்தனர். இதனை,

புயல்வாய்கிழிக்குந் தடங்குடுமி மால்வரைப்புத்
 தோளெழுந் திறைஞ்சிப்
பொருள்வினவ வந்ததன் கருமநுதலிக்குறை
 புகன்றத னெடுஞ்சாரலிற்
செயல்வாய்க் கடுங்கணையரக்கரறு பதினாயிரங்
 கோடிதனையு நூறித்
திண்புய வரைக்குளம் மணிவரையை
 யேந்தித் திரும்பி.''

என்னும் இதனாலுணர்க.

---

உஅ - வது.

## காலநேமிகண்டன பராக்கிரமர்.

கோலமருத்து மலைகொண்டு போமான்குறித்த காலத்து
நீலநேமி யெனுமுருவை நிறுத்திமுனிவ னெனநின்ற
காலநேமி யெனுநகொடிய கசடன்றன்னை யுதைத்தழித்த
சீலவனும வடிமலரைச் சிந்தையகத்துஞ் சேர்த்துமால்.

(இ-ள்.) அழகிய மருத்துமலையை யெடுத்துச் செல்வான்சென்றகாலத்து நீலமலைபோன்ற வுருவினைமறைத்து மாயமுனி யுருவங்கொண்டு நின்ற காலநேமியெனுங் கொடிய கசடனை யுதைத்துக் கொன்ற நல்லொழுக்கத்தினையுடைய ஆஞ்சநேயரது திருவடிமலர்களைத் தலையிலுமுள்ளத்து மமைத்துப் போற்றுவோமாக, என்றவாறு.

விரம்.

ஜானகிப் பிராட்டியின் நிமித்தமாக நிகழ்ந்த போரில் தனது புத்திர மித்திராதியரை இழந்த ராவணன் கடுங் கோபத்துடன் தனதுமூலபல சைனியத்தினை அனேகமாயிரம் தூதர்களை யனுப்பி யழைப்பித்தனன அழைப்பிக்க வந்த ஆற்றலுந் தோற்றமுமுடைய அவ்வசுர சேனைகளுடன் போர்க்களமெய்திப் பொருதகாலத்து பெருமாள் மோகனாஸ்திரத்தின லவர்களை யெளிதின் மடித்தருளக் கண்டு பின்னுங் கடுங்கோபங்கொண்ட ராவணன் போர்க் கோலத்துடன் ரணகளம் புகுந்து லக்ஷ்மணப் பெருமாளோடு போர்புரிதலும் அவர் அவன்விடுத்த நூற்றுப்பத்து

னாறுயிரங் கணைகளையும் நொடியில் ஏற்றழித் தாரவாரித் தலும் ராவணன் மனதினுள் இவன் தன் தமையனுன ராமனிலும் போரிற் சிறந்தவனுக இருக்கின்றனிவனே மோகனுஸ்திரம் விடுத்தழித்துமென அதனையெடுத்து விடுத்தனன் அது மிக்கவேகமாய்த் தனதாற்றலைக் காட்டிக் கொண்டு வருதலைக்கண்ட விபீஷணர் இதுமிகவுங் கொடிய மோகனுஸ்திரம் இதனை நாராயணுஸ்திரம் விடுத்தழித்தீர் என்று கூறுதலும் இளையபெருமாள் அவ்வாறே செய்தனர் அதனுல் மோகனுஸ்திரமானது தனது வீரங்குன்றி அழிந்தது.

அதுகண்ட ராவணன் குலத்துக்குக் கேடாகநின்ற கோடாலிக் காம்பைப்போல இவன் நமக்குப் பகையாளனுக எதிரிபக்கத்திலிருந்து சமயோசிதமாக அசுரதந்திரங் களையுரைக்கின்றுன் இவனைக் கொன்று தொலைத்தாலன்றி நமக்கு வெற்றியுண்டாகாது என்று விபீஷணரைக் கொல்லக்கருதி அதிக கோபத்துடன பாரியதும் மயன் கொடுத்ததும் எத்தகைய அஸ்திரங்களாலுந் தடுக்கமுடியாததும் மகா வீரியமானதுமான வேற்படையை யெடுத்து விடுத்தனன் அது வானிற்சுழன்று விபீஷணரைநாடி வருவதனைக் கண்ட விபீஷணர் இளையாழ்வாரான லட்சுமணரைப் பார்த்து அண்ணலே! இதோவருகின்ற வேலானது,

> "விட்டபோதினி ஞெருவனை வீட்டியேமீளும்
> பட்டபோதவ னுன்முகனையினும் படுக்கும்
> வட்டவேல்."

என்னைக் குறித்து ராவணன் விடுத்திருக்கின்றான் என்றனர். அதுகேட்ட லட்சுமணர் அவ்வேலினை அநேகம் அம்புகளாலும் அநேகம் அஸ்திரங்களாலுந் தடுத்துப் பார்த்தனர். தடுத்தும்,

"எய்தவாளியும் எயின படைக்கலம் யாவும்
செய்தமாதவத் தொருவனைச் சிறுதொழிற் றீயோன்
வைதவை வினிலொழிந்தன."

என்றபடி நிட்பிரயோசனமாகி யொழிந்தன. அதுகண்ட இளையபெருமாள் தமது மனதினுள் யான் இதனா லிறப்பெய்யினும் அடைக்கலம் புக்காரைக் காத்தபுகழ் நிற்கும் என்று விபீஷணைமீது அவ்வேல் படாதபடி விரைந்து பாய்ந்து வேலினைத் தம்மார்பின் மேலேற்றனர் ஏற்று தனுவுயிரிழந்தனர் அதுகண்ட விபீஷணர் ஒரு கணத்தினால் ராவணனுடைய ரதாசுவ சாரதிகளை நாசஞ் செய்தனர். ராவணனும் பகைவனிறந்தனனென்னுந் துணிபினால் விபீஷணரைக் கொல்லமுயலாது தன்னரண்மனை சென்றான்.

பின்னர் விபீஷணாதியனைவரும் ஐயோவெனக் கதறிப் பதறி இளையபெருமாளின் மரணத்துக்காகத் துக்கித்து இதனைப் பெருமாளுணர்ந்தாற் சகோதர வாத்ஸல்யத்தால் உயிரிழப்பர் அவருயிரிழக்கக் கண்ட சுக்கிரீவமகாராசனும் பிறருமுயிரிழப்பர் எனக்கூறி வருந்துதலைக், கண்ட சாம்புவந்தர் அழுவாரனைவரையும் பார்த்து அந்தோ வாளாவேன் கவலுகின்றீர். நமது அஞ்சனநந்தனர்

உள்ளகாலமளவும் நமக்கொரு கவலையும் இன்றாம். அவ
ரெங்குளார் என்றவுடனே விபீஷணர் ஆஞ்சனேயரை
யழைத்துச் சாம்புவற்குக் காட்ட அவர் வீராதிவீரரே
பண்டு கொண்டுவந்த மருத்துமலையை இன்றுங்கொண்டு
வந்து இளையபெருமாளின் உயிரையுண்டாக்குதி ரென்ற
னர் அம்மொழிகேட்ட அவர் அவ்வாறேயென விரைந்து
பேருருவங்கொண்டு தோள்கள் திசைகளை யிடிக்கவும்
நவக்கிரகங்களுந் தாராகணங்களும் கோத்தமைத்த மணி
மாலைபோல விளங்கத் தோள்கள் ஒவ்வொன்றும் ஆயிரம்
யோசனைய கலத்ததாக விளங்கவுங் கால்களின் பருமனை
யிலங்கை யிடமில்லாததாகவும் அகன்றகைகளை வீசுதற்கு
நீண்ட திசைகள் போதாதாகவும் நின்று வால்விசைத்துக்
கைநிமிர்த்து வாயினையுஞ் சிறிதகலம் வகுத்து மார்பினை
யுங் கழுத்தினையுஞ் சுருக்கி உடலிலுள்ள ரோமங்கள்
சிலிர்ப்பக் காலூன்றிமேலெழுந்து மேகமண்டலங் கிழிந்து
நீர்கசிய நக்ஷத்திரங்களுதிர மலைகளுமரங்களுந் தொடர்ந்
தெழ வானவர் விமானங்களழிந்து பேரிடிகாட்டிப் பெருங்
கடலுள் விழுந்தழிய மேலெழுந்து பாய்ந்து அலைகள் பல
திசைகளையு மழிக்கபாய்ந்து,

"கடல்முன்னே கிபிர்ந்தோடக் கால்முன்னே
தொடர்ந்தோடக் கடிதிற்செல்வான்
உடன்முன்னேசெலவுள்ளங் கடைக்குழைவால்செலச்
செல்வானுருவை நோக்கி

அடன்முன்னே தொடங்கியாா ளாழ்கடல்சூ
ழிலங்கையெனு மரக்கர்வைகும்
திடமுந்தீர்க் கிடையறிந்தான் முறிர்ந்துகங்
துயரென்றார் தேவரெல்லாம்."

என்றபடி கடலும் வாயுவு முன்னே தொடர்ந்து செல்ல இலங்கையைக் கடந்து மேகமண்டல சூரியமண்டல சந்திரமண்டல நக்ஷத்திரமண்டல சுவர்க்கமண்டலாதிகளுக் கப்பாற் சத்தியலோகமள வுயர்ந்து விரைந்து வானநாடர் முதலியர் இங்ஙனம் வந்தவன் கருடனோவென்றும் பிரமனோவென்றும் முக்கண்ணனோ வென்றும் திருமாலோவென்றும் உருவோவென்றும் அருவோவென்றும் கூறுமாறு விரைந்துயர்ந்து தாவி உலகளந்த பெருமாளது அடிமலரை யொப்ப வோங்கிப் பாய்ந்து,

"தேவரு முனிவர்தாமுஞ் சித்தருந் தெரிவைமாரும்
மூவுல கிடையுளோரு முவகையாற் றொடர்ந்துமொய்த்தார்
தூவின மணியுஞ்சாந்துஞ் சுண்ணமு மலருமொய்த்துப்
பூவுடை யமரர்தெய்வத் தருவென விசும்பிற்போனான்."

என்றபடி தேவரும் முனிவருஞ் சித்தரு மரம்பையரு மகிழ்ச்சி மீக்கூர்ந்து பொன்னுமணியு மலருஞ் சாந்து மிறைத்து வாழ்த்தி இமயமந்தர கைலாயாதி மலைகளைக் கடந்து மேருவையடைந்து அங்கு திரிமூர்த்திகள் திருவோலக்கங்கொண் டிருத்தலைக் கண்டு பணிவுடனப்பாற் சென்று திக்குப்பாலகர்முதலியோரிடத்தையுங் கடந்து

அமிர்தவுருவமான சஞ்சீவி இருக்குமிடத்தை யடைந்த காலத்து ராவணனேவலால் முன்னமே யிங்குவந்து முனி யுருவமாக இருந்த காலநேமியென்னும் கொடிய அரக்கன் ஆஞ்சனேயரெதிரே சென்று நனிபிதம்பேசி நீ தேடிவந்த மருந்து இக்குளத்தில் நீ முழுகிப் பின்னர்த் தேடினற் கிடைக்குமென்று கூறினன். நல்லாரெதனிலும் பொல் லாங் குரையாரெனக் கருதிய ஆஞ்சனேயர் குளத்திலி றங்கி முழுகினர். உடனே அதனிற்கிடந்த முதலையொன் றவர் காலைப்பற்றி யிழுத்தது அவரதனை உதறியெறிந்த னர். அது ஒருபெண்ணுகி வீர! இவன் முனியல்லன் கால நேமியென்னுங் கொடிய மாயவரக்கன் இவனை ராவணன் அனுப்பினன் இவனைக்கொன்று வந்தவேலையைச் செய்க என்றது. அதுகேட்ட ஆஞ்சனேயர் கடுங்கோபத்துடன் விரைந்து அக்காலநேமியி னருகிலெய்தி அவன் தன்னத்தி லோரடி இடியிடித்தாற்போல அடித்தனர். உடனேயவன் நிசவுருவுட னெதிர்நின்று சிறிதுபொருதனன் ஆஞ்சனே யர் நின்னோடுமெனக் கிங்கொரு போரோவென்று அவன் தன்னத்திற் பின்னுமறைந்து அவன் பிடரியைப் பிடித்துக் கீழேதள்ளிக் கழுத்தின்மிதித் துதைத்தடித்துப் பிடித்தி டித்துக் கொன்றனர். அவனுமொரு பெருமலைபோல இறநது விழுந்தனன். உடனே பெண்ணுருவம் ஆஞ்ச னேயரெதிரே தோன்றி அஞ்சலிபுரிந்து வாழ்த்தி யான் தான்யமாலி யென்னுந் தேவமாதெனக் கூறிமறைந்தது. அவரும் சஞ்சீவிமலைக கையிலெடுத்துக்கொண்டு விரைந்து லங்கையிலுள்ள ரணகளமெய்தி இளைய பெருமாளைச்

சஞ்சீவிக் காற்றினாலெழுப்பி அனைவருக்கு மகிழ்ச்சியை யுண்டாக்கினார். இதனை,

எண்ணில்பல புவனங் கடந்துலைந் திருமக்
    கிறைவரா லேவவந்தீர்
இறவா மருந்தொன்று பெறநாடி வீரதவ
    மிவ்விடத் தெய்தியிடநீர்
புண்ணிய மளிக்குமந் திரமொன்று கேளுமிப்
    புனலாடி மீளுமெனவே
பொருமாயை பலவல்ல வொருகால நேமிமுனி
    புகல்குள மிறங்கியாடித்
தண்ணிலவு மோடையிற் பிடிமுதலை யைக்கொன்று
    தள்ளவது தான்யமாலித்
தையல்வடி வாய்வந்து வெய்யதச முகன்விடு
    சழக்கனிவ னுயிர்பருகென
வண்ணியொரு குத்திலவ னைச்சவட் டியவனொ
    டம்புலி யாடவாவே.

என்பதனாலுணர்க

---

உகூ-வது.

# மயூராசுர சங்கார பராக்கிரமம்.

## இவனே மயில்ராவணன்.

நேமிவரையிற் கூடலத்தா னிறுத்தவிஞ்சி யகத்தெய்திச்
சாமிதனையவ் விளைஞனுடன் முங்கியேகிப் பாதலத்திற்
சேமத்திருந்த மயூரனுடல் சிதைத்தெம்பரனைக் கொடுபோந்த
தோமிலனுமன் றிருவடியென் னுளத்துஞ்சிரத்துந் துலங்குகவே.

(இ-ள்.) சக்கரவாளகிரியை யொப்ப வமைத்திருந்த வாற்கோட்டையுளெய்திச் சக்கரவர்த்தி திருமகனை அந்த இளையபெருமாளுடன் எடுத்துச் சென்று பாதாளத்திற் பத்திரப்படுத்தி யிருந்த மயூராசுரனைக் கொன்று எம்பரமனை இளையபெருமாளுடன் முன்னிருந்த இடத்திற் கொண்டுவைத்த குற்றமற்ற ஆஞ்சனேயரது திருவடிக் கமலங்கள் எனதுள்ளத்திலும் தலைமேலும் எஞ்ஞான்றும் விளங்குவதாக, எ-று.

### இதன் வரலாறு.

இருபத்தெட்டாவது பராக்கிரமத்தி லுரைத்தபடி காலநேமியாதிகளை யழித்த ஆஞ்சனேயரானவர் சாமிகாரிய துரந்தரராய் விளங்கிய காலத்தில் லங்காநாதனான ராவணன் பலவாறுலோசனை செய்து தன்மனதில் யான் சனகன்மகளை விரும்பி என்புத்திரமித்திராதி யனைவரையு மிழந்தேன் மனிதர்கள் வெற்றியுடையவர்களாக விளங்குகின்றனர் இவர்களோடு போர்புரிந்தா லிவர்களை நாம் வெல்லோமென்பது மூலபல முதலியவைகளைக் கொண்டு நாம் நடத்திய சண்டைகளே நமக்குணர்த்தும் இவர்கள்

இறந்தாலும் இவர்களை அனுமானென்பவன் சஞ்சீவிமருந் தினுற் பிழைப்பிக்கிருன் தேவர்களிவர்களுக்குச் சகாய மாக இருக்கிருர்கள் நமது பிரகஸ்தன் சொல்லுகிறபடி இம்மனிதரிருவரையும் நமதசுர மாயையால் இக்குரங்குக் கூட்டத்தினின்றும்பிரித்து நமதெண்ணத்தினை நிறைவேற் றிக்கொள்ள வேண்டுமென்று றுதிசெய்துகொண்டு மயூ ராசுரனை அழைப்பித்து இராமலக்ஷ்மணர்களை வானரர்க ளறியாதவண்ணம் பிரித்துப் பாதாளத்திலொரு மறைவி டத்தில் அடைத்துவையென்று கட்டளையிட்டான் அவன் சொற்கிணங்கிய மயூரன் அன்றிரவில் அவ்வாறு செய்வ தாக ஒத்துக்கொண்டான்.

இதனைத் திரிசடையானவள் வாயுதேவனுக்குணர்த்த வாயுதேவன் விபீஷணனுக்குச் சொல்ல விபீஷணும்வார் அனைவருக்கு முரைக்க அனைவரும் ஆஞ்சனேயரைப் பார்த்து வீராதிவீரரே! உமது பராக்கிரமத்தாலே தான் பெருமாளும் இளையபெருமாளும் மயூராசுரன் கையிற் சிக்காதிருக்கவேண்டும் என்று கூறினர். அதுகேட்ட ஆஞ்சனேயர் அவ்வாறே செய்வோமென அன்றிரவில் ஸ்ரீராமபிரானிளையாழ்வான் முதலியவர்களை யுட்கொண் டதான ஒரு பெருங்கோட்டையாகத் தமது வாலைச்சுற்றி விடுத்துக் காவலாக இருந்தனர். இதனையறியாத மயூரா சுரன் சதுரன்-சாத்தியன் - சலப்பிரவாசன் - மாயாவினோ தன் என்னும் நான்கசுரர்களுடன் வாற்கோட்டையினருகி லெய்திச் சதுரனை நீ இக்கோட்டைக்குள் நுழைந்து ராம

லக்ஷுமணர்களெங்கே தூங்குகிறார்கள் என்று பார்த்து வரக் கடவையென்ன வன்றேன் அவ்வாற் கோட்டையைச் சுற்றிப் பார்த்து அதனுட்புகுத வழியில்லை அது மிகவு முயரமானது என்று உள்நுழைய ஆகாதென்றவுட னருகி னின்ற சாத்தியன் நான் போய்வருகின்றேனென்று வாற் கோட்டையி னமைப்பைக் கண்டு ஆச்சரியங் கொண்டு வாலைத் தூக்கித் தலையை யுள்ளேவிட்டான் வாலையசைத்த தனை யுணர்ந்த ஆஞ்சனேயர் வாலைப் பூமியிலழுத்தினார் உடனே யவன் மூக்கு வாய்முதலிய நசுங்கிப் பயந்து வெடுக்கெனத் தலையை வெளியிலிழுத்துப் பிராணனைக் காப் பாற்றிக் கொண்டவனாய் மயூராசுரனைப் பார்த்து அண் ணலே என்னாலுள்ளே போக முடியாது எனது மூக்கும் வாயும் நசுங்கி வருந்துகின்றேனென்றான் உடனே மயூரன் விபீஷணனுருவமெய்தி ஆஞ்சனேயரது சம்மதப்படி வாற் கோட்டையுளெய்தி இராமலக்ஷுமணர்களை மோகன மந் திரத்தால் மயக்கி ஒரு பெட்டகத்துளாக்கித் தன்கையிற் கொண்டுபோய் பத்திரமாகக் காவலில்வைத்து மேல்நடப் பனவற்றை எதிர்பார்த்திருந்தனன்.

சிறிது நேரத்துக்குள் விபீஷணனால் மோசநடந்த தனையுணர்ந்து வாயுதேவனது சகாயத்தால் மயூரன் நக ரிற் பிரவேசிக்கச்சென்ற ஆஞ்சனேயர் அவன் நகருக்குச் செல்லும்வழியில் கமலவுருவமாக வமைக்கப்பட்ட கபாட வாசலில் காவலிருந்த இரண்டாயிரம் அசுரர்கள் இவரோ டெதிர்த்துப் போர்புரிந்தார்கள் அவர்களை ஆஞ்சனேயர்

வெகு லேசாகக்கொன்று கமலநாளம்போல அமைக்கப் பெற்ற வழியின் வழியாக உள்ளே பிரவேசித்து தீக்கோட் டையெனப் பெயருள்ள மதிற்புறத்தி லிருந்தெதிர்த்த அசுரர்களையுங் கொன்று அக்கோட்டைக் காவலர் தலைவ ஞன மச்சவல்லபனென்னும் வீரனெதிர்க்க அவனைத்தன் வெயர்வைத் துளியிலுண்டானவனென்று அவன் வாய் மொழியிலுணர்ந்தவனை ஒருகுத்திற் றீழேதள்ளி யுள்ளே சென்று அடுத்த கோட்டைக்குள்ளிருந்த நாலாயிரங்காவ லாளரையு மதஞ்செய் துள்ளேபுகுந்து அதற்கடுத்த தாம் பிரக் கோட்டைக்குள் இருந்தெதிர்த்த இரண்டாயிரம் அசுரர்களையுங் கொன்று அப்புறமுள்ள வெங்கலகோட் டையென்னு மதிலுட்புகுந்து எதிர்த்தாரைக் கொன்று அப்பாற்சென்று காஞ்சனமென்னும் பெயருள்ள கோட் டைக்குட் புகுந்து அங்கிருந்தெதிர்த்த அசுரர்களையுங் கொன்று அப்பாற்சென்று பிரவாளமென்று பெயருள்ள கோட்டைக்குள் புகுந்து அவ்விடத்திலு மெதிர்த்தவர்க ளைக் கொன்றுள்ளே சென்று இடையிலுள்ள உத்தியான த்திலெதிர்த்த ரக்தாக்ஷன் முதலியவர்களைக் கொன்று மயில்ராவணனென்னு மயூரனெதிரேசெல்ல வவன் அநேக முறை அநேகம் வீரர்களை அனுப்ப அவர்களையெல்லாம் ஒருக்ஷணத்தில் கொன்று மயூரன்மீது தாவிப்பாய்ந்தவன் கன்னத்திலறைந்து நீயோ என்னை வஞ்சித்தெம்பெருமா ளைக் கொண்டுவந்தவன் என்றவனுடன் போர்புரிந்தவுடன் அவனும் இவனோடு கடும்போர்புரிந்து வெல்லமுடியாமல் அநேகம் மாயப்போர் புரிந்தனன் அவைகளையும் ஆஞ்ச

னையர் நாளுக்கத்தா லுணர்ந்து அவைகளிலுமவனை யவ லப்படுத்தி இருபெரு மலையினடுவி லவனைத் தள்ளி அசரீரி யாலவன் உயிர்நிலையை யுணர்ந்து அவனது மருமத்தானங் களில் குத்தி அக்கொடும்பாதகனைக் கொன்று அசரீரியி னடையாளப்படி மாயப்பெட்டியை யெடுத்துக்கொண்டு பொழுது விடிவதன்முன் பாசறையையடைந்து பெருமா னையும் இளையபெருமானையும் முன்போல இருக்கச்செய்து அடிபணிந்து மகிழ்ந்தனர் வானராதிபனும் விபீஷணனும் தேவர்களும் வானரர்களும் சந்தோஷமடைந்தார்கள் அசு ரர்களும் இராவணனும் வருத்தமுற்றனர். இதனை,

துங்கவெண் பிறைவா யமைச்சர்நா லிருவரொடு
தொல்படையை மடியவைத்து
தலையரண் டழுவுபா தலவிலங்கைப் புரிசை
தாளிபட மோதிவைத்துப்
பங்கியெரி கமயிரா வணனும் வண்டேழும்
படப்பட நொறுக்கிவைத்துப்
பரவுதூர்த் தண்டிமா னீலமேகற்குப் பட்டமுங்
கட்டி வைத்துத்
தங்குமொரு காளிபலி யிடவைத்த விருவரைத்
தடமுடியில் வைத்தெழும்பிச்
சார்தரு பிலத்துவழி யேறிவீ டணன்முதற்
றலைவர்வழி பார்த்திரங்கச்
செங்களந் தனின்முன்பு போல்வைத்த கைகளாற்
சிறுபறை முழக்கியருளே
சீர்த்திபுனை கின்றதிரி நேத்ரவநு மந்தனே
சிறுபறை முழக்கியருளே. என்பதனாலுணர்க.

௩0-வது.

## வசந்தக்கிரகண பராக்கிரமம்.

புரைபெறு மனத்தனுகிப் பூவையைச் சிறைப்படுத்தா
னிரைகட னடுவெணீங்க வெழிற்கணை விடுத்தான்கூற்றுல்
விரைசெறி கமலமேலார் விபுதனே முதலாயுள்ள
சுரருடன் வசந்தற்றந்த சுந்தரனடிகள் போற்றி.

(இ-ள்.) காமாதி குற்றங்கள் குடியிருக்கு மனத்தினனு கித் திருமகளைச் சிறைவைத்த ராவணன் அலைகளையுடைய கடனடுவெணதீன இலங்கையை விடுத்து யமபுரமடையும் வண்ணம் அழகிய அம்புவிடுத்த பெருமாள் கட்டளையின் வண்ணம் மணம்பொருந்திய கமலமலர்மிசை வீற்றிருக் கும் பிரமதேவன் முதலிய தேவர்களுடன் வசந்தனைக் கொண்டுவந்த ஆஞ்சனேயரது திருவடிகட்கு நமஸ்காரம், என்றவாறு.

### விவரம்.

இருபத்தொன்பதாவது பராக்கிரமத்தி லுரைத்த வண்ணம் மயூராசுரன் முதலியவர்களை நாசஞ்செய்த வீர தீர பராக்கிரமராகிய ஆஞ்சனேயரைப் பார்த்து ராவண சங்காரஞ்செய்து பிராட்டியை மீட்டுத் தீயிற்குளிப்பித்து விபீஷணருக்கு லங்காதிபத்திய மளித்துப் பிரமாதிதேவ ராற் றுதிக்கப்பட்டு விளங்கிய ஸ்ரீராமச்சந்திர மூர்த்தி யானவர் பிராட்டியுடனும இளையபெருமாளுடனும் மற் றைய வானரவீரருடனும் புஷ்பகவிமானத்தி லேறுவான் எழுந்தருளிய காலத்துச் சுக்கிரீவமகாராசனைப் பார்த்து வானராதிபனே அனைவரும் வந்திருக்கின்றார்களோ என்று கேட்டனர். அதுகேட்ட நீதியிற்சிறந்த சுக்கிரீவமன்ன

வன் பெருமாள் திருவடிகளை வணங்கி வசந்தனென்பவ
னொருவானரவீரனையன்றி யுள்ளவர்களனைவரும் வந்திருக்
கின்றார்கள் என்றதற்குப் பெருமாள் அவன் யாண்டைய
னென்ன விபீஷணர் கும்பகருணனாற் றிலதமாக இடப்பட்டு
அழிந்துபோயினனென்றனர் அதுகேட்ட பகவான் புன்ன
கையுடன் ஆஞ்சனேயரைப் பார்த்து மாருதி நீ அவ்வசந்
தனை யமராசனிடம் சென்று கேட்டு மீட்டுக்கொண்டுவா
அவனை நீயழைத்து வருகிறவரைக்கும் யானிவ்விடத்தி
லேயே இருப்பேனென்றனர்.

அதனைக்கேட்ட ஆஞ்சனேயர் இன்றே அயோத்தியா
புரியடையவேண்டிய எம்பெருமான் என்னையொரு பொரு
ளாக மதித்திதனைக் கட்டளையிட்டனரென்று விரைந்து
ஸ்ரீபெருமானடிமலர்களை வணங்கி அண்டகோளகையுமூடு
ருவத்தக்க ஒரு பெரிய திருவுருவமெய்தி ஓரே பாய்ச்ச
லாக யமபுரமடைந்து யமனை நோக்கி வசந்தனைத் தருக
வென்ன வவன் வசந்தனிங்கு வந்திலனென்று கூறினன்
உடனே அந்த யமனைத் தமது வாலினாலொரு சுற்றுச்
சுற்றி யெடுத்துக்கொண்டு சுவர்க்கத்தையடைந்து இந்திர
னைப்பார்த்து வசந்தனைத் தருக என்ன அன்னானும் வசந்த
னிங்கு வந்திலனென்றுரைக்க அவ்விந்திரனையும் யமனு
டன் வாலிலிறுக்கிக் கட்டி அங்குநின்றும் ஓரேபாய்ச்ச
லாகப் பிரமலோகமடைந்து பிரமனைக்கண்டு வசந்தனைத்
தருதியென அன்னானும் வசந்தனிங்கு வந்திலனென்ன
அப்பிரமனையும் இந்திரனுடன் வாலிற்பின்னி யிழுத்துக்
கொண்டு ஓரேபாய்ச்சலாக வைகுண்டமடைந்து அங்கி

ருந்த வசந்தனை வருகவென வழைத்துப் பிணித்துக் கொண்டு ஓரேபாய்ச்சலாக சுவாமியெதிரே யெய்தி வாலை நெகிழ்த்தி யாவலரையும் விடுத்து வசந்தனைக் காட்ட வசந்தன் வானரவுருவுடன் பெருமாளையும் சுக்கிரீவமகாராசனையும் வணங்கினன் பெருமாளும் சுக்கிரீவமகாராசனுஞ் சந்தோஷமடைந்தார்கள். பிரமாதிதேவர்கள் பகவானை வணங்கி யொப்புமுயர்வுமற்ற ஆஞ்சனேயரது பராக்கிரமத்துக்கு மெச்சி அங்குநின்றாக தம்முலகடைந்தனர் பெருமாளும் ஆஞ்சனேயரை மிகவும் புகழ்ந்தவருடன் புஷ்பகவிமான மிவர்ந்து தேவர்கள் மலர்மாரி பொழியச் சென்றனர். இதனை,

தடிவேற் கரத்துச்சமனை வசந்தனைக் காட்டென
 வாலினிற் சுருக்கித்
தகையிந் திரனூர் தேடியவன்றனை யுஞ்சமன்ற
 னோடுடன் சுருக்கிப்
படிநான் மறையோன் புவிதேடிச் சமனிந்
 திரனோ டவனையுமப்
படியே சுருக்கிய திருக்கேள்வன் பதத்துளானை
 யெதிராந் தேர்ந்தித்
தடியே திரும்பி யவரவரைத் தொல்லைப்பதியி
 லிருத்தி முன்னோட்
சுடரிலெழுந்து வருஞ் சனகன் தோகை
 போலப் புட்பகத்தின்
அடியே வசந்தன் றனைக் கொணர்ந்த
 வரசேசிற்றில் சிதையேலே
அனகா திரிநேத் திரவீர வனுமா
 சிற்றில் சிதையேலே. என்பதனாலுணர்க.

௩௧ - வது.

# பரதரக்ஷண பராக்கிரமம்.

---

வீழிவா யனையசொல்லால் வெஞ்சுரங் குறுகுமண்ணல்
ஏழியாண் டிரட்டிக்கால மேகுநாள் வருவனென்று
வாறியா தாகச்சொன்ன வத்தினத்தமலன் றந்த
வாழியாற் பரதற்காத்த வனுமன்றா ளகத்துவைப்பாம்.

(இ-ள்.) வீழிப்பழமனைய அதரத்தினையுடைய அன்னையான கைகேசியின் வாய்மொழியால் பதினன்கு வருடகாலம் கொடியவனத்தில் வாசஞ்செய்வதாகவும் அந்நாளின் முடிவில் வருவதாகவும் உறுதியாகவுரைத்த அத்தினத்தில் ராமபிரானால் கொடுத்தனுப்பப்பட்ட கணையாழியைப் பரதனிடமளித்துப் பரதாழ்வானுயிரைக் காத்த ஆஞ்சனேயரது திருவடிகளை யகத்துள் வைத்துத் துதிப்போமாக, எ-று.

## விவரம்.

முப்பதாவது பராக்கிரமத்தி லுரைத்தபடி வசந்தனையழைத்துவந்த ஆஞ்சனேயரையு முடனேற்றிக்கொண்டு புஷ்பகவிமானத்தில் அயோத்தியை யுத்தேசித்து வருகிற பகவான் சேதுமுதலிய உத்தமதீர்த்த விசேஷங்களையெல்லாம் பிராட்டியாருக்குக் காட்டிக்கொண்டே சித்திரகூட நோக்கி வருங்காலத்தில் இவரது வருகையை ஞானதிருஷ்டியாலுணர்ந்த பரத்துவாசமுனிவன் தண்டகமண்டலங்களுடனெதிரெய்தி ஆசிகூறி யழகிய தமதாச்சிரமத்தில்

எழுந்தருளிப் போகும்வண்ணம் கேட்டுக் கொண்டதற் கிணங்கி, புஷ்பகத்தை பரத்துவாச ஆச்சிரமத்தி லிறங்க வருளி மாருதியே வருகவென ஆஞ்சனேயரை விளித்து நீ அயோத்திக்குச் சென்று எனது வருகையைப் பரதனுக் குக்கூறி யவனை மரணத்தினின்றுந் தடுத்து விரைந்து வரு வாயாகவென்று தங்கணையாழி மோதிரத்தை யளித்து விடுத்தனர் இவரும் கணையாழியை யடிபணிந்து பெற்று விரைந்து மேலெழுந்து ஒரேபாய்ச்சலாக அயோத்தியை யடைந் , அக்கினியை வலம்வரும் பரதாழ்வானைக் கண்டு வந்தனர் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி என்று கூறிநின்றனர். அந்தச் சமயத்தில் பரதாழ்வானே எனக்குரிய தந்தையுந் தாயுந் தெய்வமுமான ஸ்ரீராமச்சந்திர மூர்த்தி முன்னு ரைத்தநாளில் வராவிட்டால் யான் அக்கினியிற் புகுந்து உயிரை விடுகின்றேனென்று பிரதிக்கினை செய்துக்கொண் டேன். அந்த சங்கற்பப்படி தீக்குழிக் கிவ்வுடலை யிரை யாக்குவதைவிடுத்து சுமமாயிருப்பதிற் பயனில்லையென்று துணிந்து சத்துருக்கன மகாராசாவைப் பார்த்து இளை யோய் நம்பெருந்தகை இன்னம் வந்திலன் ஆதலின் நீ இந்நாள்முதல் இந்நாட்டை முறைசெலுத்துதி யான் தீக் குழியின்வழி விண்ணுலகம் புகுகின்றேன் விரைவிற்றீய மைப்பாக வென்றனன் அதுகேட்ட சத்துருக்கினா் நனி இரங்கிப் பின்துணிந்து தீயமைத்தனர்.

தீயமைத்ததை யுணர்ந்த பரதர் நீராடி நியமமுடித்து அன்னையரைக் கண்டடி பணிந்து தீயின்முழுகி யுயிர்வி

டத்துணிந்து செல்வதைக் கூறுதலும் அன்னோர் எரியி
டைப்பட்ட நறும்பூமாலையென முகம்புலர்ந்து ஆவோ
மகனே நின்னைப் பிரிந்தெங்ஙனம் இருப்பேம் ராகவன்
விரைந்து வருவன் என்று பலவாறு கூறியுங் கேளாது
மேற்கொண்ட நியமத்தை நிறைவேற்றுகின்றே னென்று
தீக்குழியடைந்து இருகரங்களாலும் ஜகத்பதியான ஸ்ரீ
ராமபிரானை வணங்கி ஐயனே குறித்ததினத்தில் தேவரீர்
வாராவிடில் யானெரி புகுவேனென்று கூறியபடி செய்கின்
றேனென்றுகூறி யக்கினியை வலம்வருந் தருணத்தி லெய்
திய வாஞ்சனேயர், வந்தனர் ராமச்சந்திரரென்று கூறிக்
கணையாழியை யளித்தனர் ஆஞ்சனேயர் இன்னமொரு
நிமிஷநேரம் வராதிருப்பரேல் பரதருடலந் தீக்கிரையாகும்
இவ்வாறு புரிதற்குப் பிறரால் ஆகாதென்பது திண்ணம்
இவ்வரிய செயலினை ஆஞ்சனேயர் செய்தது பிராமண
வேஷத்துடனேயன்றி வானரவேஷத்துட னன்றும்.

மறையவனுருவுட னெதிரில் நின்று வந்தனர் ஸ்ரீராம
ரென்று கூறிய மாருதியை யின்னதன்மையரென் றுண
ர்த பரதனாதியர் கனிவியந்து வரலாறுமுழுவதுங் கேட்
டுணர்ந்து சுயவுருவினையுங் காட்டச் செய்து கண்டு
மகிழ்ந்து விடையளிக்கவுடனே மீண்டு சித்திரகூடத்திலெ
ழுந்தருளியிருக்கும் ஸ்ரீராமரைச் சென்று கண்டு நடந்
தனவற்றை யுரைத்துறைந்தனர் அதிக விரைவில் அயோத்
தியையடைந்து பரதரை ரக்ஷித்தல் பிறரை •யாக்கிரமத்
தவராத லுண்மையை யுய்த்துணர்க. இதனை,

இன்றுநம்பதி வருதுமுன் மாருதி யாண்டைச்
சென்று தீதின்மை செப்பியத் தீயவித்தினையோன்
நின்றநீர்மையு நினைவுநீ தேர்ந்தெம்மி னோர்தல்
நன்றெனுவவன் மோதிரங் கைக்கொடு நடந்தான்.

தந்தை வேகமுந் தனதுநாயகன் றனிச்சிலையின்
முந்துசாயகக் கடுமையு முற்பட முடுகிக்
சிந்தைபின்வரச் செல்பவன் குகற்குமச் சேயோன்
வந்தவாசகங் கூறிமேல் வான்வழி போனான்.

ஐயன் வந்தன னாரியன் வந்தனன்
மெய்யின் மெய்யனை யின்றுயிர் வீடினால்
உய்யு மேயவ னென்றுரைத் துட்புகாக்
கையினா லெரி யைக்கரி யாக்கினான். என்பனவாகியாவனர்க.

---

## ௩௨ - வது.

# வீமகர்வபங்க பராக்கிரமம்.

தீயென வொளிருஞ்சென்னி யிடும்பனைச் செறிந்தார்த் தின்னும்
வாயினையுடைய பொல்லாப் பகன்றனை வதைத்த கீர்த்திச்
சேயென வுலகங் கூறுஞ் செழுங்கதை வீமனூற்றல்
எயென வடக்கியாண்ட மாருதி யிருதாள் போற்றி.

(இ-ள்.) தீயையொப்ப விளங்குந் தலைரோமத்தினையுடைய இடும்பனையுந் தன்னெதிரில் வந்தாரைத் தட்டின்றித் தின்னும் வாயினையுடைய பொல்லாத பகனையுங் கொன்ற கீர்த்தியினை யுடையவனாக உலகங்கூறுஞ் செழுமைவாய்ந்த தண்டாயுதத்தினை யுடைய வீமனது வன்மையை விரைவாக வடக்கி அவனைத் தனதிளையவனாகவாண்ட ஆஞ்சநேயரது உபயசரணாரவிந்தங்களைத் துதிக்கின்றேன், என்றவாறு.

### விவரம்.

பிரசித்திபெற்ற சந்தனுமரபில் வந்த பாண்டுகுமாரர்களான பாண்டவர்களுந் திருதராட்டிர குமாரர்களான துரியோதனாதியருமொருவரோடொருவர் பகைத்து அஸ்தினபுரியில் நடந்த வஞ்சச்சூதில் நாடுநகரங்களை யிழந்து பன்னிரண்டு வருஷம் வனவாசமும் ஒருவருஷம் அஞ்ஞாதவாசமுமாகக் கழித்துவருவதாக ஏற்படுத்திய நியமனப்படி வனத்தினைப் பாண்டவர்களும் நாட்டினைத் துரியோதனாதிகளும் அடைந்து காலம்போக்கி வருங்காலத்தில் காமி

யமென்னும் வனத்தில் பாண்டவர்கள் வாசஞ்செய்யுங் காலத்தில் இவர்களுடன் வனமடைந்திருந்த திரௌபதா தேவி ஒருதினம் வனவாசியரான முனிவர் மடந்தையரு டன் ஒருபேராற்றி னீராடினள் நீராடினவள் அவ்வாற்றங் கரையில் விழுந்த ஒரு புஷ்பத்தினைக்கண்டு விரைந்தெ டுத்து அதனழகையும் நிறத்தையும் மணத்தையுங் கண்டு வியப்புற்று இஃதுதெந்த நாட்டுமலர், பலவகை நறுமலர் களை நாங்கண்டுளோம் அவற்றுளெவையிலுமிம்மலர் சேர்ந் ததாகத் தோற்றவில்லை, நறுமணமும் பேரழகும் பொருந் திய இம்மலரினைப் புதியதாக நாமெவ்வாறடைவது எண் ணிய கருமங்களை முடிக்கவல்ல பார்த்தனைப் பிரார்த்தித் தால் ஒருவேளை கொண்டுவந்து கொடுக்கலாம் ஆனாலம் மன்னவனோ இப்பொழு திங்கில்லை பாசுபதாஸ்திரம்பெ றப் பசுபதியைக் குறித்து அருந்தவம்புரியப் போயினன். நமது காதலரான தர்மரோ எதிலும் விருப்பமற்றவர் நாமிதனை யுரைத்தால் நம்மைப் பரிகசிப்பர். மற்றைய நகுல சகாதேவர்களிற் சகாதேவன் ஞானிகளையொப்ப விருப்பு வெறுப்பின்றி நடப்போன் நம்முடைய சொல் லைப் பொருட்படுத்தான் நகுலனோ ஆளழகன்தான் இருக் கட்டும் வீமசேனரிடங் கூறினால் ஒருவேளை சாதித்துத் தருவர் நம்முடைய சொல்லில் மிகத்தாக்ஷண்ணிய முடை யவர் அவரே எப்படியாவதவரைக் கண்டு எமதாசையைக் கூறி இவ்வலரைப் புதியதாக அழைப்பித்துப் பார்ப்பதே சரி, இவ்விஷயம் ராஜரிஷியான தருமருக்குத் தெரியப்படா தென்று தீருமானஞ்செய்து அப்பழைய பூவுடன் வீமசே

னன் இருக்கும் இடத்தையடைந்து இரகசியமாக இவ்வழகிய மலரினை விரும்பினேன் எனக்கிதனை நும்மைத்தவிர வெவர்தேடித் தரப்போகின்றனரென்று காதளவோடிய கருங்கட் செய்யவாய் மாது திரௌபதி கூறினள் அவள் மொழியைக் கேட்ட வீமராசன் அவள் கொண்டுவந்த அப்பூவினை இப்பூவினி லஃதெங்குளதென்று தேடிப் பார்த்துக்கொண்டுவந்து கொடுப்பதாகச்சமாதானங்கூறித் தண்டமென்னு மாயுதமொன்றை மாத்திரம் கையிலெடுத்துக்கொண்டு ரோமசமுனிவனால் குபேரநகரத்தி லப்பூவுளதென்றறிந்து ஆற்றங்கரையை யடைந்து இவ்வாற்றங்கரைவழியே சென்றால் இப்பூவினை மிகவுடைய இடத்தினை யடையலாமென விரைந்தவ் வாற்றங்கரைவழியாகச் சென்றனன். அனேகம் யோசனை தூரத்தை யரைநொடிப்பொழுதிற்கடந்து செல்லும் வீமராசன் வளவிய வொருவாழை வனத்தினுட்புகுந்து செல்லவேண்டியவனாகிச் செல்லுங்கால் அவ்வன காவலரான அசுரர்பலர் தடைபுரிய வவர்களை வதைத்துச் சிங்கநாதத்துடன் விரைவாக இவன் செல்லும் வேகத்தினால் வேர்பறிநதோடு மரங்கள் அரசர்கள் முன்னேசெல்லுமலங்கார சைனியங்களை யொப்பவருதலை யச்சோலைக்குள் அருந்தவநிலையில் வாசஞ்செய்யும் ஆஞ்சனேயரானவர் கண்டு இவ்வளவு வீரமும் தீரமுமுள்ள இவன்யாவன் தேவனோ அல்லன் அசுரனோ அல்லன்' மனிதனிங் கெய்தப்பெறான் காண்பதற்கு மனிதனேதாற்றமாகவே. இருக்கின்றான். இவன் யாவனாயினுமாருக இவன் நாமிருக்குஞ் சோலையுளேன் வந்தான் சிறிது

வன்மை யுடையவனாகக் காணப்படுகின்றான். இவனது வன்மையை நமதுவாலினாலறிப்போமெனத் தமதுவாலினை அவ்வழியே நீளவிடுத்திருந்தனர்.

விரைந்து பலர்நாடி வந்தமாருதி மாருதியின் வாலைக் கண்டு சீ, புல்லியகுரங்கின் வாலையோ கடந்து செல்வது எந்தப் பிராணியையுந் தாண்டுவது உசிதமன்றாம் இவ்வளவு நீளமாக் வாலினைவிடுத்த குரங்கெங்கே யென்று சிறிதுநின்று பார்த்து ஆஞ்சனேயரைக் கண்டு அடா குரங்கே வாலையெடுத்து வழிவிடென்று கூறினான். இவன் வாய்மொழியை பொருசிறிதும் லக்ஷியஞ்செய்யாமல் அவர் இருந்தனர் உடனே வீமன் இப்பெருங்குரங்கு பெருங் கருவமுடையது இதுவாலையெடாது இந்தக்குரங்கு வாலை நாமே யெடுத்து அப்புறத்திற் றள்ளிப் போவோமென மலையனைய தண்டத்தால் ஆஞ்சனேயரது வாலைப்புரட்டிப் பார்த்தான் அவ்வாலிலுள்ள ஒரு சிறுரோமமும் அசை யாமைகண்டு கடுங்கோபங்கொண்டு தனது பராக்கிரமங் களையெல்லா நினைத்து யானிப்பொழுது ஒரு குரங்கின் வாலினை அசைக்க முடியாதவனானால் என் வீரமென்னைச் சீசீ நான் நன்றாய்க் கதையைப் பிடித்து வாலினைப் புரட்டி யிருக்கமாட்டேன் நன்றாகப் புரட்டிப் பார்க்கின்றேனென அசையவில்லையே என்று யோசாறி இதுகுரங்கன்றா யிருக்க லாம் ஒருவேளை வாயுகுமாரனும் அஞ்சனி குமாரனுமான அனுமானோ அனுமானானால் நானவரடிமலர்களை வணங்கு வேன் இந்த உண்மையை எவ்வாறறிவது மலைகளையும்

புரட்டியெறியும் வலிய எனது கரங்கள் ஒரு குரங்கின் வாலினை அசையாதா நாம் நமது வரலாற்றினை ஒருவாறு கூறி இக்குரங்கினை அறிந்துகொள்ளலாம் இதனைக்காட்டி லும் உபாயம் வேறொன்றுமின்றும் என்று தனது மனதி னுள் நினைத்து ஆஞ்சனேயர் கேட்கும்வண்ணம் யான் மாருத தேவனென வாயுபகவானைத் தந்தையாகக்கொண்டு மாருதியென வுலகங்கூற நின்றும் கேவலமாகிய புன்குரங் கின் வாலைப்புரட்டும் ஆற்றலில்லாதவனுக் கனதாச்சரி யம் எனது தமயனைப் முனனுகத்தில் ஸ்ரீராமச்சந்திரருட னிருந்த மாருதியை மகாபலசாலி யென்பார்கள் அவர் இச்சிறிய வுருவினராக விரார். இஃதெந்த வானரமோ அவ்வாஞ்சனேயரே ஒருவேளை இந்தவுருவத்துடன் வந்தி ருக்கின்றரோ அவரானல் அடியனிவேன் உண்மைவிளங்க வில்லையே யென்றிரைந்து கூறினன்.

இம்மொழிகளைக் கேட்ட ஆஞ்சனேயர் தமது மணி வாயைத் திறந்து மானிடவீரனே என்னெதிரில் வருதி யென்றனர் அம்மொழிகேட்ட வீமராசன் திடுக்கிட்டுக் குரங்கென்று நினைத்தோம் குரங்குபேசுமோ பேசாதே பேச்சிலும் கெம்பீரமும் அழகுமமைந்து கிடக்கின்றதே இனி இதனைக் குரஙகென்றவமதித்து நாமிங்கு நிற்கப்ப டாது ஒருவேளை இவ்வனதேவதையோ என்ன ஆச்சரியம் என்று கருதிக்கொண்டே எதிரே சென்றனன்.

சென்றவுடன் மாருதி மனிதர்வரப்பெரு விவ்வனத் தில்வந்த நின்வர்லாறென்னை நின்றந்தையை வாயுதேவ

னென்றும் முன்னுகத்திலிருந்த அனுமார் நினக்குத் தமை யனென்றுங் கூறினையே அந்த வரலாற்றினைக் கூறுவாயா ளுல் நினக்குவழி கிடைக்கும்போதற்கு இன்றேல் நீ வந்த வழியே திரும்பிப் போகவேண்டியவனுவாய் என்றனர் அதுகேட்ட மாருதியான வீமசேனன் தன் வரலாற்றினை இவ்வாறு கூறினுன் எவ்வாறெனின்.

நின்விருப்பத்தின் வண்ணம் என்வரலாற்றினை யுரைக் கின்றேன், யான் சந்திரவங்கிச வரசனுன பாண்டுவின் மனைவியான குந்திதேவியின்பால் வாயுபகவானைப் பிதா வாகக்கொண்டு பிறந்தவன் என்பெயர் வீமன் என் சகோ தரர்கள் நால்வர் மூத்தவன்பெயர் யுதிஷ்டிரன் இவன் குந்தி தேவியினிடம் தருமதேவதையை ஆதாரமாகக் கொண்டு பிறந்தவன் என்னிளையவன் பெயர் அர்ச்சுனன், இந்திரனைப் பிதாவாகக்கொண்டு குந்திதேவியினிடம் பிறந் தவன் பாண்டுராசாவின் மற்றொரு மனைவியான மத்திரா தேவியிடம் தேவவைத்தியர்களான அசுவினி தேவர்களை யாதாரமாகக்கொண்டு பிறந்தவர்கள் இரட்டையர்களான நகுல சகாதேவர்கள் இவர்களும் எனது சகோதரர்கள் ஆக எங்களைவர்களையும் உலகினர் பஞ்சபாண்டவரென்று கூறுவர் என்றுன் இதுகேட்ட ஆஞ்சனேயர் பாண்டுராசா வின் வழியாக நீங்கள் பிறக்காமல் தேவர்கள் வழியாகப் பிறந்தற்கு நடந்த விஷயமென்னை? விளங்கச் சொல்லும் என்றனர்.

அதுகேட்ட வீமன் வானரமே என்றந்தையான பாண்டுவும் அவன் தமையனான திருதராட்டிரனும் சகோதரர்கள் இவர்களில் திருதராட்டிரன் பிறவிக்குருடன் பிறவிக்குருடனானாலும் பெலமுமறிவுமுடையவன் அவனையரசனாக்கி எனது தந்தை சேனாபதியும் இளவரசுமாக இருந்து இராச்சியம் நடத்திவந்தனர். அவர்கட்குத் தந்தையான பீஷ்மர் திருதராஷ்டிரனுக்கு காந்தாரராச குமாரியான காந்தாரியையும் பாண்டுவிற்கு குந்தியையும் மத்திராவையும் மணம்புரிவித்து வைத்தனர் இருமனைவியருடன் எந்தை ஒரு வசந்தகாலத்தில் வனசஞ்சாரஞ் செய்து வேட்டையிலொரு புணர்ச்சியிலிருந்தமானை ஆலோசனையின்றி அம்பெய்து கொன்றனர் உயிர்விடுமான் கீழ்விழுமானனது ஒரு முனியினுருவாகித் தவசிகள் பலவுருவங்களைக் கொள்ளுவரென்பதையும் ஆணும் பெண்ணுமாகக் கூடியிருக்குங் காலத்தில் எந்தவுயிரையுங் கொல்லப்படா தென்பதையுமறிந்தும் நீயென் இன்பத்தை யிடையிற்கெடுத்தமையாலுன்னைச் சபிக்கின்றேன் அதாவது நீநின்மனைவியரைச் சேருங் காலத் திறந்தொழிதி என்று இங்ஙனஞ் சாபங்கூறி முனிவன் விழுந்திறந்தனன் இச்சாபமொழி கேட்ட எந்தை மனம்வருந்திப் பிரதிசாபமான அனுக்கிரகத்தைப் பெறுமுன்னர் முனிவனிறந்தான் ஆதலினினி நாம் மனைவியரோடு நாட்டிற்கிடந் துழைப்பதினுங் காட்டில் தவம்புரிதலே நலமெனக்கருதி மனைவியரிருவருடன் வனமடைந்து முனிவரோடு கலந்து வனவாசியாக விருந்தனர் இருந்த காலத்தில் புத்திரப்பேறில்லாதார்க்குச் சுவர்க்கமின்றென்

றும் புத்திரர்களைப் பலவழியாகவும் பெறலாமென்னு றான் முறையில் நினைவுண்டாகி என்னன்னையைப் பார்த்து நானே முனிவனிட்ட சாபத்தினால் உங்களிடத்திற் புத்திரோற் பத்திசெய்யக்கூடாதவனாகவிருக்கின்றேன் புத்திரனில்லா தாருக்கோ நற்கதிகிட்டாது ஆதலினால் நீ தர்மசந்தானம் சம்பாதிக்கக்கடவை என்னனுமதியினால் நீ மற்றொருவனைப் புணர்ந்துண்டாக்கும் பிள்ளை என்பிள்ளையெனவும் அவனாலெனக்கு நற்கதியுண்டென்றும் பலதினம் என்னன்னையிடங்கூறி யவள்மனதை வசப்படுத்திய பின்னர் அன்னை பாண்டுராசனைப் பார்த்து யான் என்தந்தை கிரகத்தில் கன்னிகையாகவிருந்தகாலத்தில் சிறந்த மகரிஷியான துருவாசருக்குச் சிலகாலந் தொண்டுசெய்தேன் அவ்வுத்தமரெனக்கொரு மகாமந்திரத்தினை யுபதேசஞ்செய்து சென்றனர். அம்மகா மந்திரத்தினை யெந்தத் தேவனையுந் தேசித்தேனுஞ் செபித்தாலத் தேவனுடனே தோன்றி புத்திரதானஞ் செய்வானென்று கூறியுள்ளார் உம்முடைய திருத்தினிமித்தம் யானம்மந்திர வழியாகப் புத்திரோற்பத்தியை யுண்டாக்குகிறேனென்று கூறினாள். அம்மொழி கேட்ட வெம்மையன் சாலமகிழ்ந்து அவ்வாறேசெய்யென்றனர் என்னன்னையான குந்தி அம்மந்திர செபத்தால் தருமதேவதையை யழைத்துச் சேர்ந்து தருமனையும் வாயுதேவனையழைத்துச் சேர்ந்து என்னையும் இந்திரனையழைத்துச் சேர்ந்து அருச்சுனனையும் பெற்றனள் மூன்று மக்களைக்கண்டு மகிழ்வுற்ற எந்தை எனது சிற்றன்னைக்கு மந்தமந்திரத்தை யுபதேசிப்பித்தனர் அவள் அசுவினிதேவர்

களை யந்த மந்திரத்தினு லழைத்துப் புணர்ந்து நகுலசகா
தேவர்களை இரட்டைப் பிள்ளைகளாகப் பெற்றனள் இங்ஙு
னம் ஐவர்களைப் பெற்றபின்னை யெந்தை சிலகாலமிருந்து
ஒரு வசந்தகாலத்திற் சாபத்தினை மறந்து சிற்றன்னையுடன்
சேர்ந்து மரணமடைந்தனர் மரணமடைந்த எந்தையுடன்
எமது சிற்றன்னையும் உடன்கட்டையேறி விண்ணுலகெய்
தினள் இறந்த எந்தைக் கிமக்கடனுதியவனைத்தையும் ரிஷிய
சிருங்கரென்னும் முனிவர் எங்களைக்கொண்டு நடத்தி எங்
களை யன்னையுடன் எங்கள் பாட்டனுரான பீஷ்மரிடஞ்
சேர்த்தனர்எங்கள் பெரிய தந்தைக்குத்துரியோதனன்முத
லாக நூறுபேர் பிள்ளைகள் அவர்கள் நூற்றுவர்கள் நாங்க
ளைந்துபேர் எங்களைப் பாண்டவர்களெனவும் அவர்களைக்
கவுரவர்களெனவும் உலகினர் கூறுவர். பாண்டவ கௌர
வர்களான நாங்கள் வெகுகாலம் ஒற்றுமையுடன் வாழ்ந்
தோம் எங்களிலொருவனுன தருமனை இளவரசனுக வெங்
கள் பாட்டன் செய்தது காரணமாக விரோத மேற்பட்டுக்
கடைசியாகத் தருமனைத்தனியே காண்டவப்பிரஸ்தமென்
னுமொரு அநாகரீக பூமியிற்சென்று சேர்ந்து வாழும்வண்
ணம் ஏற்பாடாயவண்ணம் அங்குச்சென்று காட்டைத்
திருத்தி நாடாக்கி ஒருபெரிய நகரமமைத்து அதற்கிந்தி
ரப் பிரஸ்தமெனப் பெயரிட்டு மகாராஜாக்களை வென்று
மகாராச சார்வபௌமனுகித் தருமராசன் முடிசூடி யர
சாண்டகாலத்தில் நடத்திய ராஜசூயமென்னும் யாகத்துக்
கழைப்பிக்கப் பட்டுவந்து எங்கள் செல்வப் பொலிவைக்
கண்டு பொறுமையுற்ற துரியோதனன் தன்னூருக்குச்

சென்று துராலோசனை செய்து புதிதாகக்கட்டிய சபா மண்டபத்தின் கிரகப்பிரவேசத்துக் கழைப்பதுபோல எங்களையழைப்பித்து தனது மாமனை சகுனியைக் கொண்டு தருமராசனுடன் மாயச்சூதாடுவித்து ஆடிய சூதின்வழி நாடுநகரங்களைக் கைப்பற்றிக் கடைசியாகப் பன்னிரண்டு வருஷம் வனவாசமும் ஒருவருஷம் அக்கியாதவாசமுஞ் செய்து வந்தாற் பழையபடி நாடுநகரங்களைக் கொடுத்துவிடும்படி பொதுஜன முன்னிலையி லேற்பாடு செய்தபடி நாங்கள் நாடுநகரங்களை எதிரிகள்வசம் விடுத்து எங்களைவராலும் மணந்து கொள்ளப்பட்ட திரௌபதியென்னும் மாதுடன் வனவாசிகளாக இருக்கின்றோம் நாங்கள் வாசஞ் செய்யும் வனத்தினடுவே செல்லும் ஆற்றுநீரிலொரு புதிய வலரினைக்கண்ட திரௌபதி யதனைத் தேடித் தருமா... கேட்டுக்கொண்டனள் அவள் விருப்பத்தை நிறைவேற்ற இவ்வழியே வநதேன் வந்தவிடத்தில் நின்வாலினலித்தனை நாழிகை இங்குநின்றுவிட்டேன் வாலினைவிலக்கி யெனக்கு வழிவிடுவதுடன் நினது வரலாற்றினையுங் கேட்க விரும்புகின்றேனென்று நிதானமாகக் கூறினன். இம்மொழிகளைக் கேட்ட ஆஞ்சனேயர் வீமனைச் சகோதரனென் றுணர்ந்து புன்முறுவலுடன் நின்னால் முன்னம் ஆஞ்சனேயனென ஒருவன் பெயர்கூறக் கேட்டேன் வாயுதேவ குமாரனாதலால் நினக்குத் தமையனுமாகின்றான் அவனை ஒருமுறை காணவேண்டு மென்று நினக்கும் விருப்பமிருக்கலாம் அவனேயான் என்று கூறினர். இம்மொழிகேட்ட வீமன் அச்சத்துடனும் அடக்கத்துடனும் அடிபணிந்து அடி

யேன் தேவரீரை யறியாது கூறிய குறைமொழிகளைப் பொறுத்தருள வேண்டுகின்றேன் சங்கரன்வாழும் கைலை யையெடுத்த அசுரவீரனுடைய மார்பிற்குத்தி யவனைமூர்ச் சிக்கச்செய்த திருவுருவம் இவ்வாறுதானா இருக்குமென் றையுறுகின்றேன் என்றான் அம்மொழிகேட்ட ஆஞ்சனே யர் நின்னையத்தினை யகற்றுகின்றேனென்று நக்ஷத்திரமண் டலமானது இடையணியாக விளங்கப் பேருருவங்கொண்டு நிமிர்ந்தனர் அதுகண்ட வீமசேனன் அஞ்சி அடிமலரைப் பிடித்துப் போதும் போதுமென்று கெஞ்சினான் உடனே அவ்வுருவினைக் குறுக்கிச் சிறிய வுருவுடனிருந்து வீமனை விருப்பாரத்தழுவி என்னிளையோய் நினக்கென்னா லாக வேண்டுவதென்னை என்றனர் அதுகேட்ட வீமனவரடிகளை வணங்கிப் பாரதயுத்த நடக்குங்காலத்தில் என்னிளையவ னான அருச்சுனனுடைய கொடியாடையி லுண்மையாக எழுந்தருளி விளையாடக் கேட்டுக் கொள்ளுகின்றேன். நான் கருதிவந்த காரிய நிறைவேறுமாறு கருணைசெய்ய வேண்டும் என்று கூறிவணங்கினான் அவரும் அவ்வாறே யாகுகவென்று வரமளித்துக் குபேரநகரமான அளகாபுரி யிலுள்ள நந்தவனத்திலுள்ள மந்தாரமலரே நீ தேடிச் செல்லும் புஷ்பம் இவ்வழியேசென்று லதனைப் பெறுவா யென்று கூறிவாழ்த்தி யனுப்பினார். வீமனுமடிபணிந்து அளகை நோக்கிச் சென்றான் இதனை,

அம்முனிவன் மொழிப்படியே வரம்பில்கேள்வி
யறன்மகனுந் தம்பியரு மரிவையோடு
மெம்முகமுந் தம்முகமா யிலையுங்காயு மினியக்னி
யுடனருந்தி யிருக்கு நாளின்

மைம்முகில்வா கனன்கனக முடிமேலம்பொன்
மலரொன்று தழன் மயின் முன்வீழச்
செம்மலரைச் செங்கண்மலர் தன்னோக்கிச்
செய்யமலர் கரத்தேந்திச் சிந்தித்தாளே.

இந்தமலருலகனைத்து மீன்றகோல வெழின்மலரோ விரவிதிருக் கரத்தில்வைகு
மந்தமலரோவமுதிற் பிறந்தபாவை யமர்ந்துறையு மணிமலரோ வவனிதன்னி
லெந்தமலருங்கருகக் கமழாநின்ற தெங்குமி தன்மணமே யென்றுபோற்றிக்
கந்தவகன்மைந்தனுக்குக் கனலோனல்குங்கனங்குழைசென்றுவகை யுடன்காட்டிச்சொல்வாள்.

இம்மலருக்கொருமலரு மவனிதன்னி லெதிரில்லை யென்றிதழா யிரத்தின்மிக்க
வம்மலரைக்கைம்மலரிற்கொடுத்தீதொக்கு மணிமலர்நீயெனக்கருள வேண்டுமென்னச்
செம்மலையிற் றிகழ்சிகரத் திண்டோள்வீமன் றெய்வமுனிப்புங்க வன்றன்திருத்தாள்போற்றி
மெய்ம்மலரைத் திருமுன்பு வைத்துநின்று வினவினா னனுமெதிர் விளம்பினானே.

என்பலவுமியாமுரைப்ப திந்தப்பூவி னியல்பினையும் பெருமையையு மியக்கர்தங்கள்
மன்பதியிலுளதன்றி வரம்பிலாத வானுலகி லுளதென்னின் மற்றுமுண்டோ

உன்பிறருக் கிதுகோடற் கெளிதோமாய னும்பர்பதி
புகுந்தொருவைந்தோகைக்கீந்த
பின்பதனைக்கண்டறிவா ரில்லையென்று பேசினன் யாவரோடும்
பேச்சிலாதான்.

இயக்கர்பதி தனிலுளதென் றிசைத்தமாற்ற மின்புறக்கேட்
டொருகாலுமீறிலாத
வயக்கொடுவெஞ் சராசனமும் வன்போர்வாகை மறத்தண்டுங்
கரத்தேந்திமடந்தைநெஞ்சிற்
றுயக்கமற விக்கணத்திற் றெய்வபோகச் சுரபிமலரளித்திடுவ
னென்றுசொல்லிச்
சயக்காட முறுதறுகட் சயிலமன்ன சதாகதிமைந்தனு
மிமைப்பிற்றனிசென்றானே.

கைக்காற்றுந் தொடைக்காற்று மூச்சுக்காற்றுங்
கனகமணி வரைபோல கவின்கொள்சோதி
மெய்க்காற்றும் பரந்தெழுந்து வனத்திலுள்ள
வெற்புநெடுந் தருவனைத்து மொடிந்துவீழ
வெக்காற்று முடன்றெழுந்த வுகாந்தகால மெனச்சென்று
னிளவனைக ளெண்ணில் கோடி
செய்க்காற்றுஞ் செழுந்தரள நிலவுவீசச் சேதாம்பல்
பகன்மலருஞ் செல்வ நாடன்.

இலங்கைநகர் தன்னில்விற லிராமதூத னிகலரக்கன்
சோலையெலா மிறுத்த வாபோ
னிலங்குலுங்க வரைகுலுங்க வனத்தி லுள்ள
நெடுந்தருக்கள் யாவையும்வே ருடனேராக்கி

விலங்கினொடு புள்ளினமு மடையத்தாக்கி மெய்ந்நடுங்கித்
தடுமாறி வெம்பியுள்ளங்
கலங்கிவிழக் கனமதிர்வ போலவார்த்துக் காஞ்சனப்பே
ரெழில்வனமுங் கடந்திட்டானே.

அவ்வனத்தை யிகந்தநந்த காதமேகி யங்கிடைவிட்டுத்
தரத்தி னப்பாலேகி
மெய்வனப்பு மடல்வலியு மிகுத்த வாகை
வீமனெனும் பேர்திசையில் விளங்கும்வீமன்
மைவனப்பி னுடன்பணியுஞ் சினைக்கைவாச மலர்ப்பொழிலி
னொருமருங்கே மத்தமாவின்
கைவனப்புந் தழைசெவியு மருப்புஞ்சேரக் கவினளிக்குங
குலைக்கதலிக் காடுகண்டான்.

அக்கதலி வனந்தனக்குக் காவலாகு மடலரக்கரனேகருட
னடுபோர்செய்து
மிக்கதலங் குருதியினால் வெள்ளமாக்கி வெகுண்டவர்தம்
மாவியையும் விண்ணிலேற்றித்
திக்கதல முதலாமெவ் வுலகுமேங்கச் சிங்கநாதமுஞ்செய்தான்
செய்தகாலை
புக்கதலைமணியுரக ராசர்க்கென் றுலும்பர் படிந்துயர
மெம்மாலுரைக்கலாமோ.

வரைகலங்க வனங்கலங்கக் கலங்குறாத மண்கலங்கவிண்கலங்க
மகரமுந்நீர்த்
திரைகலங்கத் திசைகலங்க வீறிலாதசெகங்கலங்க வுகங்கலங்கச்
சிந்தைதாயோ

ருரைகலங்கவுளங்கலங்கத் தூளங்கிமெய்யிலூண்கலங்க விலங்கொடு
புள்ளினங்கள்யாவு
நிரைகலங்கவுலகினுயிர் படைத்ததம்மி னிலேகலங்கா தனவுண்டோ
நிகழ்த்தினம்மா,

அந்தவோதை யப்பொழி லிடைத்தவம் புரிந்தருளு
மந்தராசல மனையதோண் மாருதி கேட்டு
விந்தமன்ன திண்புயாசல வீமனுக் கெதிர்போய்
முந்தமற்றவன் வருநெறி யதனிடை முன்னி.

வெற்பிரண்டினில் வேலைமுன் கடந்ததா ணீட்டிப்
பொற்புயாசல மிரண்டையு மிருவரை போக்கி
யற்ப வாழ்வுடை யசுரமாநாக ரழலூட்டுஞ்
சிற்பவாலதி திசையெலாஞ் சென்றுநின் றோங்க.

எம்பிரான்றனக் கொழியவேறி யாவர்க்குந் தெரியாச்
செம்பொன் மாமணிக் குண்டல மிருபுறந்திகழ
விம்பமால்வரை மீதொரு மேருவே யொக்கு
மம்பொன் மால்வரை யிருந்தென விருந்தனனுமான்.

குனைத்தடங் கிரியனைய தோள்கொட்டி யார்த்துரப்பி
நகைத்துநாகமு நடுங்கிட நடந்தன னடந்து
மிகைத்த வாளரி போல்வருவீமன் முன்கண்டு
திகைத்து நின்றனன் மறமையுந்திறமையு முடையான்.

அண்டர்தானவ ரரக்கரு மனுகொணு வனத்தி
லெண்டிசாமுக மெங்கணு மிரிந்திட வார்த்து
மண்டி மேல்வரு மானுடனூரடா வென்றான்,
சண்டவாயுவின் றனையனை மற்றவன் றமையன்.

என்றடல்வீம னிசைத்திடு முன்ன
மொன்றியிவ் வேழுலகங்களு மொன்று
மன்றுளதாள்புனை வாமன னைப்போ
னின்றுநிமிர்ந்தன னித்தரு முள்ளான்.

படியினதெல்லை பதத்தின தெல்லை
மடியின தெல்லையவ் வானினதெல்லை
அடியின தெல்லை யளப்பரி தென்றன்
முடியின தெல்லை மொழிந்திட லாமோ.

இந்திரசால மியற்றி னரைப்போன்
மைந்தொடு தொல்லையில் வடிவுகொள் பொழுதத்
தந்தமிலாயடி யேன்பிழை யெல்லாம்
புந்தியுறாது பொறுத்தரு ளென்றான்.

என்பனவாதிகளா லுணர்க.

---

௩௩ - வது.

# சரசேதுத்வம்ச பராக்கிரமம்.

---

திருந்தெழி லமரர்நாட்டைச் சீயெனவெறுத்து விண்ணோர்
பொருந்திநா டோறும்போற்றும் பொலிவுறு சேதுப்பாங்கர்
விருந்தென வெய்திநின்ற விசயன்றன் செருக்குமாள
வருஞ்சர வணையைமாய்த்த வனுமன தடிகள்போற்றி.

(இ-ள்.) திருத்தமான வழகிய தேவருலகத்தினைச் சீ யிஃதெவ்வளவு என்று வெறுப்புற்றூராய்த் தேவர்கள் வந்துதங்கியெப்பொழுதும் துதிக்கின்ற வளம்பலவமைந்த சேதுவினருகில் விருந்தினனைப்போல வந்துநின்ற விசய னென்பானது கருவமடங்கும் வண்ணம் அவனமைத்த சர சேதுவினை யழித்த ஸ்ரீ ஆஞ்சநேயரது திருவடிகளைத் தொழுவோமாக, எ-று.

## விவரம்.

பாண்டவருள் நடுவேனாகிய அருச்சுனனென்னு மரசன் சாரதியாலோட்டப்பட்ட தேருடன் வனத்தில் பற் பலவிடங்களில் மிருகங்களை அம்புகளால் அழித்து வன வாசிகளுக்கு இதத்தை யுண்டாக்கினவனாய் ஒருதினம் நல்ல உச்சிப்போதிற் சேதுவென்னும் பெயரமைந்த புண் ணிய பூமியையடைந்து மாத்தியானிக நடத்திக் கடலில் மற்றைய விடம்போல அலைமுதலிய வில்லாதிருக்கும் அழ கினைக்கண்டு மகிழ்வுற்றிருந்தனன்.

அக்காலத்தில் அவ்விடத்தில் ஸ்ரீ ஆஞ்சனேயர் ஒரு பிரமசாரி யுருவுடனெய்திச் சேதுவை வணங்கி யுச்சிக் கடன் முடித்து அருச்சுனனைப் பார்த்து யாவனென வினவிப் பின்னர் ஸ்ரீராமசரித மாரம்பித்து அவர் சேதுவினை நூறுயோசனை யளவினதாகக் கட்டி ராவணசங்காரஞ் செய்ததனை எடுத்துக் கூறியிருந்தனர். அம்மொழிகளைக் கேட்ட அருச்சுனன் மிகுந்த அகம்பாவத்துடன் ஐயோ பாவம் ராமச்சந்திரர் ஏனிவ்வளவு கஷ்டப்பட்டு சேது கட்டினார் இக்கரையிலுள்ளவர்களை அக்கரைசேர்ப்பதற்கு மலைகளைக் கொண்டுதானு சேதுகட்டவேண்டும் அம்பினுலேயே சேதுகட்டலாமே அஃதிருக்கட்டும் நும்மையின்னுரென்றறிய விரும்புகிறேன் என்றனன் உடனே யாஞ்சனேயர் தம்மை யின்னவரென்று கூறிச் சரத்தாற்கட்டும் சேதுவானது போர்வீரர்களைப் பொறுத்து நிற்குமோ என்றனர் அதற்கு அருச்சுனன் யானிப்போதே சரத்தாலணைகட்டுகின்றேன் அதனில் நீர் ஏறியாடி யோடிப்பாரும் நும்மால் எனதுசரசேது அழியுமானல் யானுயிருடனிரேன் எனது வில்லுடன் தீயில்விழுந்து சாகின்றேன் நீரிச்சேதுவினை யழியாவிடினேவென்ன மாருதியான் நீகட்டுஞ்சரவணையை அழியேனேல் எனது வீரத்தையிழந்து நினக்குக் கொடியாகி யுனது சகாயத்தை விரும்புகின்றேன் என்றனர் உடனேபார்த்தன் சரசேதுகட்டினுன் ஆஞ்சனேயர் அந்த அம்பணையைத் தமது கைவிரலினுலமுத்தி மடமடவென வொடித்தெறிந்தனர் அதனைக்கண்டு வெட்கிய வர்ச்சுனன் பொருட்டு ஸ்ரீகிருஷ்ணபகவான் அங்குத் தோன்றி மற்

ரொருமுறையுஞ் சரஸேது கட்டச்செய்து இருவருக்குந் தெரியாது தாம் அடியினின்று தாங்கி அருச்சுனனை ரட்சித்து நீ மாருதியோடு பகைக்கலாகுமோ என்று ஆஞ்சனேயர் பிரதாபங்களை அருச்சுனனுக் குணர்த்தி அவனெஞ்சைத்தேற்றி அருச்சுனன் பகைவரோடு பொருங்காலத்து அவன் கொடியாடையில் விளங்கி அவனுக்கு வெற்றி கொடுக்குமாறுஞ் செய்வித்தனர் பகவானேவரு திவ்வாறு செய்த அதனால் தனது அகம்பாவமொழிந்த அருச்சுனன் ஆஞ்சனேயரை வணங்கிப் புகழ்ந்தனன். இதனை,

யத்ப்ரதாபக்ஸராமேண சிலாபி:சதயோஜனம்
பத்தோயதிஸாகரேஸேது ஸ்தம்மாம்த்வம்வித்திவாயுஜம்
வ்ருதாராமேண ஸேத்வர்த்தம் ச்ரமபூர்வம்க்ருதத்ஸ்வயம்
கதம்தேனசரஸேதும்க்ருத்வா காரயம்க்ருதாநஹி
அதுநாஹம்கரிஷ்யாமி சரஸேதும்தவாக்ரத:
த்வம்தஸ்யோபரிநிர்த்யாஹி குருஷ்வாத்ரயதாஸுகம்
யதிமக்ன:சரஸேதுஸ்தத் பார்த்தாஹ்யஹம்கவே
விசாம்யத்ரானலம்ஸத்யம் தசாப்க்வணம்வத
மயால்த்வாம்குஷ்டபாரெணத் வத்சே ச்சென்னலோபித:
தர்ஹித்வத்த்வஜலம் ஸ்தோஹம் தவஸாஹாய்யம்மாசரே
நிர்மமேசரஸமஜாலை: ஸேதும்த்ருடதரம்கஞ
தம்ஸேதும்மாருதிம்த்ருஷ்ட் வார்ஜ்ஜுனக்ரேங்குஷ்டபாரத:
அகரோத்ஸாகரேமக்னம் க்ஷணமாத்ரேணலீலயா.

என்பனவாதிகளா லுணர்க.

---

ℏ௪-வது.

# தும்புரு நாரத கருவபங்க பராக்கிரமம்.

---

*அம்புதிசூழுலகத்தி லிசையின்மிக்கா ராருமெமக் கிணையின்றென் றகங்கைகாங்கி*
*வெம்புமனத் துடன்கலாம் விளைத்துச்சீறி வீணையுடனருகெய்தி வீறியோரர்*
*செம்பதும நிகர்முகத்தாய் நின்னையன்றித் தெரிபவராரெமதுதிற மென்னநின்ற*
*தும்புருநா ரதர்செருக்கை யிசையின்மாய்த்த தூயவெழிலனுமனடி தொழுதுவாழ்வாம்.*

(இ-ள்.) கடல்சூழ்ந்தவுலகத்தில் இசையில் வல்லவர்கள் எம்மிலுயர்ந்தா ரெவருமிலரெனச் செருக்கெய்தி ஒருவரொடொருவர் கலாய்த்துச்சீறி வீணையுடன் தமதருகிலெய்தி யிறுமாப்புடன் அழகுமிக்க செவ்வியதாமரையலர் போன்ற முகத்தினையுடையாய் நின்னையன்றி யெமதுதிறந் தெரிந்துரைப்பா ரெவரெனநின்ற தும்புருநாரதர்களின் செருக்கை யிசைபாடி மாய்த்த தூயவழகிய வாஞ்சனேயரது திருவடிமலர்களைத் தொழுது வாழ்வோமாக, எ-று.

## விவரம்.

உபவேதங்களி லொன்றாய் விளங்கும் கந்தருவ வித்தையின் மிக்க வாற்றல்பெற்ற தும்புருவும் நாரதனும் ஒரு காலத்தில் இசைநூலின் முழுஅறிவும் யானே உடையேன்

பாமனை உடையோன் என்று செருக்குமீறி யொருவரையொருவர் மதியாராகி நம்மிருவரி லுயர்ந்தவன் இன்னவனென்றுகூறவல்லவன் சூரியசிஷ்யனான ஆஞ்சனேயனே தக்கவனென இருவருமாகத் தீர்மானித்து ஆஞ்சனேயரிருக்குமிடத்திற் சென்று தங்கள் வரலாற்றையுரைத்து இருவரிசை வன்மையையுமளந்து கூறுமாறு கூறினார்கள் இவர் வாய்மொழி கேட்ட ஆஞ்சனேயர் புன்னகையுடன் வீணையினை யொருகற் பாறைமீது வைத்திசையை மிழற்றினர் உடனே கல்லானது நன்றாயுருகியது உருகிய கற்சிலையுள் வீணையை யழுத்திவைத்தனர் சிறிது நேரத்துட் கல்லிறுகியது உடனே அவர்களைப் பார்த்து இசைநூல்வல்லீர் இவ்வீணையை நும்பாடல் வன்மையால் எடுமி னென்றனர் உடனே இருவரும்பாடினர் கல் உருகிற்றிலது என்செய்வர் நனி நாணமுற்றனராகி ஆஞ்சனேயரே நீவிர்பாடி வீணையை இளக்கிக்காட்ட வேண்டுகின்றோமென மீட்டும் இசைபாடினர் கருங்கல் உருகியது வீணையை எடுத்து வெளியில் வைத்தனர் இதனைக் கண்ட தும்புருநாரதர்கள் தஞ்செருக்கடங்கி வாளாபோயினர். இதனை,

தூகை நெடுங்கிரியின்கண் முரண்படு தும்புரு நாரதனோர்
சொல்லிய வீணையின் வல்லப மோதினர் சொல்லை யடைந்திடுநாள்
அங்கிசை பொங்க நயங்கொடு பாடி நெகிழ்ந்த கருங்கலிலே
அமய விருத்திய சமயமு மக்கிசை யாலிரு வீணையுநீர்
இங்கெடு மென்ன மயங்கினர் பாடி யெடுத்திடு மாறிலராய்
எங்கை பகர்ந்தது சிந்தை யகந்தை யிரங்கென வாயிடையோர்
தங்கிசை பாடி வீணை யளித்தவ தாலோ தாலேலோ
தரைபுகழ் திரிநேத்திரமுள மாருதி தாலோ தாலேலோ.

என்னுமிது போல்வனவற்றா லுணர்க.

௱ரு - வது.

# கருடகர்வபங்க பராக்கிரமம்.

---

திக்கிலா ரிணையெற்கென்னச் செருக்கடைந் திருந்தவந்தப்
பக்கிரா யகனைவாட்டிப் பலன்செருக் கினையுமோட்டி
நக்கிவா லதிவிண்மேசை நனிதுடைத் திலங்கநின்ற
பொக்கிலா வனுமன்செய்ய பூங்கழ லடிகள்போற்றி.

(இ-ள்.) எட்டுத்திக்கிலும் எனக்கிணையானவரெவரு மிலரென்று செருக்குற்றிருந்த வந்தப் பட்சிராஜனை கெருடனது கெருவத்தைப் பங்கஞ்செய்தவரும் பலராம னுடைய அகந்தை யொழித்தவரும் விண்ணிற் படிந்து தூசினைத் துடைப்பதுபோல வாலசைந்து விளங்கநின்ற குற்றமற்ற வாஞ்சனேயரது செவ்விய தாமரை மலரை யொத்த கழலணிந்த திருவடிகட்கு நமஸ்காரம், எ-று.

## விவரம்.

ஒருதினம் பலராமன் அகம்பாவத்தால் மூடப்பெற் றுக் கிருஷ்ணபகவானைப்பார்த்து எனக்கிணையாக வெவரு மிலரென மிகப்புகழ்ந்து கூறிச் செருக்கியிருந்தனன் மற் றொருதினங் கருடன்வந்து என் புயங்கள் மிகுந்த திணி

வுடையனவாக விருக்கின்றன தங்கள் பகையாளர் எவ ரேனுமிருந்தா லவர்களொடு பொருது என் றேறுட்டினைமை நீக்கிக்கொள்ளுவேனென்று செருக்கிக்கூறினன். அதற்கு ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி இப்பொழுது பகைவ ரெவருமிலர் பகைவர் வருங்காலத்தி லுன்னை யழைப்பிக்கின்றே னென் றனர் உடனே கருடன் விடைபெற்றுச் சென்றனன் பின் னர்க் கண்ணபிரான் இவ்விருவருக்கு முண்டாயுள்ள கர் வத்தை யனுமாரைக் கொண்டடக்கக் கருதி நாரதரை யழைப்பித்து உபாயமாக ஆஞ்சனேயரை இங்கே யழைத் துக்கொண்டு வரவேண்டுமென வவரும் அதற்கிணங்கிச் சென்று ஆஞ்சனேயரைக் கண்டு இதவசனங்கூறி தீர்த்த யாத்திரையாக மகாசமுத்திரக் கரையையடைய வக்கட னடுவண் சொர்ணமயமான கோபுராதிகளோடு கூடின நகரமொன்றைக் கண்டு இலங்கையிலுஞ் சிறந்ததாகக் கடனடுவண் விளங்கும் இந்நகரம் யாதென நாரதரை யனு மார்கேட்க அவர் இது துவாரகை இதன் அரசன் பலராம னென்றனர்

அதனைக்கேட்ட ஆஞ்சனேயர் மிகுந்த கோபத்து டன் எங்கள் ராமன் வெறுராமன் இவன் பலராமனா இவ னுடைய பெலத்தை யானளந்து விடுகிறேன் பலவென்னு மிரண்டெழுத்தை யெடுத்துவிட்டால் சும்மாவிடுவேன் என்று கூறினார். இதுகேட்ட நாரதர் நான்சென்று இந்த விஷயத்தை அந்தப் பலராமனிடம் உரைத்தவ னபிப்பிரா யம் அறிந்து வருகின்றேனென்று துவாரகையையடைந்து

ஆஞ்சனேயருடைய அபிப்பிராயத்தினை யுரைத்தலும் பல
ராமனதிக கோபத்துடன் சதுரங்க சைனியங்களுடன்
போர்க்கோலங்கொண்டு சாத்தகியுடன் சமுத்திரதீரத்தை
யடைந்து ஆஞ்சனேயரை மதியாது பொருது அவர்
வாலிற் கட்டுண்டு சமுத்திர நடுவனுள்ள ஒரு பாறையி
லுதறிவிழுந்து கருவமொழிந்து மெல்லென வெழுந்து
துவாரகை யடைந்து ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியிடம் ஆஞ்ச
னேயரால் தானடைந்த அபசயத்தை யுரைக்கவவர் யான்
அவ்வாஞ்சனேயரை யழைத்து உமது நண்பராகச் செய்து
வைக்கின்றேனென்று கூறிப் பலராமரை அந்தப்புரத்துக்
கனுப்பிப் பின் கருடனை நினைத்தனர் உடனே கருடன்
விரைவாக வங்குத்தோன்றி வணங்க நீகெடற்கரையில் வந்தி
ருக்கும் ஆஞ்சனேயனை இங்கே அழைத்துவருதி யென்ன
மஹா கருவத்துடன் அதிவிரைவாக ஆஞ்சனேயரிடம்
வந்து மரியாதையின்றி அடா குரங்கே என்னுடன் வாடா
வென்றழைக்க அதனாலிருவருக்கும் பெரும்போருண்டா
கிக் கருடனை யாஞ்சனேயர் நன்றாயுதைத்து மரணமூர்ச்
சையடையும்படி செய்தனர் கருடனங்கு நின்றும் துவா
ரகையடைந்து பகவானை வணங்கிப் பணிவுடன் ஆஞ்ச
னேயரது பராக்கிரமத்தினை யுரைத்துத் தன்கருவமடங்கி
நிற்றலும் கருடனே நின் தோளிலுண்டாயிருந்த தினவு
ஒழிந்ததோ நீயனுமானை மரியாதையுடன் அழைத்திருந்
தால் வந்தேயிருப்பான் இன்னொருமுறை சென்று ஜானகீ
ஸமேத ராமச்சந்திரர் அழைக்கின்றாரெனப் பணிவுடன்
சொல் வருவானென்ன அவ்வண்ணமே கருடன் அனுமாரை

யழைத்துவரச் சென்றவுடன் தான் ஸ்ரீராமனுக்குந் தனக்கு மிஞ்சிய கற்பினரில்லையென விருந்த சத்தியபாமையை யழைத்து கற்பிற்சிறந்தவளை யான் தசரதராமனாக வுருக் கொண்டு நிற்கின்றேன் நீ சனகபுத்திரியின் உருவந்தாங்கி வருவாயாகவெனச் சீதாபிராட்டியின் உருவினையுடைய வாற்றலற்று சத்தியபாமை த[illegible]மடங்கிய பின்னர் ருக்மணி தேவியைச் சீதாபிராட்டியாக வரச்செய்து கொலு மண்டபத்திலிருந்தனர் கருடனால் மரியாதையாக வழைக்கப்பெற்றதனால் [illegible]மடைந்து ஆஞ்சநேயர் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியையுஞ் சீதாபிராட்டியையும் வணங்கி மகிழ்ந்தனர். கருவமொழிந்த கருடனும் ஆஞ்சநேயருடைய பராக்கிரமத்தை மெச்சித் தன்னிடஞ் சென்றனன் இதன் விரிவினைக் கருடகருவபங்க முதலிய நூல்களிற் காண்க.



௫௯-வது.

# ஜலபான பராக்கிரமம்.

---

இன்னருள் சுரத்திடுமெனறு விரதத்தவர்க் கனுகூலிக்கத்
தன்னருட் டேவைவேண்டு சசவந்தன் றனக்காய்வேத
முன்னவன் மொழியின் வண்ணம் மூரிநீர்த்தபதிதன்னை
தன்னகட் டடக்கிவிட்ட தயாநிதி சரணம்போற்றி

(இ-ள்) இனிய அருளைச் சுரப்பாயாகவென்று கேட்டிரந்தவரின் பொருட்டு அநுகூலஞ்செய்யும் வண்ணம் தமது இஷ்டதெய்வமான ஸ்ரீராமசந்திர மூர்த்தியை இரந்து வேண்டிய சசுவந்தர்பொருட்டு தாரகநாதனைக்கிணைப்படி பிரவாகமாகவந்த வாற்றுவெள்ளத்தினைப் பானஞ் செய்துப் பின்னர் வெளியில்விடுத்த கிருபைக் கடற்பிடமான ஆஞ்சநேயரது திருவடிகட்கு நமஸ்காரம், எ-று.

## விவரம்.

வடதேயத்தில் தபதிநதிக்கரையிலுள்ள வளம்பொருந்திய பேரடாவில் அந்தணர் குலதிலகராய் ஸ்ரீராமநாம ஸ்மரணை செய்வதிற் குறையாதவராய் ஜஸவந்தரென்னு மொருவர் பாகவதோத்தமராயிருந்தார் இவர் தாமின்புறுதலை பிறரின்புறவதெனக் கருதும் கருத்தினராதலால் தம்மோடு பழகுமனைவரையும் ஸ்ரீராமபக்தியிலீடுபடும்படிசெய்தனர்

இங்ஙனமிவரிருந்த காலத்தி லிவரிருக்கு மூருக்குக் கருகிலுள்ளதபதிநதியில் பெருவெள்ளமுண்டாகி அதினல் ஊர் அழியுநிலைமையதாகக் கண்ட ஜனங்கள் இதனைத் தெய்வந்தான் தடுக்கவேண்டும் இங்கே தெய்வகடாக்ஷ முடையவராக ஜஸவந்தர் இருக்கிறார் அவரிடஞ் செல் வோமெனஊரினரனைவரும ஒருங்குதிரண்டுசென்று ஜஸ வந்தரை நோக்கி ஐயா ராமதாசரே நீர் ராமநாம ஸ்மரணை யிலிருக்கிறீர் ஊரோ வெள்ளத்தா லழியப்போகிறது ராம பிரானது கருணையையுடைய நீர் இந்த ஆற்றுவெள்ளத்தா

ஓராழியாத வண்மை செய்யவேண்டும் நாங்களெல்லாம் மிகவும் பயப்படுகின்றோம் ராமநாமஸ்மரணை செய்பவர்களுக்குத் தீங்குநேரிடாது தாங்கள் சொல்லுவதை நம்பி நாங்கள் இருக்கின்றோம் தயவுசெய்யுமென்று ஊர் ஜனங்களனைவருமாக உரைப்பதைக் கேட்ட ஜஸவந்தர் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியை யுத்தேசித்து ஜகதீசா! ஜானகிரமணா தாசரதே என்னை யிவ்வூர்ச்சனங்களை அவமதிக்காதவண்ணம் வ வாற்றுநீரை மிதப்படுத்தி ரக்ஷிக்கவேண்டுமென்று பகவச் சரணாரவிந்தத்தில் வீடுபட்டவராய் நின்றனர். அப்பொழுது அசரீரியானது தாஸ! அஞ்சற்க ஆஞ்சனேயர் இந்தப் பிரவாகநீரைப் பானஞ்செய்து நதியின் கோபத்தை யடக்குவார் அவரது விக்கிரகமொன்றை ஆற்றுவெள்ளத்தினெதிரேகொண்டு வையுங்களென்றுகூறியது அதுகேட்ட ஜஸவந்தர் ஜனங்களைப் பார்த்து நண்பர்களே எம்பெருமான் ஒரு ஆஞ்சனேயர் திருவுருவை ஆற்றுவெள்ளத்தினெதிரே வைக்க உத்தரவளித்தனர் என்றனர் ஜனங்கள் உடனே ஒரு ஆஞ்சனேயர் விக்கிரகத்தை ஆற்றுநீருக் கெதிரே வைத்தனர் உடனேராமபிரானது ஆணையை நிறைவேற்றும ஆஞ்சனேயர் அங்குத் தோன்றிப் பெருகுவுட ஆற்றுநீரினெதிரே நின்று பிரவாக ஜலமனைத்தையும் வற்றக்குடித்தருளினர் இவ்வற்புதச் செயலினைக்கண்ட சனங்கள் ஆச்சரியமடைந்தார்கள்.

நான்குநாட்கள் கழித்துச் சில துன்மதிகள் இந்த உண்மையையறியாது விக்கிரகம் நீரருந்துமோவென்று பரிகாசஞ் செய்தவுடனே அர்ச்சாரூபியான ஆஞ்சனேயர் நாபியின்வழிநீரைக் கீழ்விடக்கண்ட அனைவருநடுங்கி ஆஞ்சனேயரைப் பிரார்த்தித்து ஜஸவந்தனைத்துதிக்க வெள்ளம்நின்றது இது கலியுக பராக்கிரமங்களிலொன்று இதன் விரிவை பக்தலீலாமிருதி கிரந்தங்களிற் காண்க.

## ௯௭ - வது.

# யவனராஜ கருவபங்க பராக்கிரமம்.

---

*நகுமலர்ப் பொகுட்டுமேய நான்முகன் முதலதேவர்*
*செகுமல மென்னவாழ்த்துஞ் சீதரற் கடியன்மாட்டு*
*புகுமிட ரகலப்பதற்பல் புத்துருவெய்தித்தில்லி*
*யகுபரை யடக்கியாண்ட வள்ளறூ ளகத்துள்வைப்பாம்.*

(இ-ள்.) விளங்காநின்ற தாமரைமலரி னடுவிலிருக்கின்ற பிரமன்முதலிய தேவர்கள் எங்களுக்கு ஞானங்களைமொழி யென்று துதித்து வாழ்த்துகின்ற திருமகள் மணாளனுக் கடியவராய் விளங்கிய துளசிதாசரிட முண்டான காவற் றுன்பமொழிய அனேகமான புதியபுதிய வுருவத்துடன் தோன்றி தில்லியிலிருந் திங்காடாண்ட அகுபரென்றும் யவனராசனை யடக்கியாண்ட சுவாமியான ஆஞ்சனேயரது திருவடித்தாமரைகளை இருதயகமலத்தில் வைத்துத் துதிப் போமாக, எ-று.

## விவரம்.

அஸ்தினபுரியிற் பிராமணகுலத்தில் பிறந்து கல்வியறி வொழுக்கங்களி லுயர்ந்திருந்த ஆத்மராமன் என்னும் அந்தணர் புதல்வனாய் துளசிதாசன் என்னும் பிரசித்த நாமந்தாங்கிய ஸ்ரீராம பக்தரானவர் காசிதேசத்திலிருந்த காலத்துப் பகவத் கடாக்ஷத்தால் நடந்த சில அற்புதச் செயல்களால் பெருமையுள்ள தில்லியிலிருந்த யவனராஜ னை அகுபர் என்பவன் காசியினின்றும் இவரைத் தில்லிக் கழைப்பித்து நீர் இறந்தபுருஷனை எழுப்பிக் கொடுத்தல் முதலிய காரியங்களைச் செய்திராமே அவ்வாறெந்த ஆதா ரத்தைக்கொண்டு செய்தீரென்று கேட்டான் அதற்குத் துளசிதாசர், அரசனே ஜகத்ஸ்வாமியான ஸ்ரீராமபத்திர மூர்த்தியின் தயவினால் செய்தேன் என்றனர் அதுகேட்ட

அகுபர் அந்த ராமபத்திர மூர்த்தியை நான்காண விரும்பு
கின்றேன் எனக்கவரை நீர் காட்டும்வரைக்கு மும்மையிந்
தச் சிறையிலடைக்கின்றேனென்று துளசிதாசரைச் சிறை
யிலடைத்து வைத்தான்.

துளசிதாசர் ஸ்ரீராமமூர்த்தியைத் தியானித்து ஜானகீ
ரமணா கருணாசாகரா யவனராசன் தேவரீரைக் காட்டச்
சொல்லுகின்றானே யானென் செய்வேனென்று அழலி
லிட்ட வெண்ணெய்ப் பாவைபோல உள்ளமுருகத் துதித்
தனர் அதுகேட்ட பக்தபராதீனரான பகவான் அசரீரி
மொழியால் அஞ்சற்க நமதாஞ்சனேயரை நீ தியானஞ்
செய் அவர் அவ்யவனராச னகந்தையை யகற்றுவாரெனக்
கட்டளையிட்டனர் அம்மொழிகேட்ட துளசிதாசர் ஆஞ்ச
னேயரைத் துதித்தனர் அவரிவர் கண்ணெதிரே தோன்றி
ஏனழைத்தனை யென்றனர் துளசிதாசர் ஆஞ்சனேயரடி
மலர்களை வணங்கி அகுபரின் அகந்தையை யடக்கி என்
னைரக்ஷிக்க வேண்டுகின்றேனென்றனர் ஆஞ்சனேயர் அவ்
வாறேயாகுகவென்று கூறிமறைந்து அனேகமாயிரம்பெரிய
வானரவுருவந் தாங்கித் தில்லிநகரத்துட் பிரவேசித்துச்
சனங்களை அச்சுறுத்தியும் மாடகூடகோபுரங்களை யழித்
தும் பல உபத்திரவங்களைச் செய்தகாலத்தில் நகரமாந்தர்
பலவகையாக வானரங்களின் வருகையைத் தடுக்கமுயன்று
கற்கள் தடிகள் முதலியவைகளால் வானரங்களை யடித்த
னர் அவை எதிரிகள் அடித்த கற்களைப்பிடித் தவர்கண்மீ
தெறிந்தும் தடியைப் பிடுங்கியடித்தும் அவர்களைச் சங்க
ரித்தன இதனால் தில்லிநகரத்தில் பெருங்குழப்பமுண்
டாகி யனைவரும் பயமடைந்து ராசாவான அகுபரிடஞ்
சென்று மன்னவனே உலகிலெங்கு முண்டென்று கேள்வி
யுறாத பெருங்குரங்குகள் இந்நகரில் அனேகமாயிரமாகப்
புகுந்து இந்நகரின் பெரும்பாகத்தை யழித்தன இச்செ

யல் துளசிதாசரைச் சிறைப்படுத்தியதா லுண்டாயதெனச் சனங்களிற் பலர் சொல்லிக் கொள்ளுகிறார்கள் என்றனர்.

அவர் வாய்மொழிகேட்ட அகுபர் அரசன் சிறைச் சாலையிலிருந்திய துளசிதாசரை யழைப்பித்து இஃது என்னை இந்நகரி லென்றுமில்லாத புதுமையாகப் பெருங் குரங்குகள்வந்து தொந்தரை செய்கின்றனவே யென்றான்.

அதுகேட்ட துளசிதாசர் சக்கரவர்த்தி திருமகனுரான ஸ்ரீராமபிரான் வானரசேனைகளை யன்றோவுடையவர் அவரை யழைப்பித்துக் காட்டுமாறு உரைத்தனிரன்றோ அவ்வெங்கள் பெருமான் வருவதற்கடையாளமாக வானரங்கள் வரத்தொடங்கின அனேகமாயிரமாகவுள்ள இந்த வானரங்களுக் கஞ்சுகின்றீரே பெருமாள் எழுந்தருளு முன்னம் எழுபதுவெள்ளமென்று கூறுமனேகங் கோடி வானரங்கள் வரவேண்டுமே இப்பொழுது வந்துள்ளவை அவ்வானரகோடியின் மிகவுஞ் சிறியன இனிப்பெரியனவாகிய வானரங்கள் வருமென்று கூறினர்.

அதுகேட்டஅகுபர் உள்ளநெக்கித் தயவுசெய்து இக் குரங்குகளைப் போகச்சொல்லும் எனக்கு ராமனைக் காண வேண்டுமென்றிருந்த விருப்பமொழிந்தது என்றனன் அப்பொழுது துளசிதாசர் ஆனாலென்னை விட்டுவிடுமென்றான் அவனுமவரைச் சிறையினின்றும் விடுத்து உயர்ந்த மரியாதைகளைச் செய்தான் அவரும் ஆஞ்சனேயரை மனதிற் றியானித்து எனதிடுக்கண் ஒழிந்தது தேவரீர் இனிஇந்நகரத்தினை யழிக்கவேண்டாமென்று வேண்டிக்கொண்டனர். அவருமவ்வாறே உருமறைந்துசென்றனர் யவனசக்கரவர்த்தியும் பாகவதரிடம் ஒரு பெருமதிப்புவைத்துச் செருக்கொழிந்திருந்தனன். இதுவுங் கலியுகசரிதம். இதன் வரலாற்றினைப் பக்தவிசய முதலிய நூல்களிற்காண்க.

---

௩௮ - வது

## யவனாலயபேதன பராக்கிரமம்.

---

*ஏதரிசரண மொன்றே எழுவகைப் பிறவிப்பௌவ*
*மோதலை கடந்துமுத்தி முழுக்கரை யேறற்கென்று*
*ஆதரமிகுந்து போற்று மடியரை யலைத்தபொல்லாப்*
*பீதரை யுடையார்பள்ளி பெயர்த்தெறி பெருமபோற்றி.*

(இ-ள்.) எழுவகையான பிறவிக்கடலின் பேரலையிலகப் பட்டுத் தடுமாறுது முத்தியென்னு முழுக்கரையை யடை தற் கேதுவாகவுள்ளது ஸ்ரீஹரி சரணாரவிந்த ஸ்மரணையே யென்று? அன்புமிக்கு ஸ்ரீபகவானைத் துதித்த பாகவதோத் தமரைத் தொந்தரை செய்த பீதர்நகரத் துலுக்கரின் கோரியை யழைத்தவர்களை யடக்கிய சிறந்த பெருமானே உமக்கு நமஸ்காரம, எ-று.

### விவரம்.

உத்தவ சித்தனரென்றொரு பாகவதோத்தமர் தாரக நாம சங்கீர்த்தனம்பாடி யானந்திப்பவராய் தமது நகரான தாரூருக்குச் சிறிது தூரத்திலுள்ள பீதர் என்னுமூரிற் சென் றங்குள்ளாருக் கரிபஜனையில் ருசிவருமாறு ஹரி கதா காலக்ஷேபஞ்செய்து வருநாளிலுண்டான ஸ்ரீராம நவமியுச்சவத்தை யிங்குச் சிறப்பாக நடத்திவருநாளில் ஒருதினம் ஸ்ரீராமமூர்த்தியை யுச்சவமாக ஊர்வலம் வருத லைக்கண்ட துலுக்கர்கள் கோபத்துடன் அவர்களை யுபத் திரவித் துச்சவத்தை நிறுத்தினர் அதனல் தாசர்கள் மனி வருத்தமடைந்தார்கள் உடனே ஆஞ்சனேயர் கடுங்கோபத்

